உ

ஸ்ரீபுரம் என்னும் திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

இரண்டாம் பிரிவு — உத்தராயண லீலைகள்

( 51 முதல் 130 லீலை முடிய )


திருச்சி மாவட்டம் பிக்ஷாண்டார்கோவில் பண்ணையாளர்

ஜீ. இராஜகோபால் பிள்ளையவர்களால்





ஸ்ரீரங்கம்

ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சாபீஸில்

பதிப்பித்து

ஷெயாரால் பிரசுரிக்கப்பெற்றது.






[விலை ரூபாய் 3.

உ

ஸ்ரீபுரம் என்னும் திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

இரண்டாம் பிரிவு — உத்தராயண லீலைகள்

முதற்பாகம்

( 51 முதல் 130 லீலை முடிய )

திருச்சி மாவட்டம் பிக்ஷாண்டார்கோவில் பண்ணையாளர்

ஜீ. இராஜகோபால் பிள்ளையவர்களால்



ஸ்ரீரங்கம்

ஸ்ரீ வாணீ விலாஸ் அச்சாபீஸில்

பதிப்பித்து

அவர்களால் பிரசுரிக்கப்பெற்றது.



விலை ரூ. 3/-

உ

குருபாதம்

தருமபுர ஆதினம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம்,
மாயூரம், P. O.

11—1—1954.

'ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே'

# அணிந்துரை.

---

தியாகராஜ லீலைகள். (உத்தராயண லீலைகள்)

அஜபா நடேசப் பெருமானாகிய செல்வத் தியாகேசப் பெருமானின் உத்தராயண லீலைகளை உரைப்பது இந்நூல். இதனால் இறைவன் மக்களுக்குத் துன்பம் வந்தகாலத்தில் தோன்றாத் துணையாயிருந்து காப்பாற்றுதலும் இறைவன் அருள் துணையிருப்பின் குற்றமே செய்யினும் குணமாகும் பெருமையும், அன்பர்களை அவமதித்ததற்கு இறைவனே அளிக்கும் தண்டனை முறைகளும் இறைவன் அடியார்களுக்காக எதனையும் செய்யப் பின்வாங்கான்—எளியனாயிருப்பன் என்ற நிலையும் அறிவிக்கப்பெறுகின்றன. பசுபுண்ணியங்களைச் செய்கின்ற காலத்து கொடையாளி செருக்கடைவானாயின் அப்புண்ணியம் பயனளியாது என்பதை உணர்த்தவந்த லீலை மிக அழகானது. உலகத்தில் இல்லாமை என்பதை இல்லாமையாக்கக் கண் கொடுத்தும்,

காது கொடுத்தும், வாய் கொடுத்தும், கால் கொடுத்தும் காப்பாற்றிய லீலைகள் இறைவனுடைய எளிவந்த கருணைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகள். புதல்வர் கடமை, மாதர்-ஆடவர் தருமம், வணிகர் இயல்பு, மன்னன் ஆட்சிமுறை, அந்தணரொழுக்கம், வேளாண்மைச் சிறப்பு இவற்றை அறிவிக்கும் நீதி நூலென்றே இதனைச் சொல்லலாம்.

மக்களுக்கு இறைவனிடம் உண்மையன்பு உள்ளத்து உதிக்க வேண்டுமானால் இறைவன் ஆன்மாக்களுக்கு அருளிச்செய்கின்ற கருணைத் திறங்களை உள்ளபடி உணர வேண்டும். உணர்ந்து உருகவேண்டும். உருகி அடியிணையில் இணைய வேண்டும். இணைந்தால் ஆன்மா அஜபையாகிறது. அஜபைதான் செல்வத் தியாகேச திருநடனம். இதனை எல்லோரும் எளிதிற் கண்டு அநுபவிக்கச் செய்வது இந்நூல்.

மகாவித்வான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இந்நூலை முழுதும் பெறச் செய்த முயற்சிகள் பல என்று அறிகிறோம். தியாகராஜ லீலை என்ற தெய்வக்கோட்டையை எழுப்ப அவர்கள் இட்ட அஸ்திவாரத்தின்மேல் அவர்களாலேயே இக்கோட்டை முடிந்திருக்குமாயின் சிறந்தொரு காவியத்தைச் செந்தமிழ்மொழி பெற்றிருக்கும். அத்தவக் குறையை வசன காவியமாக நமது அன்பர் ஸ்ரீமான் பிக்ஷாண்டார் கோயில் பண்ணையார் ராஜகோபால் பிள்ளை அவர்கள் முடித்திருப்பது இறைவன் திருவருட்பெருக்கேயாகும். அறவழி ஈட்டிய செம்பொருளே சிவப்பணிக்கு ஆகும் என்பது சிவாகமத் துணிவு. ஆஸ்திக உலகம் இந்நூலைப்பெற்று இருமைப் பயனையும் எய்துக. அனைவர்க்கும் திருவருளால் நலம் பெருகுக.

---

உ

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

(இரண்டாம் பிரிவு)

உத்தராயண லீலை

முதற் பாகம் 51—130 லீலைகள்

## பொருளடக்கம்.



சுபம்,

# FOREWORD

I am grateful to Sri Rajagopal Pillai of Bhikshandarkoil for his asking me to write a foreword to this second part of his valuable publication of the Leelas *(Divine Sports of Mercy and Uplift and Salvation)* of Sri Tyāgarājaswāmi of Tiruvārūr. This volume contains 80 leelas while the volume already published contained fifty leelas.

The special glory of the Hindu theory of incarnation is that it affirms that God Himself incarnates among His creatures to establish the supremacy of His law and exact obedience to it and to turn the eyes and ears and minds and hearts of all unto Himself, whereas some other religions stress only the sending of messengers by Him and Christianity stressed the aspect of Jesus as the son of God. Quite naturally in Buddhism which did not affirm God as the omnipotent and omniscient and omnipresent creator and preserver and destroyer of the universe, Buddha laid no claim to be God or son of God or messenger of God.

In most religions the transcendence of God is affirmed but not His immanence. Hinduism alone affirms that God becomes the universe and is immanent in it and yet transcends it. The idea of immanence naturally brings God into the creation as an in-dwelling glory and quite naturally

prepares the way for the idea of incarnation which implies the temporary appearance of God on the stage of creation for promoting human welfare and happiness and salvation by proclaiming the majesty and inviolability of Dharma and by vindicating it by giving succour to those who act in conformity with it and punishing those who transgress and infringe it.

Those who see and proclaim the scientific law of emergent evolution—from the mineral kingdom to the vegetable kingdom, from the vegetable kingdom to the animal kingdom, and finally from the animal kingdom to the human kingdom — as being the inner meaning of the Daśāvathāra *(Vishnu's ten incarnations)* doctrine utter only a half-truth and try to read a modern guess into an ancient truth. To God, all His creatures are alike and He incarnates in such forms as he finds indispensable from time to time for working out His divine dispensations.

The fact is that the Dasavataras were specially emphasised on account of their special significance. The number of incarnations is untold **(avatārāh asaṅkhyēyāḥ)**, as the Srimad Bhagavata says. The persons belonging to the Vaishnava sect are prone to appropriate the Avatara *(incarnation)* concept to God Vishnu alone. Even there, they are prone to affirm that the special significance of an avatara is the combination of **paratwa** *(transcendent majesty)* and **Saulabhya** *(grace and accessibility to all, even including the lowest)*. But if

we study all the Hindu scriptures as a whole, the idea of incarnation is as much connected with God Siva as with God Vishnu. Further, an avatara comes not only to emphasise *paratwa* and *saulabhya* but various other divine auspicious attributes. In the words of the Bhagavad Gita, the motivation behind every incarnation is **Lokasangraha** *(universal uplift and welfare and righteousness and salvation)*.

The fact is that the Trimurtis *(Trinity)* form an Eka Tattwa (*one entity*) — a unity in Trinity and a Trinity in unity. The Hindus as a whole believe in Sri Rama's worship of the Siva-linga at Rameswaram and in Siva's uttering the Ramataraka mantra in the ears of the dying devotees at Kasi (*Banaras*). God Tyagaraja is the object of God Vishnu's worship and God Siva says that he revels in **Ram Nam.** In the Daksha Yagna episode in the Bhagavata, God Vishnu says:—

**Aham Brahmā Cha Sarvascha Jagatah Kāraṇam Param** *(I and Brahma and Siva are the supreme source of the universe)*. God Siva utters the same truth to Markandeya at the end of the Bhagavata and confers on that supreme Saivite devotee the highest devotion to Vishnu. Earlier in the Bhagavata when Atri prayed to the Supreme Lord for a son, the Trimurtis appeared before him. He asked: "I prayed to the one supreme Lord. Why do you three appear in response to my prayer?" They replied:— 'He whom you invoked is ourselves, (*yad vai dhyayati te Vayam*). The fact is that Hinduism is a prism which

breaks up, or rather seems to break up – the dazzling and blinding white light of transcendence into the milder, sweeter triune coloured lights of the Trinity and the multi-tinted minor splendours of the multiform universe".

The special glory of the Linga concept is that it combines form (rūpa) and formlessness (arūpa). There is a danger to religion in anthropomorphism as much as there is an element of attractiveness in religion in God being invested with a human form. One of the glorious aspects of Saiva Siddhanta is its reconciliation of divine form and formlessness and its affirmation of the utter interfusion of God and Soul as spiritual essences.

I have shown elsewhere how the Shākta philosophy has shown to us the way to reconcile the seemingly implacable foes viz., Ārambhavāda and Pariṇāmavāda and Vivartavāda. The time is now come to affirm boldly integral unified dynamic Hinduism which includes and transcends all the Hindu sects.

Mr. Rajagopala Pillai has undertaken to publish a great work in the realm of integral Hinduism by his resolve to give to the world all the 360 leelas of Tyāgarāja. This work Tyāgarāja Leela and Hālāsya Mahatmyam (Tiruvilayādal purāṇam) and the innumerable other Leelas of God Siva such as the gracious act of Thayumanavar at Tiruchirapalli etc., will convince the world that Vyasa did not confine the avatara

concept to Vishnu alone. I find that some Saivas go to another extreme and say that as Siva was never born out of a woman's womb like Vishnu, he is superior to the latter. I dislike all these sectarian self-appreciations. When the whole universe is God's becoming and He is immanent in all, I fail to see any difference as between Siva's self-appearance in a human form and Narasimha's immanence in a pillar and Rama's immanence in Kausalya's golden frame. He appears when and where and how as He pleases to protect Dharma and draw all hearts into Himself.

This excellent work is valuable as showing in what numerous and diverse ways God is in us and with us while being above us. It is not necessary or appropriate or possible to refer in detail all the divine **leelas** narrated in this volume. Apart from the many cases of direct and visible intervention of God *in persona* in human affairs, I may refer to two interesting cases of intervention through a human agency or through a physical warning. In the fifty-second leela, a courtesan about whom a man is madly fond turns his heart from the perishable human loveliness to the eternal divine Loveliness — a theme familar to us from the life-history of Lila Suka alias Bilwa Mangal. In the eighty-second story, a physician who by the grace of God is successful in his profession becomes proud and neglects the sick and the suffering and is taught his duty by a strange ailment and by the warning voice of his wife and realises that all

work must be worship of God and must be actuated by the *service motive* and not by the profit motive.

The grace of God Thyāgarāja is upon this excellent book and hence the abundant and well-deserved gratitude of the people to the Publisher will be its natural and legitimate reward.

Madras,
Sep. 1953.

K. S. RAMASWAMI SASTRI.

உ

# திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ லீலை

## இரண்டாம் பிரிவு : உத்தராயண லீலை

## முதல் தொகுதி 51 முதல் 130 லீலை முடியவுள்ளது.

# பதிப்புரை.



ஊன் ஆகி உயிர் ஆகி அதனுள் நின்ற உணர்வாகி பிறவனைத்தும் அவனேயாகி நின்று பசுக்களின் வினைப்போகம் துய்ப்பித்து யாவர்க்கும் மெய் வழி காட்டும் அருள் விளக்கமே தம் விளையாட்டாகவுடைய அஜபா கர்த்தனாகிய ஸ்ரீ தியாகேசனது அருள் லீலைகளின் இரண்டாம் பாகமாகிய உத்தராயண லீலைகளின் முதல் தொகுதியை இந்த நூல் மூலம் விஜய வருடத்து விஜயதசமியாகிய இந்நாளில் வெளியிடற்கு அவனது திருவருளே காரணமாயிருந்தது. கிருபாசமுத்திரமான தியாகேசனது திருவருளைப் பன்முறை வாழ்த்தி வணங்குகின்றேன். சிவபக்தியில் திளைக்கும் நன்மக்களுக்கு இது அரிய நல் விருந்து ஆகிறது.

முதல் பிரிவு வெளிவரத் துணை நின்று என்னை ஊக்கிய பெருமக்கள் யாவரும் இப்போதும் அடியேனுக்கு வேண்டிய பலப்பல உதவிகளையும் புரிந்தனர். வேதாந்த சித்தாந்த மெய்ப்பொருள் அடங்கிய முதல் நூல்களையே தமது வாழ்க்கை ஆராய்ச்சிப் பணியாகக்கொண்டுள்ள பிரஹ்மஸ்ரீ திவான்பகதூர் K. S. ராமஸ்வாமி சாஸ்திரிகள் அவர்கள் இந்த இரண்டாவது பாகத்திற்கும் ஆழ்ந்த உண்மைக் கருத்துக்கள் அடங்கிய ஆங்கில முகவுரையை அன்புடன் அளித்து அலங்கரித்த பேரன்பிற்குப் பெரிதும் கடமைப்பாடுடையேன். சென்னை

குஹானந்த மண்டலி தலைவர் பிரஹ்மஸ்ரீ N. சுப்ரமணிய ஐயரவர்கள் தத்வரீதியான மெய்யுரை யொன்றை இதற்கும் உபகரித்து அருளியுள்ளார்கள். மெய்யன்பர்களுக்கு இது பரமானந்தத்தைத் தருவது. மேலும் அவ்வப்போது சாத்திரக் கருத்துக்கள் இப்புத்தகத்தில் விரவி வரும்போது அவற்றை ஆராய்ந்து ஐயந்திரிபற்ற உண்மை வடிவங்களைக் கண்டு எழுதித் தந்தனர். சென்னை தியாகராஜ விலாஸத்திலுள்ள உ. வே, சுவாமிநாத ஐயரவர்கள் பேரன் K. சுப்ரமணிய ஐயர் B. A. வழக்கம் போல் தமது பிதா காலஞ் சென்ற S. கல்யாணசுந்தரம் ஐயரவர்கள் எழுதி வைத்த பிரதிகளை தமது நண்பர் வித்வான் சாரநாதனுடன் லீலை வசனங்களைச் சரிபார்த்துக் கொடுத்தார்கள். எனது வேண்டுகோளுக்கிணங்கிப் பெருமுயற்சி எடுத்து, திருவாழித் திருத்தேரின் அபூர்வ அலங்கிருத மூவர்ணப் படம் ஒன்றைத் தக்க சிற்பியாரைக் கொண்டு எழுதி மூவர்ணப் பட அச்சுகளையும் செய்தனுப்பினார்கள். எனக்குச் சிவபக்தியை யன்புடன் ஊட்டி வளர்த்த எனது தந்தையார் ஸ்ரீ டி. எஸ். கோவிந்தசாமி பிள்ளையவர்களின் ஞாபகமாக இந்த தேர்ப் படத்தை வெளியிடுகிறேன். திருத்தேரின் தத்துவ ரகசியங்களை பிரஹ்மஸ்ரீ N. சுப்ரமணிய ஐயரவர்கள் துருவி ஆராய்ந்து தற்சிறப்பாகச் சேர்த்துதவினார்கள். எனது மெய்யன்பர்கள் தருமை ஆதீன வித்வான் பேராசிரியர் திரு எஸ். தண்டபாணி தேசிகரவர்களும், வித்வான் ச. கு கணபதி ஐயர் M. A. அவர்களும், மயிலை வித்வான் சே. வே. ஜம்புலிங்கம் பிள்ளையவர்களும், தஞ்சை ஸரஸ்வதி மஹால் ஆராய்ச்சியாளர் ஸ்ரீ வாசுதேவ சாஸ்திரிகளும் வழக்கம் போல் இந்த வெளியீட்டிற்கும் வேண்டிய திருத்தங்களைச் செய்துதவினர்.

பழமக்கள் பயின்று வந்த இரண்டு அருமையான பாட்டுக்களும் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

முதல் பிரிவைப் படித்து ஆனந்தித்த சில பெருமக்கள் தம் "நல்லுரைகள்" மூலம் புத்தகத்தைப் பாராட்டி அடியே

னுக்கு ஊக்கம் அளித்தனர். அவர்களுக்கு எனது அன்பார்ந்த நன்றி. அவற்றுள் சில இந்தப் புத்தகத்தில் காணலாம்.

புஸ்தகங்களை அழகாகவும் பிழையில்லாமலும் அச்சிட்டு உபகரித்தலையே தமது உயர்ந்த நோக்கமாகவுடைய நமது பழம் பெருமை வாய்ந்த ஸ்ரீ வாணீ விலாஸ அச்சகத்தினரது அரிய ஸேவையும் பாராட்டிற்குரியது.

கருணை வெள்ளமான அஜபா நடனத் தியாகேசனது திருவருள் சைவ நன் மக்களின் மீது மேலும் மேலும் இப் புத்தகத்தின் மூலம் பொழிந்து இகபர சுகங்களை அளித்து மெய்யறிவு பாலிக்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

"முன்னவனே முன்னின்றல் முடியாத பொருள் உளதோ".

இமைப் பொழுதும் எந்நெஞ்சில் நீங்கா தான் தாள் வாழ்க.

"ஆதி பராசக்தி யெனு மன்னைவாழி யல்லியங்கோதைப் பெயராம்
அம்மை வாழி
மாதவர் சேர்வன்மீகநாதன் வாழி மகிழ்வருளுந்
தியாகேச வள்ளல் வாழி
போதமுதவுந் தேவதீர்த்தம் வாழி புனித சிவனடித் தொண்டர் வாழி
நீதியருள் சிவதரும கிருத்தர் வாழி நிறை செல்வத்
திருவாரூர் நீடு வாழி"

ஆனந்த விலாஸம்
பிக்ஷாண்டார் கோவில்
விஜய ஹு ஐப்பசி மீ
விஜயதசமி 17-10-53

அடியார்க்கடியன்,
'மீளாவடிமை'
ராஜகோபாலன்



# Sri Tyagaraja Leela

## FOREWORD TO PART I.

I feel it to be a high privilege to write this foreword at the request of Sri Rajagopala Pillai of Bhikshandarkoil, a rare leader and patriot and devotee who has published this rare and valuable work, and thus link my name with his name and that of Sri N. Subrahmania Iyer, President of Guhananda Mandali, who has contributed a learned and weighty introduction to this work and who is a great authority in our sacred literature and especially in the Saiva Āgamas and particularly in Sri Vidya Shakta literature. I hope that I shall be forgiven for having a minor strain of egotism in me and for saying that I used to go very often for worshipping Sri Tyagarajaswami in the famous temple at Tiruvarur when I was District Munsiff at Tiruturaipoondi and that for some years the administration of the temple was under my general control under the Negapatam Sub-Court's scheme when I was Sub Judge at Negapatam.

I have for some decades past been conducting researches in the Prasthana Traya and in the Puranas and Itihasas and Agamas and am getting more and more convinced about the integral character of ancient Hinduism, despite the sectarian persecutions and polemics of mediaeval Hinduism. The ebbing tide of Hinduism has come to an end and there is to-day a free forward-flowing tide of integral Hinduism once more. This book which contains a description of fifty out of three hundred and sixty acts of God Tyagaraja's benediction and grace will, I feel sure, quicken such forward flow.

It is often faultily assumed and glibly expressed that God Vishnu alone took form and did acts of grace for man's salvation. No doubt God Vishnu is the protective aspect of God. But God Siva as Sundareswara in Madurai and as Tyagaraja in Tiruvarur was as accessible and gracious as God Vishnu in any of his incarnations. God Siva is often regarded in his destructive *(Samhara)* aspect alone. As a matter of fact the destruction of evil-doers by Rama and Krishna was on a colossal scale. Every God and also every Goddess—has a gracious *(Saumya)* aspect as well as a destructive *(Kruru)* aspect. But all the acts of Gods and Goddesses are motivated only by universal welfare, and aim, in the famous words of the Bhagavad Gita, at protecting the good and punishing the wicked and re-seating Dharma on its throne.

One unique aspect of the Saiva Agamas and the Shakta Agamas is the way in which they unify and harmonise Advaita and Visishtadvaita and Dvaita. The two latter systems of thought deny the Formless Attributeless Noumenal Absolute *(Nishkala)* while some uncompromising aspects of Advaita give only a secondary importance and an inferior fleeting reality to God (i. e., the Absolnte in the aspect revealing Name and Form i. e., *Sakala.*) But the Saiva and Shakta Agamas show how the Absolute is God viewed out of relation to the world and how God is the Absolute viewed in relation to the world. They show also that God and His Shakti are essentially one, that the world is an emanation from God's Shakti, and that the world, though it has a reality dependant on

God and is not a mere illusion or mirage or dream, in no way affects the integrality and the infiniteness of the Absolute or interferes with the infinite purity and bliss and grace of God.

The human fight about higher and lower among the Trimurthis (Trinity) have no real existence in the divine plane and is only in our deluded minds and sectarian hearts. That is shown by Siva's uttering the Tāraka mantra in the right ear of the person dying at Kāsi (Banaras) and Rama worshipping Ramalinga at Rameswaram. This work shows how God Tyagaraja shines in God Vishnu's heart and is worshipped there by God Vishnu.

Let us never forget the inner truth of the *Ajapa Natana* (dance) of God Tyagaraja in God Vishnu's heart. The Ajapa Gayatri Mantra (*Hamsah Soham Soham Hamsah*) is called so because our rhythmic in-taken and out-going breaths take that form. Let us consciously practise Ajapa Gayatri and thus realise the eternal and perennial dance of divine bliss in our hearts.

There is a great occult truth hidden in the well-known Panchalinga concept. Tiruvarur is said to be the shrine of the *Prithvi Linga* (the Earth-element as a manifestation and emanation of God). The subtler elements of water and fire and wind and ether rest on the earth-element which is nearest to us and which is the major part of our physical self and to which we are knit by the powerful and irresistible force of gravitation. God *Vanmeekanathar* of Tiruvarur is called

so because the *Vanmeeka* (ant-hill) where the Linga was found symbolises the *Prithvi Tattwa.* Another truth is that five nerve plexuses *(chakras)* in the body *(Pinda)* correspond to the five centres of the elements in the universe (*Anda*). Tiruvarur is thus said to correspond to the Muladhara (sacral plexus) shrine in the human body which is the mobile temple of God. *Kamalambal* in the Tiruvarur temple is *Kamakala* or *Lalita Shakti.* Aum is *Uma* and *Uma* is Aum. Siva is *Uma* and Uma is *Sivà.* Tiruvarur is thus *Siva Peetha* and *Shakti Peetha.*

Let us not forget also that King *Muchukunda* is connected with both God Siva at Tiruvarur and God Krishna and that the sage *Markandeya* is connected with God Siva in the Siva Puranas and with God Vishnu in the Bhagavata Purana. King Muchukunda brought God Tyagaraja to the earth and .God Tyagaraja willingly came to meet His Shakti (Kamala Devi) and to bless us all and shine in our hearts.

This is a rare and valuable work which the world owes to Mr. Rajagopala Pillai's research and piety and munificence. I hope and wish and pray that he will give the world all the other *Tyagaraja Leelas* also. I wish the work abundant divine grace and ever-growing public appreciation.

MADRAS,
28th Sept. 1952.

K. S. RAMA SWAMY SASTRI.

உ

# *திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ லீலைகள் முதல் பிரிவின் பதிப்புரை.

---

பூமி தேவிக்கு முக கமலம் போல் விளங்குகின்ற திருவாரூர்த் தொன்னகரின் மூர்த்தி, தலம், தீர்த்தம் எல்லாம் எல்லையற்ற பெருமை வாய்ந்த தேவ ரகசியமாகவே விளங்குகின்றன.

பசுபதியாகிய பரமசிவம் உயிர்கள் மேல் வைத்த கருணையால் நம் தமிழ் நாட்டில், விரும்பி வந்து கோயில் கொண்டு எழுந்தருளி நாம் உய்யும்வண்ணம் அநேகம் திருவிளையாடல்களை அவ்வப்போது நடித்துக் காட்டி நல்லொழுக்கங்களை நிலைநாட்டியிருக்கின்றார். சிவபரஞ்சுடர் சோமசுந்தரமாக வந்து பாண்டிய ராஜ புத்ரியான மீனம்பிகையை மணந்து பக்தர்கள் பொருட்டுச் செய்த லீலைகளே "ஹாலாஸ்ய மகாத்மியம்" என்னும் "மதுரை அறுபத்து நான்கு திருவிளையாடல்கள்" என்பது எல்லோருக்கும் தெரியும்.

---

*குறிப்பு:—தியாகேசர் லீலைகள் முந்நூற்றறுபதா, முந்நூற்றறுபத்து நான்கா என்பது ஒரு விஷயம். டாக்டர் சுவாமிநாதையரவர்கள் அச்சிடுவித்த தியாகராஜ லீலையில் லீலைகள் முந்நூற்றறுபது என்று கூறுகிறார்கள். முசுகுந்த ஸஹஸ்ர நாமாவளியில்

ஷஷ்டித்ரிஶதஸங்க்யாகலீலாகல்பிதவிக்ரஹாய நம: |

என்ற நாமம் லீலைகள் முந்நூற்றறுபது என்றே குறிக்கிறது. ஸ்ரீ தியாகராஜ லீலைகள் முந்நூற்றறுபதும் ஸ்காந்த புராணம் நாகர கண்டம் கமலாலய மஹாத்மியம் உத்தர பாகத்தில் கூறப்பட்டுள்ளதாக *திருவாரூர்த் தியாகராஜ லீலை' நைமிசப் படலம் 46, 47-வது செய்யுட்களால் தெரியமுடிகிறது. புண்யபுர மஹாத்மியம் என்னும் திரு

கைலாஸபதியான சிவபரஞ்சுடரே, மூலாதார க்ஷேத்திரமும் சைவராஜதானியுமான தென் திருவாரூரில் சோழகுல திலகமாக 'தியாகராஜனுக' அருள்திருமேனிகொண்டு அவதரித்து அரசுசெலுத்தியும், தொண்டர் நாதனுக விளங்கி அனவரதம் அஜபாநடனம் புரிந்து அருளும் பெருமையும், சைவ சமயத்தினது தழைத்த வேர் போன்ற நாயன்மார் அறுபத்துமூவரது மகிமைகளை யுலகோர் காண, படிமத்தில்

---

வாரூர் ஸ்தல புராணங்களுள் ஒன்றின் தமிழ் மொழிபெயர்ப்பே தியாகராஜ லீலைகள் என்று இந்த நூலின் முன்னுரையில் கூறப்படுகிறது. சென்னை குஞானந்த மண்டலியின் தலைவர் ப்ரஹ்மஸ்ரீ N. சுப்ரமண்ய அய்யரவர்கள் வெளியிட்டுள்ள ஸ்ரீ கமலாலயச் சிறப்பு வெளியீடு 2. என்னும் கமலாலய க்ஷேத்திர தத்துவத்தில் 45-ம் பக்கத்தில் தியாகேசனது 360 லீலா தத்துவமும் விளக்கப்பட்டிருக்கிறது. லீலைகள் முந்நூற்றறுபது என்றே இந்த புஸ்தகத்திலும் எழுதியிருக்கிறது. ஆனல் வடபாதிமங்கலம் ஸ்ரீமான் V. T. சோமசுந்தரமுதலியாரவர்களால் ஜய-ஹூ (1895) பங்குனி-மீ அச்சாகி வெளியிடப்பட்டுள்ள "திருவாரூர்ப் புராணத்தின் "முகவுரையில்" மேற்கொண்டு இனி அச்சிடுவதற்குத் தயாராக விருக்கும் நூல்கள் பதினன்கென்றும் அவற்றுள் திருவர்நுர் முந்நூற்றறுபத்து நான்கு லீலைகள்" என்னும் ஒரு நூலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனல் ஸ்ரீ தியாகராஜலீலைகள் முந்நூற்றறுஅறுபத்து நான்கென்று தெரிகிறது. அடியேனுக்குக் கிடைத்துள்ளவை முந்நூற்றறுபதே. நான்கு லீலைகள் கிடைக்கவில்லை. இவையும், திருவாரூப்புராண முகவுரையில் கண்ட பதினைந்து நூல்களும் திருவருள் செயலால் கிடைக்குமாயின் வாசகர்களுக்கு உபயோகமாக யிருக்குமல்லவா? எமக்குக் கிடைத்த தமிழ்ப் படி ஏடுகளில் 57, 58, 59, 71 இந்த எண்களுடைய நான்கு லீலைகளும் காணப்படவில்லை. இவைகள் அன்பர்கள் யாரிடமாவது கிடைத்தால் மறுபதிப்பில் சேர்த்துப் பதிப்பிக்கலாம். திருவருளே துணை.

* அரியாசனத் தயில்வே லண்ணலோடும்
தேஞ்செய்த மலர்க்கூந்தற் றேவியோடும் வீற்றிருக்கும்
தியாகராசர்
தாஞ்செய்த விளையாடலோரு முந்நூற்றறுபதவை சாற்றுமாலோ.
(தி. தியா. லீலை நைமிசப் படலம் 48.)

கண்ட தமது வடிவமேயான ஆலால சுந்தர மூர்த்தி மூலம் விளக்கம் செய்வதற்காகப் புரிந்த திருவிளையாடல்களின் தத்துவங்களும், "சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த தனி முழுமுதலுமாய் அதற்கோர் வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதிவிடங்கராய் நடங்குலாவிய" முந்நூற்றறுபது லீலைகளும் மக்கள் மனத்தை உருக்குவன ஆனந்தவெள்ளம் பெருக்குவன. இவை யாவும் மிகவும் ரகசியமாகவே தேடுவாரின்றி ஏடுகளில் புதைந்துகிடந்தன எனலாம்.

கர்ண பரம்பரையிலும் இதர நூல்களில் கண்ட மேற்கோள்கள் மூலமாகவும் கிடைத்த சில வரலாறுகளைக் கொண்டும் 14 லீலைகளே ஸ்ரீ தியாகராஜ லீலைகள் என்று பேசப்பட்டு வந்தன. பழந்தமிழ் ஏடுகளைச் சேகரித்த தனிப்பெருமையுடைய தமிழ்த் தாத்தாவாகிய டாக்டர் உ. வே. சுவாமிநாத ஐயரவர்களும் இவற்றைத் தேடி அலுத்துப் போயினர். அவருக்கும் லீலைகள் பதினான்கே கிடைத்தன. திரிசிரபுரம் மகா வித்வான் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் இந்த சொற்ப லீலைகளைக் கொண்டே "திருவாரூர்த் தியாகராஜ லீலை" என்ற பெரியதொரு காப்பியம் செய்துள்ளார். இதுகாறும் முந்நூற்றறுபது லீலைகளின் மூலக்ரந்தமோ தமிழ் மொழிபெயர்ப்போ கிடைக்கவேயில்லை. புண்யபுராதன க்ஷேத்ர ரகசியமாகிய இவ்வரிய லீலைகளை எப்படியும் கண்டுபிடித்து வெளிப்படுத்த வேண்டும் என்னும் அவா எப்போதும் பள்ளி பயிலும் நாள் முதலே அடியேனை ஊக்கிக்கொண்டே வந்தது உண்டு. கமலைப் பராசக்தியின் திருவருள் வாய்ப்பினால் சில நாளைக்கு முன் ஸ்ரீரங்கத்தில் எனது அரிய நண்பர் காலஞ் சென்ற குருபக்தசிகாமணி பிர்ம்மஸ்ரீ T. K. பாலஸுப்ரமண்ய ஐயரவர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது தமது ஸ்ரீ வாணீ விலாஸம் அச்சாபீஸில் தாம் இதைத் தேடி வைத்திருப்பதாகத் தெரிவித்தார். குருடனுக்குக் கண் கிடைத்தது என மகிழ்ந்தேன். அப்படியானால் மிகவும் நல்லது. இதன் செலவுகளை அடியேனது திருத்தொண்டாக ஏற்றுக்கொண்டு தயவு

செய்து அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும்" என்று கேட்டுக் கொண்டேன். அவரும் உடனே உடன்பட்டு மொழிபெயர்ப்புப் பிரதிகளை என்னிடமே எடுத்துக்கொடுத்தார். 'முன்னவனே முன்னின்றால் முடியாத பொருள் உளதோ' அவன் அருளே இது! அல்லவா?

பின்னர் டாக்டர் சுவாமிநாத ஐயரவர்களின் குமாரரான லேட் ஸ்ரீகல்யாணசுந்தரம் ஐயரவர்களிடம் இப்பிரதிகளைக் காண்பித்து இவற்றைப்பரிசோதித்துத் தாங்களே பிரதிசெய்து தரவேண்டும் என்று வேண்டினேன். நண்பர் அவர்களும் மனமுவந்து செய்துகொடுப்பதாக ஒப்புக்கொண்டு சிலநாட்க ளில் ஐம்பது லீலைகளை அச்சுக்குக் கொடுக்கும் விதமாக எழுதி அனுப்பிவிட்டார்கள். இன்னும் சில நாட்களில் மீண்டும் நூற்றைம்பது லீலைகள் வந்தன. இந்த லீலைகள் யாவும் வட மொழி முதல் நூலிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை என்று அதிலே கண்டிருந்ததால் எப்படியாவது வடமொழி மூலமோ அல்லது வேறு கையெழுத்துப் பிரதியோ கிடைக்கும் என்று தேடாதும் தேடினேம். இன்னும் கிடைத்திலது. தியாகேசர் பிரபந்தங்கள், கமலாம்பிகை பிரபந்தங்கள் முதலியவையும் அஜபாகல்பம், கமலாலய க்ஷேத்ரதத்வம் முதலியவையும் அச்சாக வேண்டியிருந்தது. அவையும் அவன் அருளாலே அச்சாகி வெளிவந்தன.

சென்ற கர-ஆு பங்குனி-மீ முதல் வாரத்தில் இதன் அச்சுவேலை தொடங்கியது. எட்டு -பாரங்கள் அச்சானதும் ஸ்ரீ தியாகேசனது பங்குனித் திருநாளன்று இவை தியாகேசன் பாத கமலங்களில் அர்ச்சிக்கப்பெற்றன. முதல் ஐம்பது லீலை கள் அடங்கிய தேவ லீலைகள் என்னும் முதற் பிரிவுதான் முதலில் அச்சிட்டு இப்போது முடிந்திருக்கிறது. இது அச்சிட்டு வெளிவரும்போது எனது அரியபெரிய நண்பர்கள் டாக்டர் ஸ்ரீ சுவாமிநாத ஐயர் திருக்குமாரர் ஸ்ரீ கலியாணசுந் தரம் ஐயரவர்களும், ஸ்ரீ வாணீ விலாஸம் பிரஸ் உரிமையாளர் ஸ்ரீ T. K. பாலசுப்ரமண்ய ஐயரவர்களும் உடனிருந்து ஆனந்

திக்கக் கூடவில்லையே என்பதை எண்ணும்போது வருத்தம் தான்.

தனது அரிய திருக்கரங்களாலேயே எனது ஆப்த நண்பரும் ஸ்ரீ தியாகேச பக்தரும் ஆன கல்யாணசுந்தரம் ஐயரவர்கள் லீலைகளைப் பரிசோதித்து ப்ரதி யெழுதித் தந்தனர். பலவீனத்தால் தாம் நேரில் எழுதக்கூடாதபோது தமது குமாரன் அருமந்த பிள்ளையான அறிவும் அடக்கமும் மிக்க ஸ்ரீ K. சுப்ரமண்யம் B. A., மூலம் எழுதச் செய்திருந்தனர். இவ்வளவில் தமது தந்தையாரின் பணிகளைப்பின்பற்றி அடையாற்றிலுள்ள டாக்டர் சுவாமிநாத ஐயர் அவர்களது புத்தகசாலையிலும் மற்றும் எங்கும் அன்புடன் நடந்துகொள்வதைப் போலவே, தமது தந்தையையும் தாத்தாவையும்போல், இவர் அடியேன் மாட்டும் அன்புகாட்டுவதற்கு மிகவும் கடமைப்பாடுடையேன். மேற்கொண்டு பரிசோதித்தல் அச்சிடுவித்தல் பணிகளை இவர்களே செய்து கொடுக்கிறார்கள். வித்வான் ஸ்ரீ பாலசாரநாதனும் உதவி புரிகின்றனர்.

அடியேனது நண்பர்கள் சென்னை குகானந்த மண்டலி அத்யக்ஷகர் பிர்ம்மஸ்ரீ N. சுப்ரமண்ய ஐயரவர்கள், டாக்டர் சுவாமிநாத ஐயரவர்கள் பேரன் ஸ்ரீ சுப்ரமண்யம் அவர்கள் B. A., தருமபுரம் ஆதீன வித்வான் திரு. எஸ். தண்டபாணி தேசிகரவர்கள், வித்வான் திரு ச. கு. கணபதி ஐயரவர்கள் M. A., மயிலை சே. வே ஜம்புலிங்கம் பிள்ளையவர்கள், தஞ்சை ஸரஸ்வதி மஹால் ஸ்ரீ K. வாசுதேவ சாஸ்திரிகள், திரு வித்வான் S. பாலசாரநாத் முதலியவர்களும் பதிப்புவேலைகளில் வேண்டிய உதவிகளை அவ்வப்போது கவனித்துச் செய்து வருகிறார்கள். ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸம் அச்சுயந்திரசாலையினரும் தங்களதுபெரும் கீர்த்திக்குத் தகுந்தவாறு கண்ணுங் கருத்துமாய் பணி செய்கின்றனர். எல்லோருக்கும் எனது மனமார்ந்த நன்றி. கைம்மாறு கருதாத மழைபோல் குகானந்த மண்டலி ஸ்தாபகர் பிர்ம்மஸ்ரீ N. சுப்ரமண்ய அய்யர் அவர்கள் இந்த நூலுக்கு சிறந்த தத்வ ஆராய்ச்சி முறையில்

சிறப்புரை தந்து ஆதரித்திருக்கின்றனர். இப்பதிப்பு வெளியீட்டுவேலையில் அடியேனைத் தூண்டிவிட்ட அஜபாகர்த்தனை ஸ்ரீ தியாகேசனது அருள் திறத்தை வியந்து வியந்து தமியேன் அடியேன் ஆகுவது அல்லது வேறு என் செயவல்லேன். ஸ்ரீ தியாகேசனது திருத்தொண்டர் திருக்கூட்டத்தினருக்கு இது முழுதும் ஆராத காதலுடன் உரிமையாக்கப்பட்டது.

"மண்ணரசுகொளவந்து மண்ணரசாகிய வாரூர் மணிப்பூங்கோயில்
எண்ணரசு வீற்றிருக்கும் வீதிவிடங்கப் பெருமாள் இருதாள்போற்றி"
"ஆதிபரா சக்தியெனு மன்னைவாழி யல்லியங்கோதைப் பெயராம்
அம்மை வாழி
மாதவர் சேர்வன்மீகநாதன் வாழி மகிழ்வருளுந்
தியாகேச வள்ளல் வாழி
போதமுதவுந் தேவதீர்த்தம் வாழி புனித சிவனடித் தொண்டர் வாழி
நீதியருள் சிவதரும கருத்தர் வாழி நிறை செல்வத்
திருவாரூர் நீவோழி"

ஆனந்த விலாஸம்,
பிக்ஷாண்டார் கோவில்
நந்தன வருஷம்
ஆனித்திருமஞ்சன
நன்னாள் 29-6-52.

அடியார்க்கடியன்,
'மீளாவடிமை',
ராஜகோபாலன்.

ஸ்ரீ தியாகராஜ லீலை.

# முதல் பாகத்தின் மதிப்புரைகள்.

"HINDU" 12—4—'53.

The significance of the work under-taken by Sri Rajagopala Pillai for bringing to light the literature bearing on the greatness of the ancient shrine of Tyagaraja at Tiruvarur was pointed out in these columns while noticing an earlier publication of his called **Kamalalaya Tattvam**. There were current at the shrine 360 (364 according to another account) Leelas of God Tyagaraja, similar to the more well-known *Tiruvilayadals* of Siva at Madura. These Leelas were originally in Sanskrit Mahatmyas which remain to be unearthed. Their Tamil versions had exercised the attention of scholars previously, and now Sri Rajagopala Pillai has been fortunate to issue Part I of these comprising fifty displays of the Lord's power and grace. These constitute the first book called Deva Leelai, centering round Gods, sages and other divine and semi-divine personages. The Tamil narratives are simple and short and include appropriate extracts from the Tiruvarur songs of Papanasa Mudaliar, Tiruvarur padigams, etc. There are also coloured portraits of God Tyagaraja and Goddess Kamalamba. The publication of the further parts will be eagerly awaited.

V. RAGHAVAN.

(சுதேசமித்திரன்) 10—8—53

திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தியாகராஜப் பெருமான் செய்த திருவிளையாடல்கள் முந்நூற்றறுபதினுள் (364 என்பர் சிலர்) முதல் 50 திருவிளையாடல் பற்றிய வரலாறுகள் இப்புத்தகத்தில் உள்ளன. இவையனைத்திற்கும் வடமொழி மூலம் உண்டெனத் தெரிவதாகவும், ஆனால் அவை கிடைக்கவில்லை என்றும் பதிப்பாசிரியர் முகவுரையில் எழுதியுள்ளார்கள்.

இதிலுள்ள திருவிளையாடல்கள் அனைத்தும் திருவாரூர் தலத்தின் பெருமையையும் அங்கு கோயில்கொண்டருளும் பெருமானின் பெருமையையும் விளக்குவனவாயுள்ளன. தலப் பெருமையும், பிறவும் அறிவீனத்தால் பல மக்களால் மறக்கப்படும் இக்காலத்து, இவ்வித நூல் வெளியிடப்படுதல் மிகவும் நன்மையைப் பயக்கும். திருவாரூர்ப் பெருமானிடத்து அளவிலா ஈடுபாடும், ஆரா அன்பும் வாய்ந்த ஸ்ரீ ஜி. இராஜகோபால பிள்ளையவர்கள் தமிழன்பர்கள் பக்தி கொண்டு பயனடைய இந்நூலைச் சிறந்த முறையில் பதிப்பித்திருக்கிறார்கள். சிவபக்திச் செல்வரும், ஏனையோரும் படித்து ஆரூர்ப் பெருமானின் அருளைப் பெற்று இன்புற உதவுவதாகும் இந்நூல்.

(தினமணி) 18 4—53

அப்பர், சுந்தரர் சம்பந்தர் இம் மூவராலும் பாடப் பெற்ற திவ்யக்ஷேத்திரம் திருவாரூர். இதனை ஸ்ரீபுரம் என்றும் கமலாலயம் என்றும் அழைப்பர்; இதில் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ தியாகேசப் பெருமான், உலகத்தார் உய்யும் பொருட்டு நிகழ்த்திய லீலைகள் முன்னூற்றறுபதென்பர். இவற்றுள் தேவ லீலைகள் எனப்படும் ஐம்பது லீலைகள் இந்த நூலில் கூறப்பட்டிருக்கின்றன. நல்ல தமிழ்நடை. பொதுவாக ஆஸ்திகர்களும், சிறப்பாகத் தியாகேச பக்தர்களும்

விரும்பிப் படிக்கக்கூடிய நூல், 13, 14ம் பக்கங்களிலுள்ள தோத்திரம் பக்தி உணர்ச்சியை ஊட்டுகின்றது. கடைசியில் கொடுக்கப் பட்டிருக்கும் சிறப்புப் பெயரகராதி உபயோக முள்ளது. பிழையில்லாத சுத்தமான பதிப்பு. இதற்குக் காரணமான ஸ்ரீ. இராஜகோபால் பிள்ளையவர்களையும், அவருக்கு உதவி செய்தவர்களையும் பாராட்டுகிறோம்.

( இந்து சாதனம், யாழ்ப்பாணம் ) 27—1—53

பிறக்க முத்திதரும் தலமாக விளங்குந் திருவாரூரிற் கோயில் கொண்டருளிய தியாகராசப் பெருமானார் தமது மெய்யடியார் பொருட்டுத் தோன்றி அருள் செய்ததாகிய திருவிளையாடல்களே திருவாரூர்த் தியாகராசலீலைகள் என வழங்குவன. அந்த லீலைகள் வடமொழியிலேயே ஆதியிலுள்ளன; காலகதியில் அவைகள் தமிழ் மக்களுக்குப் பயன்படும் வண்ணம் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டன. இந்த லீலைகள் முந்நூற்றறுபத்துநான்காகும் என்பர்; இவற்றுட் பதினன்கு லீலைகளைச் சிறந்த கவிஞராக விளங்கிய திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் திருவாரூர்த் தியாகராஜ லீலை என்ற நூற்பெயரோடு சிறந்த கவிகளாக இயற்றி வெளியிட்டுள்ளார். ஏனைய லீலைகள் அக்காலத்திற் கிடைத்தில வாம். ஆனால் திருவருட் செயலாற் போலும் இந்த லீலைகளுள் முந்நூற்றறுபது, திருமகள் கடாட்சமும் கலைமகள் கடாட்சமும் ஒருங்கு அமையப்பட்ட சைவத் திருவாளரும், திருச்சி மாவட்டம் பிக்ஷாண்டார் கோவில் பண்ணையாளருமாகிய ஜி. இராஜகோபால பிள்ளையவர்கட்கு, அவரது நண்பரொருவர் மூலம் முந்நூற்றறுபது லீலைகள் சில ஆண்டுகட்கு முன்னர்க் கிடைத்தனவாகும். இவற்றுள் முதல் ஐம்பது லீலைகளை மேற்படி பிள்ளையவர்கள் நன்காராய்ந்து தியாகராஜர் கீர்த்தனம் முதலிய சிலவும், தியாகராஜப் பெருமான் கமலாம்பிகையம்மையார் என்னும் மூர்த்திகளின் வர்ணமமைந்த திருக்கோலப் படங்களும் சேர்த்து உயர்ந்த முறையில் அச்சிடுவித்து வெளியிட்டுள்ளார்.

"கேட்குறிற் சிவகாதையே கேட்டல் வேண்டும்" என்ற படி, சைவ நன்மக்களாயுள்ளாரனைவரும் தாம் ஈடேறும் வண்ணம் பயபக்தியுடன் கேட்கவேண்டுவன இத்தியாகராஜ லீலை போன்ற சிவ சரிதைகளாகும்; காலபேதத்தினுற் சிவ புராணங்கள் பிரபந்தங்கள் முதலியன இக்காலத்தில் அலட்டு கள் செய்யப்படலாயின. விபரீத நூல்களும் வீண் பாடல் களும் பாமர ஜனங்களால் படிக்கப்படலாயின; இங்ஙனஞ் செய்தலை யொழித்துச் சைவ ஸமயிகள் இத்தியாகராஜ லீலை போன்ற சிவ கதைகளைப் படித்து ஈடேறும் வண்ணம் சைவப் பெரியார் அறிஞர்களாயுள்ளவர்கள் சாமானிய மக்க ளுக்குப் போதித்தல் வேண்டும். திரு. இராஜகோபால பிள்ளையவர்கள் செய்ய எடுத்துக்கொண்ட அரும் பெருஞ் சைவ நூல்களை வெளியிடுதலாகிய இத்தொண்டு சிவப்பிரீதி யானது; அந்தத் தியாகப் பெருமானுடைய திருவருளைப் பெறுதற்கு வழியாகவுள்ளது.

நந்தன-ஹ தை-மீ 10உ

(செட்டிநாடு)

தியாகேசப் பெருமானது திருவிளையாடல்கள் முந்நூற் றறுபதுள், ஐம்பது திருவிளையாடல்களை இந்நூல் எடுத்துக் கூறுகிறது. மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர் களின் தியாகராஜ லீலையில் பதினன்கு திருவிளையாடல்களே குறிக்கப்பெற்றுள்ளன. இதுவரை வெளிவராது மறைந் திருந்த திருவருள் நூலை வெளிப்படுத்தித் தந்த பிள்ளையவர் களுக்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது.

(ஆனந்த விகடன்) 6—9—'53

திருவாரூரைக் குறித்தும் ஒரு புத்தகம் ஸ்ரீ தியாகராஜ பக்தர்களுக்கு ஒரு நல் விருந்தாக வந்திருக்கிறது. ஸ்ரீ தியாக ராஜ லீலைகள் என்ற புத்தகத்தின் முதற் பகுதி தேவலீலைகள்

ஐம்பதும் கொண்டது. மதுரைச் சோம சுந்தரக் கடவுளின் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கு என்பதைப் பலரும் அறிவர். திருவாரூர்த் தியாக ராஜரின் லீலைகள் முந்நூற்றறு பது; 364 என்றும் ஒரு கட்சி.

திருவெம்பாவை-திருப்பாவை-திருமறை-ஆறங்க
மகாநாட்டு கேந்த்ர அமைத்தற்குழு,
20, பெரியகடைத்தெரு, மாயூரம்.

2—1—53.

சிவபக்தர்களும், விஷ்ணு பக்தர்களும் ஒருங்கே சேர்ந்து சமய பிரசார பணியாற்ற முன்வந்துள்ளவர்களுக்கு இப் புத்தகம் பெரிதும் உபயோகமாக இருக்கும். அவரவர்கள் வழிபடும் ஈசனிடம் பக்தி வலியுறச்செய்வதே இம்மகாநாட்டின் முக்கிய நோக்கம். அவரவர்கள் வழிபடும் மூர்த்தியின் லீலா விபூதிகளைத் தெரிந்துகொண்டால் பக்தி பெருக்குக்கு பெருந் துணையாயிருக்கும்.

உ

குருபாதம் திருவாரூர்,
இராஜாங்க கட்டளை மடம்,
தெற்கு வீதி,
2—1—53.

அன்பார்ந்த ஐயா.

சுபம். நந்தன வருஷம் மார்கழித் திருவாதிரை நன்னாள். 1953-ஆம் புத்தாண்டில் வணக்கபூர்வ அன்பளிப்பாக ஸ்ரீ தியாக ராஜ லீலை முதற் பகுதி என்ற தேவ சம்பந்தமான ஐம்பது திருவிளையாடல்களடங்கிய அழகிய தமிழ் மொழிபெயர்ப்பு

வசன நூல் வரப்பெற்று மிக மகிழ்ச்சியுடன் வணங்கி சிரமேற் கொண்டு எழுதுவதாவது :—

பொதுமுறையில் உலகெலாமே அம்பலக் கூத்தன் அருள் ஞானக் கூத்தாக இத்திருவிளையாடல் சிறந்த ஸ்ரீரங்க ஸோமாஸ்கந்த ஆரூர் ஸ்ரீ தியாகராஜப் பெருமானின் சிறந்த அருள் விளக்கமேயாம்.

புத்தாண்டு தொடக்கத்திலேயே அருளப்பெற்றது முன்னாள் லீலைகளைப்போலவே இன்றும் இனியும் மக்கள் உய்யும்பொருட்டு அனுக்கிரஹிக்கும் சான்றாகவே இறைவனின் அருவுருவத் திருமேனியாகிய இந்நூல் மூலம் அருள்செய் துள்ளதே என்பதுதான் திருவருட்டுணிவு. ......... .........

அன்புள்ள,

சோமசுந்தரத்தம்பிரான்

உ

சிவமயம்

K. V. AL, M, RAMANATHAN CHETTIAR, "MUTHIAH VILAS" — KOTTAIYUR (RAMNAD DT.)

நந்தன-ஷூ மார்கழி-மீ 4—1—53

இப்பவும் தாங்கள் பிரசுரித்த ஸ்ரீ தியாகராஜ லீலை முதல் பகுதி தங்களது அன்பளிப்பாக வந்துசேர்ந்தது. ரொம்ப சந்தோஷம்.

தங்களது இந்நூல் வெளியீடு ஸ்ரீ தியாகேசரது திருத் தொண்டர் திருக்கூட்டத்தினருக்கு ஒரு அரிய விருந்து.

இதுபோல் இன்னம் அரிய பல நூல்கள் வெளியிடத் தங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் உண்டாக்க இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

தங்கள் அன்புள்ள,

ராமநாதந் செட்டியார்.

A. L. A. R. SOMANADHAN CHETTIAR. "DEVI GARDENS"
DEVAKOTTAI ROAD.
*Date 21—1—1953.*

புத்தகமும் அதின் உள்கருத்துகளும் மிக அருமையாக இருக்கின்றன. இறைவன்பால் தாங்கள் கொண்டுள்ள பக்தியே அதற்குக் காரணம் என்று சொல்வது மிகையாகாது. இறைவன் தங்களுக்கு நீண்ட ஆயுளும் நிறைந்த செல்வங்களும் திடகாத்திரமும் தந்து அருளுமாறு பிரார்த்திக்கின்றேன்.

வேணும் ஸ்ரீ ராமநாதஸ்வாமி துணை.

A. L. A. R. சோமநாதன் செட்டியார்.

ச. குமாரசுவாமிக்குருக்கள். அச்சுவேலி.

*15—8—1953.*

திருவாரூர்த் தியாகராச லீலைகள். பெரும் சிரமப்பட்டு இதனைப் பதிப்பித்துச் சைவ உலகுக்கு உதவிய சைவ பரிபாலனச் செல்வராகிய ஸ்ரீமத்-இராஜகோபாலப் பிள்ளையவர்கட்குச் சைவ உலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது. அவர்களுடைய பதிப்புகள் என்றும் நின்று நிலவுக. இறைவன் திருவருள் முன்னிற்க. அவர்கட்கு எனது அன்பைத் தெரிவிக்கவும்.

A. S. P. AYYAR, B.A., I.C.S., F.R.S.L.,

BAR-AT-LAW, HIGH COURT JUDGE,

Madras.

9—2—53

*Dear Mr. Rajagopala Pillai,*

Many thanks for your sending me a copy of your "*Thyagaraja Leelai*". It makes interesting reading. If every one in our India writes about what he knows or what inspires him there will be no dearth of good books in our country.

With best wishes,

Yours Sincerely,

A. S. P. AYYAR.

**RAO SAHIB G. P. VENKATARAMA SASTRI, B. A.,**

**Retd, Dy. Collector,**

EAST STREET, GOPALAPURAM.

*Madras, 10—2-53.*

*My dear Rao Bahadur,*

I am thankful to you for having sent to me a copy of your publication "ஸ்ரீ தியாகராஜ லீலை".

I know the Herculian efforts you took to get out this publication and the difficulties you had to overcome. I congratulate you on the successful result. I am hopeful that the remaining Leelas will be got out soon.

With best regards,

Yours Sincerely,

G. P. VENKATARAMAN.

திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி ஓடம்.



* பஞ்சலிங்க க்ஷேத்திரமாம்

ஆதிபரா சக்தி சமுத்திரமாம்

அஞ்செழுத்தே சூத்திரமாம்

ஆறு நாலு வேத சாஸ்திரமாம்.

முடுகு

ப்ருதிவியை ஒன்றாகக் கப்பலாய்க் கட்டி
பலமான அப்புவை ஜலமாகக் கொட்டி
ச்ருதியான தேயுவை பாதாளம் வெட்டி
சுவாஸமுடன் ஓடுகின்ற வாயுவை ஓட்டி
ஆகாசப் பாய் மரங்கள் அந்தரமாய்க் கட்டி
அவ்வோரும் சுக்கானும் பிர்ம்மாவும் ஓட்டி
த்யாகாதி ராஜநட துவஜங்கள் கட்டி
திருப்பாற் கடலை விட்டு தேவலோகம் ஒட்டி
திருவாரூரை நோக்கி வந்ததடா கப்பல்

ஏலேலோ—ஏலிலலோ.

தத்தையா—ஏலேலோ.

சுபம்.

---

* வன்மீகேச்வரம், அசலேச்வரம், ஹாடகேச்வரம், ஆனந்தேச்வரம், சித்தீச்வரம் என்னும் முக்ய மஹாலிங்கங்கள் இங்கே உண்டு. பராசக்தி பீடமாகிய இந்த தலத்தின் யோக ரஹஸ்யங்களை வெளியிடும் 'கமலாலய க்ஷேத்ரதத்வம்' என்னும் நூலைப் பார்க்கவும். மேலும் இவ்வூர் பிருதிவியாதி பஞ்ச பூதலிங்கங்களில் முதன்மையான பிருதிவி லிங்க மஹத்வமுடையது; பிறந்தவர் பிறவாப் பெரும் பேறு தரும் பதியாம் இத் திரு ஆரூர்.

ஸ்ரீ

# திருவாரூர் ஸ்ரீ தியாகராஜ லீலைகள்.

## இரண்டாம் பிரிவு (உத்தராயணலீலை)

## லீலை 51 முதல் 211வது லீலை முடிய 161 லீலைகள்

### முதல் பாகம் 80 லீலைகள்



ஸ்ரீ தியாகராஜ லீலைகள் முந்நூற்றறுபதில் இரண்டாவது பிரிவு உத்தராயண லீலை யென்று பகுக்கப்பட்டுள்ளது. இவை 161 லீலைகள். இரண்டாவது பிரிவு முதற்பாகத்தில் 80 லீலைகள் அடங்கியுள்ளன. இந் நூலுக்கு மெய்யுரை கூறப் படுகிறது.

இவ்வுரை, முதற்பிரிவாகும் தேவலீலைகளின் மெய் யுரையைத் தழுவியிருப்பதால் அதனை அன்பர்கள் ஒரு முறை வாசித்துவிட்டு இதனை வாசிக்கப் பிரார்த்திக்கப்படுகின்றது.

ஸ்ரீ தியாகராஜ லீலைகளில் இரண்டாம் பிரிவுக்கு உத்த ராயண லீலைகள் என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஸௌரமானரீதியாய் தை மாதம் முதல் ஆனி மாதம் முடிய ஆறு மாதங்கள் உத்தராயண மெனப்படும். தேவதைகளுக்கு உத்தராயணம் முப்பது நாழிகை கொண்ட ஒரு பகல், தக்ஷிணாயனம் இரவு.

இதன்படி ஸ்ரீ தியாகேசன் பகற் காலத்தில் நிகழ்த்திய லீலைகட்கு உத்தராயண லீலைகள் என்று பொருள் செய்யலாம்; அல்லது, ஜீவர்கள் ஸத்கர்மாக்களைச் செய்து பரலோகம் செல்லும் மார்க்கத்திற்கு உத்தராயணம் அல்லது அர்ச்சிராதி மார்க்கமென்று சாஸ்திரங்கள் கூறும். இந்த (உத்தராயண)

லீலைகளால், தியாகேசன் அநுக்கிரஹித்த புண்ணிய புருஷர்கள் அர்ச்சிராதி மார்க்கமாய் ஸ்வர்க்கத்திற்குச் செல்வதனால் இவற்றிற்கு உத்தராயண லீலைகள் என்னும் பெயர் ஏற்பட்டதென்றும் கூறலாம்.

உத்தராயண லீலைகளில் முதற்பாகமாகிய இந்நூலில் 80 லீலைகள் இருக்கின்றன. இவற்றுள் ஒவ்வொன்றிலும் பற்பல தர்மங்கள் விளங்குகின்றன. அவைகள் யாவும் இம் மண்ணுலகில் மனிதர்களால் அநுஷ்டிக்கப்படவேண்டிய தர்மங்களேயாகும். இதைப்பற்றி நன்கு விமர்சிப்போமாயின் அவ்விமர்சம் மிக விரிவாகும். ஆதலின் அவ்விமர்சத்தின் ஜாடை (திக்தர்சனம்) ஈண்டுக் குறிக்கப்படுகின்றது.

அவையாவன:—

51. பரமசிவன் அபிஷேகப் பிரியராதலால் சிவனுக்கு அபிஷேகம் செய்விக்கவேண்டுமென்னும் சுபேச்சையி(நல்லெண்ணத்தி)னால் அதர்மச் செயலும் நல்ல பலனையளித்தது.

53. புண்ணிய காலத்தில் நல்ல க்ஷேத்திரத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்ததனால் மகத்தாகிய துன்பத்தினின்றும் நீங்கியது.

55. குரு தூஷணையால் மகனையும் மனைவியையும் இழந்து பச்சாத்தாபத்தினால் மறுபடியும் பெற்றது.

56. செல்வத்தின் நிலையாமையை நன்குணர்த்தியது.

60. இம்மையில் மனிதன் அநுஷ்டிக்கவேண்டிய சிறந்த தர்மங்களை உணர்த்தி வள்ளலாகிய வைசியனது கண்ணைப் பெற்றுத் தன் நிஜஸ்வரூபத்தைக் காட்டியது.

72. பக்ஷிகள் முதலிய திர்யக் ஜந்துக்களுக்கும் பூர்வ ஜன்ம புண்ணியத்தினால் விவேகம் ஏற்பட்டு, அதனால் சிவ புண்ணியம் இயற்றி, ஈச்வரானுக்கிரகம் பெறலாமென்னும்

சிறந்த தத்துவம் கிளியாலும், தமோகுணப் பிரதானனான வேடனாலும் வெளியிட்டது.

75. உலகத்தில் க்ஷாமமேற்பட்டால் அதன் நிவிர்த்திக்காகச் சில சாந்தி கர்மாக்களை உணர்த்தியது. இதில் பல ரஹஸ்யங்கள் உள்ளன.

77. பரமாத்ம ஸ்வரூபமானது எல்லா மதங்கட்கும், அந்த அந்த மதங்களில் கூறப்பட்ட எல்லாச் சாதனங்கட்கும் பொதுவாய் விளங்கி, அவரவர்களுடைய அதிகாரத்திற்குத் தக்க ஆசரணையா(ஒழுக்கத்தா)ல் ஸமமான ஒரேவித பயனே உண்டாகின்றதென்னும் உண்மையை கௌதம மஹரிஷியின் உபதேசத்தின் மூலமாயும், ஸ்ரீ நாரத மஹரிஷியின் விமர்சனத்தினாலும் ஸ்ரீ தியாகேசன் வெளியிட்டது.

81. குருவின் உபதேசத்திற்குக் கௌரவம் அளித்தது.

83. நல்வினையால் ஏற்பட்ட பாக்கியத்தை யாவராலும் தடுக்க முடியாதென்பதன் நிரூபணம்.

மேலே கூறப்பட்ட சிறந்த தத்துவங்களேயன்றி, இயற்கைக்கு மாறுபாடான சில அமாநுஷ பாரமேச்வர சக்தியை உணர்த்தும் லீலைகளும் பல இதில் காணப்படுகின்றன.

அவையாவன :—

84. ஜலத்தில் நடக்கும்படி செய்தல்.

85. நீரைக் கொண்டு தீபம் எரித்தல்.

86. இறந்தவனைப் பிழைப்பித்தல்.

101. மனிதன் பக்ஷியைப் போல் ஆகாயத்தில் பறத்தல்

108. மலடிக்கு மகப்பேறளித்தல்.

109. குருடனுக்குப் பார்வை யளித்தது.

110. ஊமைக்கு வாக்களித்தது.

111. செவிடனுக்குக் கேள்வி யருளியது.

112. முடவன் நடத்தல்.

118. கொதிக்கும் லோஹத்தைத் தண்ணீரைப் போல அருந்தியது.

123. பரகாயப் பிரவேச ஆற்றலை யருளியது.

124. தென்னை மரத்தை வளைத்துச் சாய்த்தது.

மேற்கூறிய லீலைகளால் பரமேச்வரனுக்குள்ள வரம்பில் ஆற்றல் வெளியாகின்றது.

இவையன்றியும், இந்த லீலைகளால் அரச தர்மங்கள், ஸத்புத்ர தர்மங்கள், பதிவிரதா தர்மங்கள், பிராஹ்மண தர்மங்கள், சிவபுண்ணியங்கள் முதலியவற்றின் விமர்சமும், சிவ பக்தர்களிடத்துப் பரமசிவனுக்குள்ள பெருங் கருணையும், தொண்டருக்காகத் தனது வ்யாபக ஸ்வரூபத்தை மறைத்துக் கொண்டு பரிச்சின்னத் தன்மையை லீலையாகக் கொண்டு வெளியே சென்றதும் இன்னும் இத்தகைய பல ரஹஸ்யங் களும் வெளியாகின்றன. அன்றியும், 104-வது லீலையில் ஸ்ரீ காத்தியாயன மஹரிஷியால் பரசிவ தத்துவத்தைத் தக்க அதிகாரிகள் உய்யும் பொருட்டு உபதேசம் செய்வித்த விஷயம் இத்தியாகராஜ லீலைக்கே ஒரு ஜீவநாடியாக விளங்குகின்ற தென்று கூறுவது மிகையாகாது.

இந்நூலிலுள்ள எண்பது லீலைகளும் ஸ்ரீ தியாகேசன் இயற்றிய உத்தராயண லீலைகளில் பாதி பாகமேயாகும். மற்றப் பாதி இரண்டாவது பாகத்தில் வெளியாகும்.

இத்தகைய அரிய ரஹஸ்யங்கள் பல அடங்கியதும், தற் காலத்திற்கு மிக அவசியமானதுமான இந்நூலைப் பெருமுயற்சி யினால் வெளியிட்ட ஸ்ரீமான் G. ராஜகோபாலப் பிள்ளையவர் களுக்குத் தமிழ் நாட்டிலுள்ள ஆஸ்திக மஹாஜனங்களின் நன்றியுரித்ததாகுக. இந்நூல் ஆசந்திரார்க்கஸ்தாயியாய் விளங்கி, மக்கள் இதிலுள்ள பல தத்வங்களையுணர்ந்து, அநுஷ்டித்து பரமேச்வரனுடைய அநுக்கிரஹத்தைப் பலரும் பெறுமாறு அடியேனது நாத சரணங்களைப் பன்முறை பிரார்த்திக்கிறேன்.

குஹாநந்தமண்டலி
பழவந்தாங்கல் சென்னை 16
13—10—53

இங்ஙனம்
ஸஜ்ஜனவிதேயன்
N. சுப்பிரமணிய அய்யர்

ஸ்ரீ கமலாலயமென்னும் திருவாரூர்

# ரதத்தின் தத்வார்த்த விமர்சனம்.

சென்னை குஹானந்த மண்டலி, தலைவர்
பிரஹ்மஸ்ரீ N. சுப்ரமணிய ஐயரவர்கள்
எழுதியுதவியது.

𑌰𑌥𑌸𑍍𑌥𑌂 𑌶𑌂𑌕𑌰𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌨𑍍𑌮 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇

என்பது சாஸ்திரப் பிரமாணமாகும். "ரதத்தில் வீற்றிருக்கும் ஆநந்தஸ்வரூப பரசிவத்தைத் தரிசித்தவர்களுக்கு மறுபிறப்பு கிடையாது" என்பது மேற்படி பிரமாணத்தின் பொருளாகும். மறுபிறப்பு இன்மையால் அங்ஙனம் சிவத்தைத் தரிசித்தவர்களுக்கு மரணமும் கிடையாதென்று ஏற்படுகின்றது. பிறப்பும் இறப்பும் ஸாபேக்ஷகங்கள். இங்ஙனம், ரதத்தில் அதிஷ்டித்து விளங்கும் சிவ தரிசனத்தால் பிறப்பிறப்பற்ற நிலை ஸித்திக்கின்றமையால் ரதத்திற்கு ஒரு தத்வார்த்தம் இருந்தே தீரவேண்டும் என்பது பெறப்படுகின்றது. அதைப்பற்றி ஈண்டுச் சுருக்கமாய் விமர்சிப்பாம்.

𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌰𑌥𑌿𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌰𑌥𑌮𑍇𑌵 𑌤𑍁 ॥

என்னும் கடவல்லி உபநிஷத்தின் பிரமாணத்தின்படி சரீரம் ரதமென்றும், சரீரத்தின் ஹ்ருதய குகையில் அதிஷ்டித்து விளங்கும் பிரத்யகாத்மா ரதிகனென்றும் ஏற்படுகின்றது. "ரதிகன்" அதாவது சரீரமாகும் ரதத்தில் அதிஷ்டித்து விளங்கும் ஆத்மாவே பரசிவ வடிவமாகும்.

𑌤𑌰𑌤𑌿 𑌶𑍋𑌕𑌂 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌤𑍍

என்னும் பிரமாணத்தின்படி ஆத்ம அபின்ன சிவதிருஷ்டியினால், ஜனன மரண ரூப சோகம் ஒழிகின்றது.

ரதவடிவ சரீரம் வியஷ்டி ஸமஷ்டியென இருவகைத்து. அநேக கோடி ஜீவர்களின் வியஷ்டி சரீரங்கள் ஒன்று சேர்ந்தது ஸமஷ்டி சரீரமென்று கூறப்படும். பல வியஷ்டி மரங்கள் ஒன்று சேர்ந்து வனமென்று கூறப்படுவதுபோல்.

இந்த ஸமஷ்டி சரீரம் விராட்ஸ்வரூபியாகிய பரமேச்வரனுக்கு உரியதாகும். இந்த ஸமஷ்டி சரீரவடிவ விராட்ஸ்வரூப வர்ணனை புராணங்களிலும் இதிஹாஸங்களிலும் பரக்கக் காணலாம். பாதாளம் முதல் ஸத்தியலோகம் வரையிலுள்ள பதினான்கு லோகங்களாகும் ஒரு பிரஹ்மாண்டத்தைப்போல் ஆயிரத்தெட்டு பிரஹ்மாண்டங்கள் இந்த விராட்ஸ்வரூபத்தில் விளங்குகின்றன. இத்தகைய ஸர்வாண்ட ஸமஷ்டியே பரமேச்வரனது ரதமாகும். சராசரவடிவ ஸர்வ பிண்டாண்ட பிரஹ்மாண்ட விராட்ஸ்வரூபத்திற்குரிய ஸர்வ லக்ஷணங்களும் அமையப் பெற்றுள்ளது ஸ்ரீ கமலாலய க்ஷேத்திரத்தின் ரதமாகும். ஆதலால் தான் "திருவாரூர் தேரழகு" என்னும் பழமொழி வழங்கப்படுகின்றது.

## ரதத்தின் அமைப்பு

சக்கரங்கள், மையக்கட்டை, அச்சு, கடையாணிகள், தேரின் அடித்தட்டு, தேர்க்கால்கள், மேல் தட்டுகள், சிவம் அமரும் ஸிம்ஹாஸனம், தேரின் மேல்பாகத்தின் பர்வாக்கள் (தட்டுகள்) விமானம், கலசம், சத்திரம், குதிரைகள், வடங்கள் ஸாரதி, துவஜங்கள் முதலியன ஒரு ரதத்திற்கு இன்றியமையாத அங்கங்களாகும். இவற்றில் ஒவ்வொரு அங்கத்தின் தத்துவத்தைப்பற்றி ஆராயின், அங்கியாகும் ரதத்தின் தத்துவம் நன்கு விளங்கும்.

அவற்றின் விமர்சமாவது:—

சக்கரங்கள் 6. இவற்றுள், உள் பாகத்தில் இரண்டும் வெளிப் பாகத்தில் நான்குமாக அமைக்கப் பெற்றுள்ளன.

ஓம் ஸூர்யசந்த்ராப்யாம் நம:

என்று மூசுகுந்த ஸஹஸ்ரநாமம் 56 கூறுகின்றது. உள் பாகத்தில் உள்ள இரண்டு சக்ரங்கள் ஸூர்ய சந்திரர்களைக் குறிப்பிடுகின்றன. இவை இடாபிங்கலைகளாகும். வெளியே உள்ள நான்கும் மூலாதார சக்ரத்திலுள்ள நான்கு இதழ் களாகும். இடாபிங்கலைகளாகும் உள் சக்ரங்களின் மையக் கட்டை நாமசக்ரமாம் என்று பெரியோர் கூறுவர். வெளிச் சக்ரங்கள் நான்கின் மையக்கட்டைகள் இரண்டும் சிதக்னி குண்டத்தின் சிவசக்தி அம்சங்கள். அன்றியும் முசு.ஸஹ.

ஸீஜஅ க்ஷவிதாஃஹாய நமः ॥ 201
ஸிநு அக்ஷ்யவிஷ்ணவே நமः ॥ 202
நாஜஅக்ஷஹெஸ்வராய நமः ॥ 203
ஶக்தி அக்ஷ்யஜீவாத்மநே நமः ॥ 204
ஶாஷிஅ க்ஷவரமாத்மநே நமः ॥ 205
ஶிவஜஅ க மணாயீஶாய நமः ॥ 206

என்று கூறுகின்ற காரணத்தால் இந்த ரதத்திற்கு உள்ள ஆறு சக்ரங்களும் பிரஹ்மா, விஷ்ணு, மஹேச்வரன், ஜீவாத் மா, பரமாத்மா, கணநீசன் முதலியவர்களைக் கொள்ளக் கிடக் கின்றது. ஆதலால் மேற்கூறியவர்கள் திருவாரூர் ரதத்திற்கு ஆதார பூதர்களாய் இருப்பது ஸூசிப்பிக்கப்படுகின்றது.

ரதத்தின் அடிப்பாகம்—ஆத்மதத்வம்
,, நடுப்பாகம்—வித்யாதத்வம்
,, மேல்பாகம்—சிவதத்வம்

இவ்விஷயம் த்ரிதத்வரூபஸம்ஸ்தாயிஶிவதத்வ விஶ்ராந்தமாய நமः: என்னும் 60வது நாமாவால் பெறப்படுகின்றது.

ஸ்ரீ தியாகேசன் அமரும் ஸிம்ஹாஸனம் வித்யா தத்வத் தில் உள்ளது. இந்த ஸ்தானம் தான் ஹ்ருதய குஹை—தஹரா லயம், இதுவே சிதாகாசமாகும். மேல் பாகமாகும் சிவதத்வம் சிவ, சக்தி, சதாசிவ, ஈச்வர, சுத்தவித்தைகளென்னும் ஐந்து பர்வா(தட்டு)க்களையும் அர்த்தசந்திர, ரோதினீ, நாத,

நாதாந்த, சக்தி, வியாபிகா, ஸமநா, உந்மனீ என்னும் எட்டு பாகங்களையும் உடைத்தாய் விளங்குகின்றன.

மேல் விமானம் அல்லது ஸ்தூபி தத்வாதீத சிவ நிலையாகும்.

கலசம்—பரிபூர்ணபாவம்.
ஏகசத்ரம்—அத்வைத சிவநிலை.

தேரின் அடிப்பாகமாகும் ஆன்மதத்துவத்திற்கும் மேல் பாகமாகிய சிவதத்துவத்திற்கும் இடையில் விளங்கும் வித்யா தத்துவத்தில் ஆன்மசிவ தத்துவங்களைச் சேர்க்கும் 64 தேர்க் கால்கள் இருக்கின்றன:— இவை அறுபத்து நான்கு கலைகளாகவும், தந்த்ரங்களாகவும் விளங்குகின்றன. இந்த நடுப்பாகம் ஸகல ஆகம வடிவமாகவும், ஸகல உபநிஷத் ஸ்வரூபமாகவும், ஸ்மிருதி, புராண இதிஹாஸ ரூபமாகவும் பிரகாசிக்கின்றது. இந்த நடுப்பாகத்தில் நான்கு திசைகளிலும் நான்கு துவாரங்கள் தோரணங்களோடு பிரகாசிக்கின்றன. இவை நான்கு வேதங்களின் முடிவாய் விளங்கும் மஹா வாக்யங்களாம்.

ரதத்தின் முன் பக்கத்தில் நான்கு குதிரைகள் இணைக்கப்பட்டுள்ளன. இவை நான்கும் நான்கு வேதங்கள்.

चतुर्वेदाश्वसंयुक्तस्यन्दनारूढाय नमः
स्वध्यायितचतुर्वेदाय नमः (முசுகுந்த ஸஹஸ்ரநாமம்)

தேரை இயக்குவிக்க (இழுக்க) உபயோகப்படுவன ஆறு வடங்கள். இவை சிக்ஷை, கல்பம், வியாகரணம், நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம் என்னும் ஆறு வேதாங்கங்களைக் குறிப்பிடுகின்றன.

பதினாறு கோணங்களிலும் விளங்கும் துவஜங்கள், கொடிகள், சரியை, கிரியை, யோகம், ஞானம், ஜீவகாருண்

யம், பாசவைராக்கியம், சக்திநிபாதம், தத்துவ ஞானம், விவேகம், ஸந்நியாஸம், சமாதிஷட்கஸம்பத்தி, முமுக்ஷுத்துவம், சிரவணம், மநநம், நிதித்யாஸனம், ஸமாதிகளையுணர்த்துகின்றன. இத்தகைய பிரஹ்மாண்ட வடிவ ரதத்தை ஓட்டும் ஸாரதி ஹிரண்யகர்ப்பராவர். இவர் ஸமஷ்டி ஸூக்ஷ்ம உபாதியோடு கூடியவர்.

சராசராத்மகமாய் விளங்கும் இப் பிரஹ்மாண்ட வடிவ ரதத்தில் முப்பத்துமூன்றுகோடி தேவதா சரீரங்களிலும், கந்தர்வ, யக்ஷ, கின்னர, கிம்புருஷாதிகளிலும், ரிஷிகள், முனிகள், ஸித்தர், சாரணர், நாகர் முதலிய சரீரங்களிலும், பசு, பக்ஷிகள், கிருமி கீடங்கள் முதலியவற்றிலும், ஸ்தாவர ஜங்கமாதிகளிலும் விளங்கும் ஈச்வர சேதனம் அந்தர்யாமி அல்லது ஸூத்திராத்மாவென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆதலின் இந்த ரதமானது பரமாத்மாவாகும் தியாகேசரது ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களாய் விளங்கி விராட், ஹிரண்யகர்ப்ப, ஸூத்திராத்ம ஸ்வரூபங்களை யுணர்த்துகின்றது. இதில் அதிஷ்டித்து விளங்கும் தியாகேசன் பரசிவமேயென்பதில் யாதோராக்ஷேபணையுமின்று.

திரிபுர ஸம்ஹார காலத்தில் பரசிவத்திற்கு ஏற்பட்ட ரதம் இத்தகையதே யாகும். வியஷ்டி ஜீவர்களது ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்களில் முறையே தோன்றுகின்ற ஆணவம், மாயிகம், கார்மிகம் என்னும் மும்மலங்களே திரிபுர அஸுரர்களாவரென்று பெரியோர் கூறுவர். அவர்களை ஒழிக்கப் பரசிவம் இத்தகைய விராட் ஸ்வரூபப் பிரஹ்மாண்ட வடிவ ரதத்தில் அதிஷ்டித்து விளங்கி, தனது ஞான நேத்திரத்தைத் திறந்து புன்முறுவல் செய்து ஒழித்தனர் என்பது பிரஸித்தமல்லவா? இந்த ஞான நேத்திரந்தான் ருத்ராக்ஷம் என்பது. இதுகாறும் மேலே கூறப்பட்ட பல ரஹஸ்ய தத்துவங்களை யுணர்த்தும் ரதத்தைத் தரிசித்து அதில் விளங்கும் பரசிவ வடிவத்தை அபரோக்ஷமாய் உணர்ந்தவர்களுக்கு ஜனன மரணங்களின்றிய சிவாநந்தப் பெருவாழ்வெய்துமென்பது வெள்ளிடைமலையாம். சிவம்

தேவலோகத்தில் ஸாக்ஷாத் ஸ்ரீய:பதியாலும் தேவராஜனுலும் பூஜிக்கப்பட்டு, மண்ணுலகில் முசுகுந்த சக்ரவர்த்தியின் சக்திக்கிரங்கி பூலோகத்துக்கு வந்து தர்ம ஸம்ரக்ஷணம் செய்யும் ஸ்ரீ தியாகராஜ மஹாராஜனுக விளங்கும் ஸ்ரீ பரம் பொருளாம் பசுபதியை சோழ சக்ரவர்த்திகளும், கீழ்க் கடையில் சோழநாட்டை ஆண்ட அரசர்களும், அன்பிலும் சிவத்தொண்டிலும் சிறந்த மெய்யடியார்களும் நாளது வரையில் திருவாரூர்ப் பூங்கோயிலில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ தியாகப் பெருமானுக்கு நித்திய நைமித்திக உத்ஸவாதிகளையும், தேவோபசார ராஜோபசார பூஜைகளையும், நடத்திக் கொண்டு வருகிறார்கள்.

மஹா விஷ்ணுவின் நெட்டுயிர்ப்பசைவினுலும் அவரது நாகணையின் பேருயிர்ப்பசைவினுலும் அவர் அறிதுயில் கொள்ளும் பால் கடலின் அலை அசைவினுலும் ஆடியே ஆட்டி வைக்கும் அலகிலா ஆடல் உகந்த ஸ்ரீ தியாகேசன் இந்தப்படிக்குள்ள தேவமானமாயுள்ள பூரதத்தில் ஆரோஹணித்து பர்வதம் அசைவது போலும் தேவாலங்கிருதமான அழகிய அற்புதத் திருத்தேரில் திருவீதி உலா வருவது கண் கொள்ளாக் காக்ஷியே கண்டால் பரவசம் ஆகும் என்பது உண்மை.

இப்புத்தகத்தில் உள்ள திருவாரூர் திருத்தேரின் தத்வ விமர்சத்தையும் படித்து அதன் உண்மை அழகையும் கண்டு களித்த பக்திமான்கள் பாக்யவான்களே. சிறப்பு வாய்ந்த மஹா ரதத்தை நுண்கலை நுகர்ச்சியுடன் அற்புதமாக அலங்கரித்தலும் தனக்குத் திருவருளால் கிடைத்த இடம், பொருள், ஏவல் முதலிய செல்வாக்கினுலும் விநயத்தாலும் சாதுர்யாதி பெருங் குணங்களாலும் மஹா ஜனங்களுடைய கூட்டுறவைக் கொண்டு திருத்தேரை ஒரே நாளில் நான்கு வீதிகளிலும் ஓட்டி வைத்து உத்ஸவம் செய்து வைக்கிற பெருங்கீர்த்தியும், சிவபுண்யமும், காலஞ்சென்ற பிரபுகுலதிலக ஸ்ரீமான் V. T. சோமசுந்தர முதலியார் அவர்களுக்கும் அவரது புதல்வன் செல்வச்சீமான் ராவ்பஹதூர் V. S. தியாகராஜ முதலியாரவர்களுக்குமே முற்றிலும் உரியது. அந்தக் குடும்பத்தினரே இந்த மாபெரும் திருப்பணியை நிறைவேற்றி வைக்கத் தகுந்த புண்ய சீலர்கள். இப்பேர்ப்பட்ட சிறந்த சிவ தருமங்களைச் செய்து கொண்டு ஸ்ரீ தியாகேசனின் தர்ம கர்த்தாவாக இந்தக் குடும்பம் வம்ச பாரம்பரியமாக வாழையடி வாழைபோல் ஆசந்திரார்க்கம் ஸகல ஸம்பத்துக்களுடன் நீடூழி வாழ வேண்டும் என்று சைவ உலகமே வாழ்த்துகிறது.

சுபம்.

பதிப்பாசிரியர்.

இயற்றியவர்: { மஹா வித்வான் சுப்பராமய்யர்
பிக்ஷாண்டார்கோவில்

ஸ்வரப்படுத்தியவர்: மருங்காபுரி கோபாலகிருஷ்ணய்யர்

ராகம் சாவேரி. ஆதி தாளம். மேளம் 15.

ஆரோகணம்: ஸ ரி ம ப த ஸ, ஸ நி த ப ம க ரி ஸ

ஷட்ஜம், சுத்தரிஷபம், சுத்தமத்தியமம், பஞ்சமம், சுத்ததெய்வதம்.

அவரோஹணம்: காகலிநிஷாதம், சுத்ததைவதம், பஞ்சமம், சுத்தமத்யமம்

அந்தரகாந்தாரம், சுத்தரிஷபம்,

ம்ருதுவான கருணரஸம் பொருந்திய ராகம் சாவேரி.

பல்லவி

எங்கேயிருந்தாலுந்துரை சாமிக்கேன்மேற்பட்ச
மிருக்குமடி யன்னமே

அநுபல்லவி

செங்கழநீரோடை சூழந்—திருவாநூர் தனில்வாழும்
தேவாதி தேவன்வசந்த தியாகராசனுக்கு (எங்

சரணம்

நானவனுக்குச்செய்த நன்றியிவ்வுலகுள்ள
நாளளவு மறக்கான்—ஒரு
நாளாகிலுமென்னை விட்டிதுவரையில்
நாழியும்பிரிந் திருக்கான்
ஏனேவேன்மேல்மோடி தானேசெய்துகொண்டு
மானேயிருக்கின்ற யிருந்தபோதிலும்
என்போல்வனுக்குக் கிடைக்குமோபோடி (எங்)

| | |
|---|---|
| ஆதிநாளேயிற்றலே | தோட்டேனக்குச்சொன்ன |
| வாணேதனக்கிரண்டு | செய்தான்—அவனுக் |
| காராகிலுமென்மீது | தூறுசொன்னபோதிலும் |
| அதைமனத்தினிலேன்றும் | வையான் |
| சூதுக்காரக்கள்ளி | சக்களத்தியென்மேற் |
| கொடுவழக்கெல்லாமோதி | துரைசாமியைமயக்கச் |
| சொக்குப்பொடியுந்தூவித் | துலேயாமோகந்தந்தாளே |
| சுகமாகத்தானேயவள் | வாழட்டுமேன்கண்ணுளன்(எங்) |

| | |
|---|---|
| எத்தேசகாலமுமச் | சித்தியுடனேகூடி |
| யிருந்தபோதிலுமென்னைத் | துப்பானவனே |
| இணைந்தறுபத்துநான்கு | காரணம்செய்யும்போது |
| மென்னைநினைந்துருகிச் | சுகிப்பான் |
| கோத்துப்பூங்குழலாளே | கோதாயேன்மலேக்கிறய் |
| கொள்ளேயாகு | மிச்சள்ளே |
| வெள்ளேயாய் | நாளேத்தெரியும் |
| உற்றநிலவேந்தாளு | மோளிகுன்றுதிருக்குமோ |
| ஓதும்சுப்பராமன் தமிழ்க் | குகந்தருளுந்தியாகேசன் (எங்) |



## பல்லவி

. . பத  சா - சாசா,  சா -- சாரிசநித . தபதா   . . ம . மா  . பத  நித : த ப ப ம காரிஸ
எங் கே  இரு ந்தா  லு . . ம்  துரை   சாமி  கே . . .  ன் மேற் பட்ச

## அனுபல்லவி

சா சா - சநிதா  ரி ச ரீ   மப தநிதமா - கா - ரீ ஸா
மி ரு  க்கும  டி . .   ய . . . ன் ன மே —
. ப த நீத — தா - பாத  த ப மா . தபதா  ப த சா நி  த ப தா , சநிதபதா  சா சா
செங் கழ  நீ - ரோ . டை . சூழும்  திரு வா .  ந ர் த . னில் . வாழும்
ச  ரி  கா  ரீ . சா  சநிதா  தபதாதசா  சா  சநிதா . பாத  தபம  தப  தா
தே .  வா  தி  தே  வ . ன்  வ . ச . ந்தா . த்யா . க . . ரா .  ச . . னு . க்கு -  (எங்கே)

## சரணம்

தா பா .  பா பாம  தப  தாப, பாம, பாதா — பாத  தபம  க ரீ ஸ
நா னு  ன க்கு - செய் த  நன்றி. யிவ்வு  லகு . . .  ள் ள
ச ரி  க ரீ  ஸா  ரி ஸா  ரிஸா ரீ  ப பா -- ச ரி மா  பாத  தப  பமமா  த ப தா
நா - ள ள வு  ம  றக்கான் ஒரு  நா.ளா  கி .  லு - - -  என்னை
ப . த . நி . த மா  கா  ரி ச —— ச ரி மா மா  ப மா  த ப தா  தா ——
வி ட் டி து .  வ ர யி ல்  நா . ழியும்  பி . ரி  திரு  க்கான்

## மத்திமகாலம்

நீ தாமா .  கா - க ரீ  ஸா ஸா  ச ரி மா  பா  மா  ப  பா
ஏ . னே .  என்மேல்  மோடி  தா . னே  செய்து  கொண்டு
ப  த  சா — ச  ரி  கா — ரி  ஸ  ரீ  சா  ச  சா  ச  நி  த ,  ப  தா
ம . னே  யி . ரு  க்கின்று  யி ரு ந் த  போ . .  திலும்
க  ரீ . ஸா  ச நி த ப தா ,  சா ரி ச நி த ப ம க ரி - ச ரி ம ப  த ப தா
என்போல்  அவனுக்கு  கி - -  டைக்குமோ  போ . . .  ஓ - - டி - -  (எங்கே)

# பொருளடக்கம்.

## தியாகராஜ லீலைகள்:—இரண்டாம் பிரிவு

## உத்தராயண லீலை

(முதற் பாகம்)

---

உ

திருச்சிற்றம்பலம்.

திருவாரூர்

# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

(முந்நூற்று அறுபது)

இரண்டாவது பிரிவு.

## (உத்தராயண லீலை)

(லீலை 51 முதல் லீலை 211 முடிய)

முதற் பாகம்.

### 51. தந்தையின் தலையைக் கொய்தவனுக்குத் தரிசனம் அளித்த லீலை.

ஸ்வர்க்கலோகத்தைப் பழிக்கக்கூடிய செல்வம் நிறைந்த திருவாரூர் நகரத்தில் ஒருகாலத்தில் யக்ஞஸேன மகாராஜன் அரசுபுரிந்து வந்தான். அவனுடைய நற்குணங்களையும், குடிகளிடம் அவனுக்கு உள்ள அன்பையும் அவன் நடத்திவரும் தர்ம நீதிமுறைகளையும் விசேஷ யாகம் செய்வதையும் கண்ட பெரியோர்கள் "அவனை பூலோக புரந்தரன்" என்றே நினைத்தார்கள்.

அவ்வரசன் ராஜ்ய காரியங்களையெல்லாம் கிரமமுறை தவறாமல் நடத்திவருகையில் ஒருநாள் சபையில் அவன் மந்திரிமார்களுடன் வீற்றிருக்கையில் திடீரென்று ஓர் அழுகுரல் கேட்டது. சற்றுநேரத்திற்குள் ஒரு வேதியன் கூக்குரலுடன் அரசன் முன்னிலையில் நின்று விம்மி விம்மியழுதான். காரணமென்னவென்று மந்திரி விசாரிக்க, வேதியன்

"பத்து பிராயமுடையவனுகவும், வேதமோதுகின்றவனுமான தன் புத்திரன் அன்று விடியற்காலையில் அகால மரணத்தை யடைந்துவிட்டான்'' என்று வருத்தத்துடன் கூறினன். அதைக் கேட்ட மன்னன் மிக்க துயரமுற்று, "இவ்வித ஸம்பவம் யாருடைய பாபத்தினுல் நேர்ந்திருக்கக்கூடும்? இதை யார் கண்டறிவார்? நாம் செய்த அநியாயமோ, இவ்வேதியன் செய்த கொடுந்தொழிலோ, முன்செய்த வினையோ தெரிகிலோம்" என்று துக்கத்துடன் அந்தணனுக்குப் பலவாறு தேறுதல் கூறி அவனையனுப்பிவிட்டான்.

மறுநாட் காலையில் யக்ஞஸேன மன்னன் தன் குலகுருவையும், மந்திரிகளையும் வருவித்து "இதுமுதல் நமது ராஜ்யத்தில் அகால மரணமும் மூப்பும் ஒருவருக்கும் நேரிடக்கூடாது. அதற்கு என்னசெய்யலாம்?'' என்று அவர்களை வினவினன். பிறகு குருவின் அபிப்பிராயப்படி மன்னவன் திருவாரூரி லுள்ள யோகி மடத்தில் அக்கினிபோன்ற ஒளியுடன் விளங்கும் ஒரு சிவயோகியின் பாதத்தில் நமஸ்காரம் செய்தான். அப்போது அவர் "நீர் யார்? எதற்காக நம்மிடம் வந்தீர்?'' என்று கேட்கவே மகாராஜன் தன் விருப்பத்தை அவருக்கு அறிவித்தான். உடனே சிவயோகி மன்னவனைப் பலவாறு பரீக்ஷைசெய்து "இவன் உலக க்ஷேமத்துக்காகவே முயற்சி செய்பவன்" என்றறிந்து அவன் வேண்டுகோளுக்கிணங்க ஒரு யாகம் ஆரம்பம் செய்தார். அந்த யாகத்துக்கு அநேக மஹரிஷிகளும், சுரோத்திரியர்களும், பிராமணர்களும் ஆயிரக் கணக்காக வந்து கூடினர்.

சிவயோகியார் நல்ல லக்கினத்தில் யாகத்தைத் தொடங்கினர். அரசனுடைய ஏவலின்படி ஹோம காரியங்களுக்கும் தானங்களுக்கும் வேண்டிய திரவியங்களை அந்த அந்த அதிகாரிகள் மிகுதியாகச் சேகரித்தனுப்பினர்கள். நாள்தோறும் ஹோமம் முடிந்தவுடன் பிராமண போஜனமும், தானங்களும் மிக விமரிசையாக நடந்தன. ஸாங்க வேதபாராயணமும் மந்

திரகலர்பஜபமும் குறைவற நடந்துவந்தன. யாகத்தின் முடிவில் சிவயோகியார் சில மந்திரங்களை உச்சரித்து அக்கினியில் ஆஹுதிசெய்து சருபாத்திரத்தில் மிகுந்த ஹவிர்ப்பாகத்துடன் சில ஓஷதிக் கொடிகளின் ரஸத்தைப் பிழிந்து சேர்த்து அதில் நெய், பால், தயிர், பாயசம் இவற்றையும் கலந்து கூர்ச்சத்தினுல் ப்ரோக்ஷணம் செய்து அப்பாத்திரத்திலுள்ள ஹவிஸ்ஸின் சேஷத்தை ஸ்ரீ தியாகராஜருக்கு நிவேதனம் செய்தார். உடனே அது அமிர்தமாயிற்று.

யாகம் முடியும்வரை மிக்க நியமத்துடன் இருந்த அரசன் யோகியாரின் பாதத்தில் நமஸ்கரித்துத் துதித்து முதலில் அவரால் அளிக்கப்பட்ட அந்த அமிர்தத்தைப் புசித்தான். பிறகு மந்திரி முதலிய பிரஜைகள் அனைவரும் புசிக்கும்படி ஏற்பாடு செய்கையில் அரசனுக்கெதிரே ஒரு பெரிய வெளிச்சம் தோன்றிற்று. "என்ன ஆச்சரியம் இது?" என்று அரசன் வியப்புற்று நிற்கையில் அச்சுடர் அரசனருகில் நெருங்கி "பூலோக புரந்தர யஜ்ஞஸேன ராஜனே! நீர் இவ்விதம் சிவயோகியின் மகிமையால் அமிர்தத்தை உண்டுபண்ணி விட்டீர். பூலோக ஜனங்களுக்கு அதை அளித்துவிட்டால் அவர்களுக்கு இனி மூப்பும், மரணமும் நேரிடா. மண்ணுலகத்தாரெல்லாரும் தேவர்கள்போல நீண்டகாலம் வாழ நேரிடும். தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் வித்தியாசம் போய்விடும். கர்வத்தினுல் மனிதர்கள் தேவர்களைப் பூஜிக்கமாட்டார்கள். கோடிக்கணக்காக தேவர்களைக் குறித்துச் செய்யும் ஹோமங்களும் யாகங்களும் உலகத்தில் அழிந்துவிடும். உம் கருத்து நல்லதேயாயினும் மானிடர்களுக்கு அமிர்தத்தை அளிப்பது பலகோடி நல்ல காரியங்களை அழித்துவிடும். ஆதலால் இவ்வமிர்தத்தை இனி ஒருவருக்கும் அளிக்கவேண்டாம். அந்த யோகியைக்கொண்டே அதை அக்கினியில் ஹோமஞ்செய்வதே நலம். இதற்கு இணங்காவிட்டால் நீர் தேவேந்திரனுடைய சாபத்துக்கும் நிக்கிரகத்துக்கும் ஆளாவீர்" என்று சொல்லி மறைந்துவிட்டது.

இந்த விருத்தாந்தத்தை அரசனும் சிவயோகியும் யாக மண்டபத்தில் உள்ளவர்களும் கேட்டு ஆச்சரியமடைந்து இந்திர தூதன் சொல்லியதே நல்லதென்று கூறினர். பிறகு மன்னவனும் யோகியைக்கொண்டு மிச்சமான அமிர்தத்தை யாகாக்கினியில் ஹோமஞ்செய்துவிட்டான். யாகத்துக்கு வந்து கூடினவர்கள் எல்லோரும் அரசனால் வெகுமானம் செய்யப்பெற்று மகிழ்ச்சியுடன் தத்தம் இடம் சேர்ந்தனர். அது முதல் திருவாரூருக்கு "க்ஷீரசப்திபுரம்" என்னும் பெயர் உண்டாயிற்று.

பூலோக புரந்தர மகாராஜன் சிலவருஷங்கள் சென்றபின் தன் குமாரனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்வித்து "இந்தப் பூமியும் நவரத்ன வகைகளும் அரசாங்கத்தைச் சேர்ந்தன. இது மந்திரிகளுடையது. இது பிராமணர்களுடையது. இது நம் சுற்றத்தாருடையது. இது தர்மதானத்துக்குரியது. இவ்வித ஏற்பாடு மாருமல் அரசுபுரிவாய்" என்று தன் குமாரனை ஸிம்மாஸனத்தில் அமர்த்திவிட்டுக் கனகாரண்யத்தின் அருகே ஒரு தபோவனத்தில் பர்ணசாலையொன்றை ஏற்படுத்திக்கொண்டு தன் அந்தியகாலத்தை ஈசுவரத்தியானத்தில் கழித்துவந்தான்.

இளவரசனுகி விளங்கும் கனகமஹாராஜன் ஸாமந்த பூபாலர்களின் கிரீடம் பாதங்களில் படும்படி ராஜ்யத்தை ஆண்டுவந்தான். தன் சிறுபிராயத்தில் தன் தந்தை ஒரு சிவயோகியைக் கொண்டு அமிர்தத்தை புண்டுபண்ணியதையும் தியாகேசருடைய மகிமைகளையும் தன் தாய் சொல்லக்கேட்டனன். உடனே தியாகேசருக்கு ஒரு விசேஷ அபிஷேகம் செய்விக்க எண்ணினுன். ஆனல் அதற்கு வேண்டிய திரவியத்துக்குத் தந்தை உத்தரவளிக்காமல் தன்னிடத்தில் வேறு வகைகளுக்காகக் குறிப்பிட்டு ஒப்புவித்தது வஞ்சனையென்றெண்ணி "அன்னையே! நான் என்ன செய்வேன்? ஹாடக நாதனுக்கு அபிஷேகம் செய்விப்பதற்கு உரிய திரவியத்தை என் தந்தை

அளிக்கவில்லையே. என் மனம் துடிக்கிறதே! என்னிடம் திரவியம் இல்லையே” என்று தாயை நோக்கிப் பரிதவித்தான். அவன் தாய் “மைந்தா! இவ்விதம் ஈசுவர பக்தியையடைந்த உனக்கு அநேக மங்களங்கள் உண்டாகும். நீ சிறந்து விளங்குவாய். உன் தந்தை உயிருள்ளவரையில் ராஜ்ய விஷயத்தில் உனக்கு யாதொரு அதிகாரமும் இல்லை. ஆகையால் நீ இப்போதே தந்தையை அணுகி ஈசனுக்காகத் திரவியம் வேண்டுமென்று கேள். அவர் கொடாவிடில் நிர்ப்பந்தம் செய். ஈசுவர கைங்கர்யத்துக்கும் தானத்துக்கும் விரோதம் செய்கிற தாய் தந்தையரை வதைத்தாலும் தோஷமில்லையென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். ஆகையால் நீ உன் தந்தையைக் கொண்டே இக்காரியத்தை நிறைவேற்றிக்கொள்வாயாக” என்று கூறினள்.

கனகமஹாராஜன் அவ்வண்ணமே தந்தையிடம் சென்றான். அம்மன்னவன் மற்றொரு யோகம்செய்யச் சங்கற்பித்துக் கொண்டபடியால் எதிரில்வந்து நிற்கும் மைந்தனைக் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. நாலைந்து நாள் வரையில் அப்படியே கண்ணைத் திறவாமலிருந்த தந்தையைக் கண்ட கனக மஹாராஜன் “என்ன அநியாயம்! இவரோ கண்களைத் திறக்கவில்லை. இன்னும் எவ்வளவுகாலம் செல்லுமோ தெரியவில்லை. என் சரீரம் நிலைபெற்றிருப்பது என்ன நிச்சயம்? ஆதியந்தமற்றவராயும் நமது பாக்கியமாகவும் இங்கு விளங்கும் தியாகேசனுக்கு விசேஷ அபிஷேகம் செய்விக்கத் திரவியமில்லாத பாவியாக நிற்கிறேனே. ஈசனுக்காக நான் பொருள் யாசிப்பதை ஏன் இவர் உணரவில்லை. ஏன் எனக்கு மறுமொழி சொல்லவில்லை. நற்காரியத்துக்கு விரோதம் செய்யும் இவரைக் கொன்றுவிட்டாலும் பாபம் நேரிடாது” என்று கடுஞ்சினமடைந்து தன் கையிலிருந்த வாளைத் தந்தையின் கழுத்தில் வீசினன். பிரபு அத்தருணத்தில் அவன் முன் தோன்றி “ஓ ராஜகுமாரா! நீ உனது தகப்பன் தலையைக் கொய்யவேண்டாம். குளிர்ந்த அபிஷேகம் செய்விப்பதனால்

உண்டாகும் திருப்தியை நான் அடைந்துவிட்டேன். உன் பக்தியின் மேன்மையைக் கண்டு மகிழ்ந்தேன்'' என்று சொல்லிக்கொண்டே க்ஷணகாலம் கோடி சூரியப் பிரகாசமுள்ள தமது ஜோதிஸ்ஸைக் காண்பித்தார். அப்பொழுதே அவ் வரசனுக்கும் யோகம் முடிந்தமையால் அரசனும் மகனும் ஒரே காலத்தில் ஈசுவர ஸ்வரூபத்தைக் கண்டு பரமானந்த மடைந்து நெடுநாள் நல் வாழ்வு வாழ்ந்திருந்தனர்.



## 52. தாஸிமூலம் ஞானம் அளித்த லீலை.

தக்ஷிணகங்கை யென்னும் காவிரி நதியின் தென்கரையில் விளங்கும் திருவாரூர் நகரத்தில் ஒருசமயம் வசந்தகாலம் தோன்றியது. உத்தியான வனங்களிலுள்ள கொடிகளாகிய கன்னியர்க்கு அழகிய தளிர்களாகிய புது வஸ்திரங்களை உடுத்தித் தென்றற் காற்றாகிய நர்த்தகன் அவற்றை வெகு விநோதமாக நர்த்தனம் செய்விக்கையில் அவ்வசந்த காலத்தின் சிறப்பைக் குயில்கள் கூவவும் புஷ்பங்களின் மகரந்தத்தை யுண்டு களித்த வண்டுகள் பாடவும் சுபமுகூர்த்தங்களின் வாத்ய கோஷங்கள் திசைகளில் முழங்கவும் அக்காலம் தோன்றியது. ஆரூர் நாதன் வடிவழகுக்குத் தக்கபடி தொண்டர்கள் வஸந்தோத்ஸவ உபசாரங்களைச் செய்தனர். அப்போது நாகபுரத்திலுள்ள ஒரு நடனமாது ஆரூர் நாதருக்கு எதிரே நின்று ஆகேடம், பிரகேளிகம், குஞ்சிதம் முதலிய பரதநாட்டிய அபிநயங்களைச் செய்தாள். உத்ஸவத்தில் கமலநாயகியையும் தியாகேசரையும் தரிசிக்க வந்தவர்களுள் நாகதக்ஷன் என்னும் சிற்பியும் ஒருவன். அவன் மட்டும் அத்தாசியின் அபிநயத்தையும் அழகையும் கண்டு அவளிடம் மனம் குழைந்தவனானன். உத்ஸவம் முடிந்ததும் பாலசந்திரிகை என்னும் அக்கணிகை தன திருப்பிடமாகிய நாகபுரத்திற்குப் புறப்பட்டாள்.

திருவாரூரையே இருப்பிடமாகக்கொண்ட நாகதக்ஷன் என்னும் சிற்பி பாலசந்திரிகையைப் பின்தொடர்ந்து சென்றான். அப்பொழுது அவள் தன்னைத் தொடர்ந்து அவன் வருவதைக்கண்டு "நீர் எங்கு வருகிறீர்?" என்று கேட்க, அவன் "ஓ ரூபவதியே! உன்னை நான் ஊர்வசியென்றே நினைக்கிறேன். நேற்று நீ பிரபுவின் வஸந்தோத்ஸவத்தில் காட்டிய அபிநயத்தின் சிறப்பையும் உன் அழகையும் கண்டு என் மனம் உன்னைப் பற்றுகிறது. நீ என்னைக் காப்பாற்ற வேண்டும். இல்லாவிடின் நான் உயிர் வைத்திருக்க முடியாது. நீ எனக்குக் காமரஸத்தை யளிக்கவேண்டும்" என்று அவள் பாதத்தில் விழுந்தான்.

அப்போது அக்கணிகை "ஓ நாகதக்ஷா! நீர் விசுவ கர்மாவின் குலத்தில் உதித்தவர். உமது கல்வியின் பெருமையை மன்னவரும் புலவர்களும் மெச்சுவார்கள். யானோ ஓர் அற்ப தாசிப்பெண். நீர் என்னிடம் இவ்வாறு காதல்கொள்ளலாகாது. இவ்வுலகில் காமத்தின் பயனை முக்கியமென்று கருதியவர்க்கு நற்கதியுண்டாகுமோ! திருவாரூர் நாதனுடைய பாதகமலங்களில் பணிசெய்வீர். உமது சிறந்த தக்ஷண வித்தையால் ஈசனுக்குப் பல்லக்கு முதலிய வாகனங்களைச் செய்து வைத்தால் உமது நற்பதவிக்கு அது துணையாகும். மாதரின் மாயவலையில் சிக்கிக்கொண்டால் நற்பதவி கிட்டாது." என்று பலவாறு உபதேசித்தும் அவன் கேட்கவில்லை. தாசியுடன் நாகபுரத்துக்கே சென்றான். தன் திரவியமெல்லாவற்றையும் நாளடைவில் தாசியினிடம் அவன் கொடுத்து அவளது மோகத்தில் மூழ்கிக் கிடந்தான்.

இவ்வாறு சிலவருஷங்கள் சென்றன. தாசிக்குக் கொடுப்பதற்கு நாகதக்ஷனிடம் பொருள் ஒன்றுமில்லை. அப்போது ஏக்கமுற்று அவன் தன் கஷ்டத்தைத் தன் தம்பியிடம் முறையிட்டான். வரகுணனென்னும் அத்தம்பி மிகவும் சிறந்த ஞானி. தமயனிடம் விசேஷ பக்திகொண்டவன். தமயன்

கட்டளையை தேவர்களின் ஆஞ்ஞை போலவும், ரிஷிகளின் ஆஞ்ஞை போலவும், மன்னனுடைய கட்டளைபோலவும், தாய் தந்தையர்களின் கட்டளைபோலவும் எண்ணும் தன்மையுள்ள வன். சிற்ப வேலையிலும், யந்திர வேலையிலும் விசேஷ ஞான முள்ளவன். "எப்போதாவது ஒருநாள் ஈசன் நமது தமய னுக்கு நற்புத்தியளித்து நல்வழிப்படுத்த வேண்டுமேயன்றி நாம் என்ன சொல்லியும் அவன் ஏற்கமாட்டான். அந்தத் தாசியும் நம் தாய்தந்தையரும் எவ்வித நன்மை கூறினும் இப் போது இவனுக்குப் பயன்படாது. பார்வதிபாகனே, கங்கா தாரா, துர்புத்தியுள்ள என் தமயனை நல்வழிப்படுத்துவது உமது கடமை" என்று மனத்தில் தியானம்செய்து தமய னுக்கு வந்தனம்பண்ணி, "ஏ ஜ்யேஷ்ட ப்ராதாவே! நீர் வருத்தப்பட வேண்டாம். தாசிக்குக் கொடுக்க உம்மிடம் பொருள் இல்லாவிடில் நான் அளவற்ற திரவியம் சம்பாதித்து உனக்குத் தருகிறேன். உமது கருணை என்மீது இருக்கு மாயின் ஒரு கயிற்றால் நான் ஒரு மயில்பொறி செய்து அதன் மேல் ஏறிச்சென்று திருவாரூரிலுள்ள சோழராஜன் மாளி கைக்குள் ஜன்னல் வழியே சென்று அங்குள்ள அளவற்ற திர வியங்களை அபகரித்துக்கொண்டுவந்து தருகிறேன்" என்று கூறினான்.

நாகதக்ஷன் மிக மகிழ்ந்து தம்பியைக் கட்டியணைத்து ஆசிகூறியனுப்பினான். வரகுணன் தன் யுக்தியினால் ஒரு மயில்பொறி செய்து அதில் ஏறி அரண்மனைக்குள் ஜன்னல் வழியே சென்று ரத்தினங்களையும், பீதாம்பரங்களையும் அப கரித்துவந்து தனயனிடம் கொடுத்து வந்தான். நாள்தோறும் பொருள்கள் சோரம்போவது தெரிந்து சந்தேகங்கொண்ட அரண்மனைக் காவலாளர்கள் சிலர் தூக்கமின்றி மறைந்து கவனித்தார்கள். வரகுணன் மயிற்பொறியில் ஏறிவருவதை யும் போவதையும் கண்டனர். பிறகு ஒரு வலையை அவனுக்குத் தெரியாமல் விரிக்கவே வரகுணன் ஒருநாள் தப்பவழியில்லா மல் அதில் சிக்கிக்கொண்டான். அவனைச் சிறையில் இட்

டார்கள். காலையில் தம்பியைக் காணாத நாகதக்ஷன் தம்பி பிடிபட்டிருப்பானென்று பலவாறு புலம்பினான். அன்றுமுதல் வேசியின் போகம் அவனுக்குக் கிடைக்கவில்லை. அவன் தம்பியை நினைத்துப் பலவாறு சஞ்சலப்பட்டான். கடவுளை நினைத்தான். பக்தரக்ஷகனான ஹாடகேசுவரர் அன்றிரவில் தாசியின் கனவில் தோன்றி "நீ அந்த நாகதக்ஷனுக்கு நம் மகிமையை உரைத்து ஞானோபதேசம் செய்" என்று கூறி மறைந்தார். உடனே தாசி தக்ஷனையழைத்து, "ஓ சிற்ப சிகாமணியே, நீர் மிக்க கிலேசத்தை அனுபவிக்கிறீர். ஈசு வரத் தியானம் செய்தால் சஞ்சலமேற்படுமோ? என்மீது அள வற்ற காதல் கொண்டதால் இவ்வாறு கஷ்டம் அனுபவிக்கிறீர். வேதத்தின் பொருளாயும், வேதாந்தத்தின் பொருளாயும், முனி வர் மனம் தேடி ஓடும் சுடராயும், பக்தர் வினையைத் தம் வினை போல் நீக்குபவராயும், உலகத்துக்குத் தாயும் தந்தையும் சுற்ற மும் இன்பமும் செல்வமுமாகி விளங்கும் தியாகேசர் க்ஷண காலத்துக்குமுன் என் கனவில் தோன்றி என்மூலம் உமக்கு உபதேசம் செய்தார். இன்னும் சில தினங்களில் உமது தம்பி யும் சிறையிலிருந்து வெளிவருவான். இதுமுதல் நீர் வைராக்கி யத்தையும் ஈசுவர பக்தியையும் கைப்பற்றும். உமக்கு நற்கதி யுண்டாகும்" என்று கூறினாள். இவ்விதம் ஈசுவரனுடைய மகி மையை தாசி உரைக்கக் கேட்டவுடன் அந்த நாகதக்ஷனுக்கு நல்ல ஞானம் பிறந்தது. உடனே தாசிக்கு நாகதக்ஷன் அஞ்சலி செய்து தன் ஜனன பூமியாகிய திருவாரூரை அடைந்து அங்கே வறுமையினால் வருந்தியிருக்கும் தாய் தந்தையரை வணங்கி ஸ்ரீ தியாகேசர் ஆலயம் சென்று திவ்ய மூர்த்தியைத் தரிசித்து ஆனந்தக் கண்ணீர்விட்டுத் துதிசெய்து தியாகப் பிரபுவுக்கு தன் சிற்பத்திறமை முழுவதையும் காட்டி ஒரு சித்திரப்பல்லக்கு வேலைசெய்து வந்தான். அப்போது அவன் "நம் தம்பியாகிய வரகுணன் தானே இதை நன்றாக அமைக்க வல்லவன். அவன் இப்போது எங்கே இருக்கிறானோ?" என்று வருந்தினான். தியாகேசர் அரசனுக்குக் கனவை

அளித்து வரகுண தக்ஷனை விடுவித்தார். பிறகு இரண்டு சிற்பிகளும் ஒன்றுசேர்ந்து யோசித்து அபூர்வமான பல்லக் கொன்றைக் செய்தனர். அதில் ஹாடகநாதன் அரசன்மூலம் உத்ஸவங்களை நடத்திக்கொண்டு தொண்டர்களைக் காப்பாற்றி விளங்கினர்.



## 53. மன்னனுக்காகச் சோரனை மாய்த்த லீலை.

பலவகையான மலர்கள் நிறைந்த சோலைகளும் குளிர்ந்த தடாகங்களும் சூழ்ந்த காஞ்சி நகரத்தைப் பரிபாலனம் செய்யும் நரவர மகாராஜன் தக்ஷிண தேச யாத்திரையாகப் புறப்பட்டு இராமேசுவரத்தை நோக்கிச் சென்றான். மார்க்கத்தில் விளங்கும் திருவாரூரில் தியாகராஜ மூர்த்தியைத் தரிசிப்பதற்காகத் தேரிலிருந்து அவ்விடத்தில் இறங்கினன். அம் மகாராஜன் தென் தேச யாத்திரை முடிந்து மறுபடியும் தன திருப்பிடம் வந்து சேரும் வரையில் எவ்வளவு நாளானாலும் ஒவ்வொருநாளும் ஒரு தானமாவது செய்யவேண்டும் அல்லது ஒரு நற்காரியப் பிரதிஷ்டையாவது செய்விக்கவேண்டும் என்ற ஸங்கல்பத்துடன் யாத்திரை கிளம்பி அந்தத் திருவாரூரை யடைந்தபொழுது அக்ஷய திருதியை புண்ணியகாலம் நேர்ந்தது. அப்பொழுது அங்கே விளங்கும் கமலாலயமென்னும் ஸரோவரத்தில் ஸ்நானம்செய்து பித்ருக்களுக்குத் தர்ப்பணங்கள் முதலியவற்றைப் புரிந்து அந்தணர்களுக்குப் பற்பல தானங்களைச் செய்தான்.

அந்த புண்ணிய காலத்தில் அந்த க்ஷேத்திரத்தில் ஒரு லிங்க மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்வித்து அம்மூர்த்திக்கு விசேஷ அபிஷேகத்தையும் நடப்பித்தான். நாலைந்துநாள் ஈசனை வந்தனம் செய்துவிட்டு ராமேசுவரத்துக்குப் போகும் வழியில் ஒரு நதிக்கரையில் இறங்கினன்.

ஒவ்வொரு நாளும் பகல்வேளையில் அவ்வரசன் தன் மூதாதைகள் பூஜித்துவந்து தனக்குக் கிடைத்திருக்கும் தேஜோலிங்கத்துக்கு அபிஷேக நைவேத்தியம் செய்துமுடித்தபிறகே தானும் தன் தேவியரும் போஜனம் செய்வது வழக்கம். அதுபோல் அத்தினத்திலும் அந்நதிக்கரையிலுள்ள ஒரு வில்வமரத்தடியில் நரவர மகாராஜன் ஈசுவர பூஜையைச் செய்யத்தொடங்குகையில் சிவதாசனென்னும் ஒரு பிராமணன் கூக்குரலிட்டுக்கொண்டு " ஓ மகாராஜா, நீர் தினந்தோறும் இந்த யாத்திரைகாலத்தில் விசேஷ தானம் செய்கிறீரென்று சொல்லக்கேட்டுக் குடும்பியாகிய நான் உம்மிடத்திலிருந்து ஏதேனும் தானத்தை யடையலாமென்றெண்ணி உம்மிடம் வந்தேன். நற்குணங்களுக்கு இருப்பிடமாயும், தானபாத்திரங்களின் குணவிசேஷங்களை நன்குயறிந்தவராயுமுள்ள நீர் பக்தி விநயத்துடன் எனக்கு அளித்த தானத்தை நான் பெற்றுக்கொண்டு கொஞ்சதூரம் செல்லுகையில் இப்பொழுது இவ்வனத்திலிருந்து சில திருடர்கள் ஓடிவந்து திடீரென எங்களைச் சூழ்ந்துகொண்டு நீர் கொடுத்த ஹாரங்களையும், கடகங்களையும் அணிந்திருக்கும் என் மக்களையும், மனைவியையும் இதோ இழுத்துக்கொண்டு போகிறார்களே. இப்போது யான் என்னசெய்வேன். இந்த அநியாயத்தை யாருடன் சொல்லுவேன் " என்று கதறினான். மந்திரிகள் அதை மன்னனுக்கு அறிவித்தனர். அத்தருணத்தில் அரசன் பூஜையை ஆரம்பித்து மனதைத் தியானத்தில் செலுத்தியபடியால், பிராமணனுடைய அழுகுரலையும், அமைச்சரின் வேண்டுகோளையும் அரசனுடைய செவிகள் ஏற்றுக்கொள்ளவில்லை.

அப்போது மந்திரிகள் "அரசனை இவ்விடத்தில் தனியாக விட்டுப்போய்ச் சோரர்களை முறியடித்துத் திரும்புவோமென்றால் அதற்குள் தனிமையில் ஒருவராயிருக்கும் இவருக்கு என்ன தீங்கு நேரிடுமோ; ஆதலால் நாம் அரசனைத் தனியே விட்டுச் செல்லலாகாது. நமது வீரர்களை யனுப்பி அத்திருடர்களை மாய்ப்போமானாலும் அதற்கு இப்போது இவ்விடத்தில்

அவ்வளவு வீரர்கள் நம்மிடம் இல்லை. நம் அரசர் ஒருவரே பதினாயிரம் வில்லாளிகளுக்கு நிகரானவர். இவர் பூஜையில் அமர்ந்துகொள்கையில் இவ்வுலகமெல்லாம் உறங்கிவிட்டது போல் காணப்படுகிறது. இத்தருணத்தில் மறையோனும் தன் குடும்பம் அழிகிறதென்று கதறுகிறானே! இந்தக் கஷ்டத்துக்கு என்ன செய்வோம்'' என்று மந்திரிகளும் மற்றுமுள்ள வேலைக்காரர்களும் வருத்தமடைந்து, இத்தருணத்தில் தருமமே நமக்குத் துணையாக வேண்டுமென்று நாகபூஷணனைத் தியானித்துக்கொண்டு அவ்வந்தணனுக்குச் சில சமாதான வார்த்தைகளை உரைத்து நின்றனர். அப்போது தலையில் ஜடையையும், கழுத்தில் ருத்திராக்ஷமாலையையும், சரீரத்தில் விபூதியையும், கையில் கபாலத்தையும், வாயில் பஞ்சாக்ஷர கீர்த்தனத்தையும் ஆபரணமாய்த் தரித்து விளங்கும் ஒரு ஸன்னியாசி மந்திரிகளுக்கெதிரே வந்தார். அவரை மந்திரிகள் அர்க்கியம் பாத்தியம் முதலியவைகளால் உபசரித்து அவரெதிரில் அந்தணன் விஷயமாக வாடிய முகத்துடன் நின்றனர். அதுகண்ட ஸந்நியாசி "ஓ மந்திரிகளே, நீங்கள் ஏன் வீணாய் வருத்தப்படுகிறீர்கள்? உங்களுடைய அரசன் நாலைந்து தினங்களுக்கு முன் அக்ஷய திருதியை புண்ணிய காலத்தில் ஹாடகேசுவர க்ஷேத்திரத்தில் ஒரு தேஜோ லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தபடியால் இன்று இப்பிராமணனுடைய சொத்துக்களை அபகரிக்கச் சோரர் வருகையில் அந்த லிங்க ஸ்வரூபத்தில் விளங்கும் மெய்ப்பொருளாகிய தியாகராஜனே ஒரு வேடனுருவத்தோடு தோன்றித் தன் வில்லால் திருடர்களை முறிய அடித்துக்கொன்று இவ்வேதியன் பொருளையும் குடும்பத்தையும் அங்கே பாதுகாக்கிறார் பாருங்கள். இப்போது உங்கள் அரசன் யோகத்திலிருந்தாலென்ன? பூஜையிலிருந்தாலென்ன? நித்திரையில் இருந்தாலென்ன? அவரது பக்தி விசேஷத்தைக் கண்ட பசுபதியே வேடனுருவாகத் தோன்றிப் பகைவரை முறித்தார். இனி நீங்கள் விசாரப்படவேண்டாம். அப்பாம்பொருளை அவ்விடத்திற் பாருங்கள்" என்று சொல்லிவிட்டு வேறோரிடம் போய்விட்டார்.

நித்திய பூஜை முடிந்தபிறகு தெளிந்த மனதுடன் எழுந்திருந்த நரவர மகாராஜா அமைச்சரால் இவ்விருத்தாந்தத்தைக் கேட்டு வியப்புற்று அவ்வந்தணனையும் அமைச்சர்களையும் அழைத்துக்கொண்டு அவ்வனத்தின் நடுவே போகும்போது, வேதியன் மக்களையும் மனைவியையும் தேற்றிக்கொண்டு ஒரு வேடுவன் நிற்பதை எல்லோரும் கண்டார்கள். "இன்றுதான் நமக்கு ஸுதினம்; நமது பாக்கியம்" என்று பரமேசனை ஸ்துதி செய்துகொண்டு அவர்கள் கொஞ்சங் கொஞ்சமாய் நெருங்கவே அவ்வேடனும் கொஞ்சங் கொஞ்சமாய் ஒதுங்கி மறைந்துசென்று தேஜோலிங்கத்தில் ஐக்கியத்தையடைந்தார். இவ்வதிசயத்தைக் கண்ட சிவதாசன் முதலியவர்கள் ஸ்ரீ புண்ணிய வ்ரத க்ஷேத்திரத்திற் செய்த தானத்தின் மேன்மையையும் அங்கு பிரதிஷ்டை செய்த லிங்கத்தின் பிரபாவத்தையும் பலவாறு புகழ்ந்தார்கள். அரசனும் தான் சங்கற்பம்செய்து கொண்டு வந்த யாத்திரை முறைப்படி தெற்கே சென்றான். சிவதாசன் தன் குடும்பத்துடன் சுகமாக வாழ்ந்திருந்தான்.



## 54. தொண்டரைத் தூஷித்தவனுக்குப் புத்தி புகட்டிய லீலை.

மகேந்திர மலையின் அருகே நவரத்தினபுரம் என்னும் சிறந்த நகரமொன்று உண்டு. ஆகாயத்தை யளாவிய மாளிகைகள் நிரம்பிய அந்நகரத்து வியாபாரிகளுள் முதல்வனாக 'தனபதி' என்றொரு வைசியன் இருந்தான். அவன் செல்வத்தில் குபேரனுக்குச் சமானனாக இருந்ததால் அந்நகரத்தார் அவனை 'தனபதி' என்னும் பெயரால் வழங்கினார்கள்.

தனபதி செல்வத்திற் சிறந்தவனானாலும் சற்பாத்திரத்தில் தானஞ்செய்தால் நன்மையுண்டாகுமென்ற நம்பிக்கை அவ

னுக்கு இல்லை. அவனுக்கு ஈசுவர பக்தியும் கிடையாது. அவனுடைய குமாரிக்கு விவாகம் செய்யவேண்டிய பருவம் தோன்றியபடியால் மதுரைமாநகரில் உள்ள ஒரு வைசிய குமாரனுக்குத் தன் குமாரியை விவாகம் செய்விக்க நிச்சயித்து அவ்விவாகத்தைத் தன்னுடைய மாளிகையில் மிக்க ஆடம்பரங்களுடன் சிறப்பாக நடத்தினன். முகூர்த்த சமயத்தில் தம்பதிகளை ஆசீர்வாதம்செய்து தனபதியிடமிருந்து தக்ஷிணைகளையும் வெகுமதிகளையும் அடையலாமென்று நாற்றிசைகளிலிருந்தும் ஆயிரக்கணக்கான பிராமணர்கள் வந்து கூடினர். தனபதியோ கலியாணத்தின் முடிவில் தாசிகளுக்கும், வாத்தியக்காரர்களுக்கும் பாடகர்களுக்கும், கேளிக்கை செய்பவர்களுக்கும் தன் சுற்றத்தார்களுக்கும் விசேஷ ஆடையாபரணங்களையும் புஷ்பமாலைகளையும், திரவியங்களையும் அவர்கள் வேண்டாம் வேண்டாமென்று சொல்லும்வரையில் அவ்வளவு திருப்தியுண்டாகும்படி கொடுத்தான். ஆனல் வேதத்தில் வல்ல வேதியர்களையும், சிவபக்தர்களையும் குலகுருவையும் அச்சமயம் இகழ்ந்து பேசியதோடு தகுந்த மரியாதையும் செய்யவில்லை. “ஆயிரக்கணக்கான இவர்களுக்கு யார் மணவோலை எழுதினர்கள். இந்தப் பிராமணர்களுக்கே தானம் வாங்குவதிலும், தக்ஷிணை பெறுவதிலும் இளமை முதல் விசேஷ ஆவலுண்டு. பாபத்துக்கு இவர்கள் பயப்படார். சிலசமயம் பாபத்தொழிலைச் செய்து தாம் செய்யவில்லையென்றும் பொய்யுரைப்பர். இவர்களுக்கு எவ்வளவு திரவியம் அளித்தாலும் ஆசை அடங்காது” என்று இவ்வாறு இகழ்ந்து பேசினன். அதனற் புண்பட்ட மனத்துடன் அவர்கள் எல்லோரும் பரமேசுவரனைத் தங்கள் ஹிருதய கமலத்தில் தியானம் செய்துகொண்டு ‘நமக்கு இதுவும் ஒரு கால பலனேயன்றி வேறில்லை’ என்று மனத்தில் சாந்தியடைந்து தங்கள் தங்கள் இருப்பிடம் சென்றனர்.

சிலவருஷங்கள் சென்றன. தனபதியின் மனைவி காலகதியடைந்தாள், அவள் பிரிவைத் தாங்கமுடியாத தனபதி இனி

மேல் தன் வாழ்நாளை எவ்விதம் கழிக்கலாமென்று சில பந்துக்களுடன் யோசனை செய்தான். சாஸ்திர ஞானமுள்ள ஒரு பிராமணர் அப்போது தனபதியை நோக்கி "ஓ வைசிய ரத்தினமே! உமது கீர்த்தியானது இவ்வெட்டுத் திக்குகளிலும் பரவி விளங்குகிறது. ஈசுவர கடாக்ஷத்தினால் உம்மிடம் அளவற்ற செல்வம் நிறைந்திருப்பதால் செல்கதிக்கு அனுகூலமாக நல்ல தர்மங்களைச் செய்வது நலம். நீர் இந்த விருத்தாப்பியத்தில் மற்றொரு பாலிகையை விவாகம் செய்துகொள்வதனால் யாது பயன்? மனத்தை அடக்குவதே சிறந்த யோகம். சற்பாத்திரத்தில் ஈகையே முக்திக்கு வித்தாகும். இதுதான் உலகில் அறிவுள்ளோர் உரைக்கும் உபதேசம். அப்பால் உமது இஷ்டப்படி செய்யும்" என்று உரைத்தார். அவர் கூறியதைக் கேட்டுக்கொண்டு அருகிலிருந்தவர்கள், "ஓ தனபதியே, நீர் விவர்கத்தை மனத்தில் நினைக்கும்போது இந்த பிராமணன் சற்றும் பயமின்றி அனுசிதமான வார்த்தைகளையும் மோக்ஷம் என்பதையுமே விளங்கச் சொல்லுகிறார். இவ்வித உபதேசத்துக்கு இது தக்க காலமன்று. ஆகையால் நீர் அவ்வார்த்தைகளைக் கேட்கவேண்டாம். காஞ்சி நகரத்திலிருக்கும் சோமகாந்தை என்னும் வைசியப் பெண்ணை விவாகம் செய்துகொண்டு சுகமாய் வாழ்வது நலம்" என்று துர்ப்போதனை செய்தார்கள்.

அதைக்கேட்டு வேதியரின் உபதேசத்தில் நம்பிக்கை கொள்ளாத அவ்வைசியன் தன் கர்வத்தினால் தன் வயதைப்பற்றியும் யோசியாமல் அந்தச் சோமகாந்தையை விவாகம் செய்துகொண்டு அப்பெண்ணின் லீலைகளிலேயே விருப்பமுற்று புண்ணிய காலங்களையும், விரததினங்களையும் மறந்து காமபரவசனாகி வாழ்நாட்களைச் சிற்றின்பத்திலேயே கழித்து வந்தான்.

தனபதியின் இக்கருத்தை மாற்றி அவனுக்கு நன்னெறியை உணர்விக்க தியாகேசர் எண்ணினார். தனபதி தன் இரண்

டாம் மனைவியாகிய சோமகாந்தையை அழைத்துக்கொண்டு புத்திரார்த்தமாய்ச் சிதம்பர க்ஷேத்திரத்திற்குச் சென்றான். அங்குள்ள பொன்னம்பலத்தில் விளங்கும் நடராஜ மூர்த்தியைத் தரிசித்து அப்பால் காவிரி நதியில் நீராட எண்ணித் தென்திசையை நோக்கிச் சென்றான்.

நடுவழியில் வெய்யிலின் கொடுமையால் தாகத்தையடைந்து வாடிய தன் காதலிக்கு ஜலம்கொண்டுவரச் சென்ற வேலைக்காரர்கள் சீக்கிரம் திரும்பிவராமல் சற்றுத் தாமதிக்கவே தானே ஜலம் கொண்டுவருவதாகச் சொல்லிச் சென்ற வைசியன் வனத்தின் நடுவேயுள்ள தடாகத்தில் இறங்கிப் பாத்திரத்தில் தண்ணீரைக் கொண்டுவருவதற்குள் திடீரென்று ஆகாயத்தில் நீர்கொண்ட மேகம் கிளம்பிப் பயங்கரமான இடி மின்னல்களுடன்கூடி நெருக்கமான மழை தாரைகளைப் பொழிந்தது அம்மின்னல்களையும், இடியையும் கண்டு பயந்த சோமகாந்தை "நாதா, நாதா' என்று கதறினாள். அவ்வாறு மழை பெய்யும்பொழுது அவளுக்கு என்ன தீங்கு நேரிட்டதோ வென்று திகிலடைந்த தனபதி வெகுவேகமாக ஓடி வருகையில் வழிதவறிவிட்டது. தப்பு வழியில் அவன் வேகமாக ஓடும்பொழுது அவன் ஒரு திக்கிலும் அவள் ஒரு திக்கிலுமாகப் பிரிந்துவிட்டனர். அவ்விருவரும் காட்டில் மூன்று நாள் வரையில் ஒருவரையொருவர் தேடிக்கொண்டிருந்தனர்.

தனபதியைவிட்டுப் பிரிந்த சோமகாந்தை காட்டில் அலைந்துகொண்டு "ஈசா! நீயே ரக்ஷிக்க வேண்டும்" என்று தென்திசையை நோக்கிச் சென்றாள். அப்போது பக்தவத்ஸலரான தியாகேசர் ஒரு வேடனாகவும் கமலநாயகி ஒரு வேடச்சியாகவும் உருவெடுத்துக்கொண்டு அவளுடைய வழியில் குறுக்கே சென்று, "ஓ பெண்ணே! நீ யார்? ஏன் இந்தக் காட்டில் தனியே செல்லுகிறாய்?" என்று கமலநாயகியார் கேட்கவே, சோமகாந்தை தன் விருத்தாந்தங்களை அவர்களிடம் சொல்லி தன்னைக் காப்பாற்றவேண்டுமென்று கேட்டுக்

கொண்டாள். அவர்கள் அப்படியேயாகட்டு மென்று வாக்களித்து அவளை அழைத்துச் சென்று திருவாரூரை யடைந்து ஒரு மடத்தில் அவளை இருக்கச் செய்து மறைந்தனர். சோமகாந்தை தனக்குத் துணையாக வந்த தம்பதிகள் திடீரென்று மறைந்து விட்டனரே என்று முதலில் வருத்த முற்றனள். அவர்களுடைய உதவியினால் காட்டைக் கடந்து ஒரு நகரத்தை அடைந்தது பற்றி ஆறுதலுற்றாள். அம் மடத்தில் ஒரு ஸந்நியாசி இருந்தார். அவர் சோமகாந்தையின் விருத்தாந்தங்களை ஞான திருஷ்டியால் அறிந்து கொண்டவராயும் அக்கினிக் கொப்பான ஒளி வீசப் பெற்றவராயும் தோன்றி, " ஓ பெண்ணே! இனி மேல் நீ பயப்பட வேண்டாம். உனக்கு நேர்ந்த துன்பம் பசுபதியின் கடாக்ஷத்தினால் நீங்கி விட்டது. வெகு சீக்கிரத்தில் உன் கணவன் இங்கே வந்து உன்னை அடைவான். சில ஆண்டுகளுக்கு முன் உன் பிராண நாதன் கல்யாணகாலத்தில் பிராமணர்களையும் யோகிகளையும் பழித்தும் ஸற்பாத்திரத்தில் தானம் செய்யாமலும் இருந்தமையால் உங்களுக்குப் பிரிவு ஏற்பட்டு இவ்விதமான கஷ்டம் உண்டாயிற்று. உனக்குத் துணையாக வந்த வேட தம்பதிகள் இந்நகரத்தில் விளங்கும் தியாகேசரும் கமலாதேவியுமாவர்" என்று ஆறுதல் கூறினார். உதய காலத்தில் சோமகாந்தை கமலாலயத்தில் நீராடி வேதியர்களுக்கு ஸ்வர்ண தானம் செய்து ஹாடகேசுவரரைத் தரிசித்துத் தன் சரீரத்தில் இருந்த எல்லா ரத்தினாபரணங்களையும் ஈசன் பாதத்தில் ஸமர்ப்பித்தாள். பிறகு மூன்று தினங்களில் தனபதியும் தட்டுத் தடுமாறி ஒரு வழியைக் கண்டு நடந்து வந்து திருவாரூரை யடைந்து அம்மடத்துக்கு வந்து தன் காதலியைக் கண்டான். சோமகாந்தை தன் நாயகனைப்பார்த்து நடந்த அற்புதங்களையெல்லாம் சொன்னாள். அதைக் கேட்ட தனபதி தங்களுக்கு நேர்ந்த அபாயங்கள் ஈசன் கருணையினால் நீங்கியதுபற்றித் தியாகேசரைப் புகழ்ந்து அவர் பால் பக்தி கொண்டு லக்ஷக்கணக்கான திரவியங்களைச் செலவு செய்து ஸ்ரீ தியாகப் பிரபுவுக்கு அநேக மண்டபங்களை

யும் ஆலயத்துள் விமானங்களையும் நிர்மாணம் செய்து உத்ஸவங்களை நடப்பித்துச் சிறப்புடன் விளங்கினான்.



## 55. தண்ணீரில் அமிழ்ந்த தையலைக் காத்த லீலை.

நன்றாக மலர்ந்த சண்பகம், மல்லிகை, முல்லை, அசோகம், கேஸரம், நாககேஸரம், புன்னாகம், ஹிந்தாலம் முதலிய மலர்களின் வாசனை கமழ்கின்ற காஞ்சிமா நகரில் வசுதரன் என்னும் பூபாலன் பிரஜைகளைப் பரிபாலனம் செய்து வந்தான்.

மார்கழி மாதத்தில் புண்ணிய தினமாகிய திருவாதிரை நாளில் அரண்மனையிலுள்ள குல குருவைக் கொண்டு அரசன் கொன்றையஞ் சடையானுக்கு விசேஷமான அபிஷேகஞ்செய்வித்தான். குல குரு அரண்மனையில் விளங்கும் கைலாசபதிக்கெதிரே அபிஷேக மேடையில் ஸ்நபநம் பரப்பி ஆயிரத்தெட்டுக் கலசங்களை வைத்து நெய், பால், தயிர், தேன், சந்தனம், குங்குமம் முதலிய வாசனைத் திரவியங்களாலும் புண்ணிய தீர்த்தங்களினாலும் சாங்கோபாங்கமாய் அபிஷேகம் செய்தார். அப்போது அரச தம்பதிகள் ஸங்கவ காலம் முதல் அபராஹ்ன காலம் வரையில் ஆகாரம் புசியாமல் நியமத்துடன் இருந்தார்கள். அப்போது ராஜ மஹிஷிக்குப் பசியினாலும் சிரமத்தினாலும் முகம் வாடியது. அதுகண்ட அரசன் கோபமடைந்து குல குருவைக் குறித்து, “வேதாத்யயனம் செய்த இவ்வேத ஜடர்கள் இவ்வாறு கால விளம்பம் செய்கிறார்கள். அதனால் நமது தேவிக்குப் பசியும், தாகமும், சிரமமும் வளருகின்றன. இந்தப் பூஜை முடிவதற்குள் தேவிக்குப் போஜனமளிக்கலாமோ வென்றால் அதற்கும் மனம் துணியவில்லை. இக்குருவும் பூஜையை விரைவில் நிறைவேற்றவில்லை. இவ

ரைத் தண்டித்தாலும் தோஷமில்லை '' என்று அஞ்ஞானத்தாலும் பத்தினியின் பாலுள்ள அன்பினுலும் குருவைப் பலவாறு இகழ்ந்தான்.

அதைக் கேட்ட குருவும் கோபமடைந்து, "இந்தப் பத்தினியின் பிரிவை இந்த ஜன்மத்தில் நீ ஒரு நிமிஷ காலமாவது அனுபவிக்கக் கடவாய்'' என்று சாபமளித்தார். மன்னவன் அதைச் சற்றும் கவனியாமல் போய் விட்டான்.

சில மாதங்களுக்குப் பிறகு ஈசுவரானுக்கிரகத்தால் பட்ட மஹிஷி கருவுற்ருள். அதனை யறிந்த வசுதர மன்னன் பும்ஸவநம் முதலிய சுபங்களைத் தக்ககாலத்தில் நடத்திப் பிரம்ம நிஷ்டர்களுக்கும், சுரோத்ரியர்களுக்கும், மற்றும் எல்லா பிராமணர்களுக்கும் அநேக தானங்கள் செய்து தேவதா பூஜைகளையும் சிறப்பாய் நடத்தினுன். பத்து மாதங்களும் கடந்த பிறகு பட்ட மஹிஷியினிடத்தில் ஸகல ராஜ லக்ஷணங்களும் அமைந்த ராஜகுமாரன் உதித்தான். அது கண்டு அரசன் மிகவும் மகிழ்ச்சியுற்று ஜாதகர்ம நாமகரணுதி ஸம்ஸ்காரங்களை உரிய காலத்தில் செய்தான். அநேக தானங்கள் செய்தான். குழந்தை மிக அழகாய் வளர்ந்து வந்தது. அதனுல் அரச தம்பதிகளுக்கு உண்டான மகிழ்ச்சிக்கு அளவே யில்லை. மேன்மையுடன் வளரும் அக்குழந்தையை ஒரு நாள் தொட்டியில் தூங்கச் செய்து விட்டு அதன் பக்கத்தில் பட்ட மகிஷியும் நித்திரை செய்தாள். இரவு பதினைந்து நாழிகையான பிறகு காவலாளிகள் நித்திரை செய்தனர். நகர வீதிகளில் ஜன சஞ்சாரம் அடங்கி விட்டது. நகரம் முழுவதும் நித்திரையில் அடங்கியிருந்தது. அச் சமயத்தில் ஆகாய மார்க்கமாய்ப் பறந்து வந்த ஒரு பிசாசு அரண்மனைக்குள் நுழைந்து தொட்டிலில் உறங்கும் குழந்தையின் அருகே சென்றது. உடனே அங்குள்ள தீபத்தையணைத்து விட்டு அக்குழந்தையைத் திடீரென்று தூக்கிக் கொண்டு ஓட ஆரம்பித்தது. அது கண்ட ராஜ பத்தினி கூக்குரலிட்டு அப்பிசாசின் பின்னே தொடர்ந்து

சென்றாள். பிசாசு வெகு வேகமாய்க் குழந்தையை ஏந்திக் கொண்டே அவ்வரண்மனையிலுள்ள வாவியின் ஒரு பக்கத்தில் இறங்கிற்று.

ராஜமகிஷியானவள், "ஐயோ, என் பாலனை இக்கொடிய பிசாசு தண்ணீரில் அமிழ்த்தி விட்டுத் தானும் மூழ்குகிறதே. இந்தப் பாதகப் பிசாசுக்கு ஏழைப் பெண்ணாகிய என்னிடம் கொஞ்சமும் இரக்கமில்லையே. என்ன அநியாயம். மஹாராஜாவும் அருகில் இல்லை. காவலாளிகளும் உறங்குகிறார்கள். இந்த அர்த்த ராத்திரியில் பாலகனை யபகரிக்கும் இப்பிசாசை மாய்ப்பார் ஒருவரும் இல்லையே. சந்திர சேகரா! பார்வதீ நாதா! பக்த ரக்ஷகா! நான் என்ன செய்வேன்! என்னைக் காப்பது உமது கடமை" என்று விம்மி யழுதாள். சற்று நேரம் சென்ற பிறகு குழந்தையைக் காணவில்லை. "தண்ணீரில் இருக்கும் ஜந்துக்களுக்கு குழந்தை இரையாகி விட்டதே! இனி என்ன செய்வேன்! குழந்தையை விட்டுப் பிரிந்து உயிரை வைத்திருப்பதை விட இக்குளத்திலேயே பாவியுயிரை மாய்த்துவிடுவது உத்தமம்" என்று எண்ணி ராஜமகிஷி தன் பிராணனைத் திருணமாக எண்ணி அக்குளத்தில் அமிழ்ந்து விட்டாள்.

இவ்வளவையும் பார்த்துக் கொண்டிருந்த காவலாளிகள் மிக்க பயமடைந்து அழுது கொண்டு அரசனிடம் சென்று முறையிட்டார்கள். தன் காதலியும் குழந்தையும் இறந்து விட்டனரென்று அரசனும் விம்மி விம்மி யழுது குளத் தண்டை நின்று, "பரமேசா! பக்தரக்ஷகா! திரிபுர ஸம்ஹாரா! உமது கருணையினால் தோன்றிய என் பாலகனும் பத்தினியும் காணாமல் இத் தடாகத்தில் மறைந்து போயினர். இத்துடன் என் வம்சமே முடிவடைந்து விட்டது. இப்பிசாசு என் வம்சத்துக்கு யமனாக வந்து தோன்றிற்று. என் குலத்துக்கு தீபம் போல் விளங்கும் பாலகன் இறந்த பிறகு நான்

எதற்காக ஜீவனை வைத்திருக்க வேண்டும். நானும் இப்பொழுதே சரீரத்தை மாய்த்துக் கொள்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே தடாகத்தில் குதித்தான். அப்போது பக்த ரக்ஷகனாகிய ஹாடகநாதன் ஒரு கிழவனாகத் தோன்றி அரசனைத் தடுத்து, "ஓ ராஜேந்திரா! நீர் இக்குளத்தில் விழ வேண்டாம். பிராணனை மாய்த்துக் கொள்ளவேண்டாம். சில வருஷங்களுக்கு முன் குல குருவை இகழ்ந்தபடியால் அவரது சாபத்தினால் பத்தினியின் பிரிவு இப்போது க்ஷண காலம் ஏற்பட்டது. இன்னும் இரண்டு மூன்று க்ஷணங்களில் உமது பட்ட மகிஷி வெளிக் கிளம்புவாள். முன் ஜந்மத்தில் கந்தர்வனாக இருந்து குல குருவினிடம் அபசாரப்பட்டுப் பிசாசாகப் பிறந்து திரிந்து இப்போது உமது குழந்தையைக் கையினால் தூக்கியபடியால் அவனது சாபம் நீங்கி விட்டது. அவன் அழகிய கந்தர்வ சரீரத்துடன் கந்தர்வ லோகத்துக்குப் போகிறான். உம் குழந்தைக்கும் ஹானி இல்லை. ஆதலால் நீர் உம் உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டாம்" என்று சொல்லிவருகையில் வசுதர மஹாராஜனுக் கெதிரே ஒரு ஜ்யோதிர்மண்டலம் தோன்றி கொஞ்சம் கொஞ்சமாய் நெருங்கி வந்து அவ்வரசனைச் சுற்றிப்பிரதக்ஷணம் செய்து, "ஓ பூபாலா! நான் குருவைப் பழித்தபடியால் இவ்வளவு காலம் பிசாசு ஜன்மத்தில் இருந்தேன். இன்று என் சாபம் முடிந்து என் சரீரத்தைப்பெற்றேன். உம் வம்சாங்குரமான பாலகனும் சோழ மண்டலத்தில் காவிரியின் தென்கரையில் விளங்கும் கமலாலயத்தின் கரையில் உயிருடன் விளங்குகிறான். சீக்கிரம் அங்கே போய் அவனைப் பெற்றுக் கொள்ளும். என்னைப் போலவே நீரும் குருவின் அபசாரத்தினால் க்ஷண காலம் இவ்வித கஷ்டத்தை யனுபவிக்க நேர்ந்தது. இனி தியாகேசர் கருணையால் எல்லா மங்களங்களும் உண்டாகும்" என்று சொல்லிக் கொண்டே கந்தர்வன் மறைந்தான். அப்பொழுதே பட்ட மகிஷி தடாகத்திலிருந்து எழுந்தாள். அவளை அழைத்துக் கொண்டு வசுதரன் திருவாரூரை அதி

விரைவில் அடைந்து கமலாலயக் கரையில் அழுது கொண்டிருக்கும் குழந்தையைக் கண்டு ஆனந்த மடைந்து எடுத்துக் கொண்டு ஸ்ரீ தியாகேசரைத் தரிசித்து ஜன்ம பலனை யடைந்து க்ஷேமலாபங்களுடன் வெகு நாள் வாழ்ந்திருந்தான்.



## 56. செல்வத்தின் நிலைமையைத் தெளிவித்த லீலை.

கைலாஸபதிக்கு நித்திய வாஸஸ்தலமாகிய திருவாரூரில் மித்திர பாலன் என்னுமொரு வைசியன் இருந்தான். இளமைமுதல் அவன் தருமத்தையும் வைராக்கியத்தையும் மோக்ஷத்தையும் இகழ்ந்தும் செல்வத்தின் சிறப்பையே புகழ்ந்தும் பொழுதுபோக்கி வந்தான். அவன் இப்படியிருக்கையில் மூன்று வருஷகாலம் சோழநாட்டின்கண் கால மழைபெய்ய வில்லை. அதனால் ஜனங்கள் உணவுப்பொருள்கள் அகப்படா மல் மிகவும் வருந்தினார்கள். ஆயிரக்கணக்கான அந்தணர் முதலியவர்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடி அங்கே இருந்த மகாராஜனையடைந்து திரவியங்களைப் பெற்றுக்கொண்டு செல்வார்கள். மற்றும் சிலர் மித்திரபாலன் போன்ற தனிகர்களிடம் வந்து யாசித்து வேண்டிய பொருள்களைச் சேகரித்துச் செல்வார்கள்.

அக்கஷ்டகாலத்தில் இவ்விதம் வீதிகளில் ஜனங்கள் யாசகம் செய்வதை நோக்கி, "ஓ ஜனங்களே! உங்களுக்கு ஏன் கொஞ்சமேனும் நல்லறிவு உண்டாகவில்லை. உங்களுக்கு உள்ள புத்தியைக் கொண்டு வியாபாரம் முதலியன செய்து தனம் சம்பாதித்துக் கொள்வீர்களானால் இக்கஷ்ட காலத்தில் சுகமாக வாழலாமே. செல்வமில்லாவிடில் இவ்வுலகத்தில் எந்த வேலையைச் சாதிக்கமுடியும். திரவியமில்லாதவனுக்கு

நோயுண்டாகும். குடும்பத்தில் கலகமும் அபகீர்த்தியும் ஏற்படும். செல்வமுடையவனுக்கு ஜயமும், தைரியமும், வீரமும் உண்டாகும். செல்வமில்லாதவனுக்குத் துன்பங்களே வளரும். செல்வவானுக்கு மங்களங்கள் வளர்ந்தோங்கும். தந்தையும் தாயும் தாரமும் மக்களும் சுற்றமும் செல்வமில்லாதவனை இகழ்வர். தேவர்களின் நோக்கும் அவனுக்கு உண்டாகாது. சிறந்த கவிகளும், பெரியோர்களும், மன்னர்களும் செல்வமுடையவனை மேன்மைப்படுத்துவார்கள். செல்வமற்றவன் பாபத்தொழிலைச் செய்ய முயல்வான். அவன் எவ்வாறு பிறருக்கு உதவிசெய்வான். செல்வத்தினாலேயே ஆன்மாவைக் காப்பாற்றக்கூடும். செல்வத்தினாலே யாக காரியமும், பித்ரு காரியமும், தேவ காரியமும் குறைவின்றி முடியக்கூடும். ஆகையால் இக்கலியுகத்தில் சாமம் தானம் பேதம் தண்டம் என்னும் நான்குவித உபாயத்தினாலும் தனத்தைச் சம்பாதிப்பதே சுபங்களுக்குக் காரணமாகும். பிராமணரும், க்ஷத்திரியரும், வைசியரும், சூத்திரரும், ஸங்கரஜாதியும், மற்றுமுள்ள ஜாதியரும் தினந்தோறும் திரவியத்தை யடைய வேறு வகையால் முயற்சி செய்ய வேண்டும். திரவியத்தினால் ஆகாத காரியத்தையும் சாதிக்கலாம். அது நியாயமன்று" என்று இவ்வாறு செல்வத்தின் சிறப்பைப் புகழ்ந்துகொண்டு திருவாரூர் வீதியில் சஞ்சரிக்கும் ஜனங்களை வலுவில் அழைத்து, "பக்தி மார்க்கத்தையும் வைராக்கியத்தையும் மோக்ஷத்தையும் நம்பாதீர்கள். செல்வத்தையே தேடுங்கள்" என்று உபதேசம் செய்து வந்தான்.

அவன் இவ்வாறு நடந்து வருகையில் தியாக மூர்த்தி ஒரு நாள் அவன் கனவில் தோன்றி, "ஓ மித்திரபாலா! ஜனங்களுக்கு நீ செல்வமே நல்லதென்று உரைப்பது கண்டு சந்தோஷிக்கிறேன். நமது ஆலயத்திலுள்ள யாக மண்டபத்தில் வடக்கு குண்டத்தின் அருகே நவரத்தினங்கள் நிறைந்த ஒரு கலசத்தை வைத்திருக்கிறேன். அதையும் நீ எடுத்துக்

கொள்" என்று கூறி மறைந்து விட்டார். அப்பொழுதே விழித்துக் கொண்ட மித்திர பாலனும் மன மகிழ்ந்து விடியற் காலத்திலேயே தேவாலயத்தை அடைந்து அங்கே ஜனங்கள் வந்து கூடுவதற்கு முன்பே யாக சாலையில் நுழைந்து தேடிப் பார்த்து அந்தக் கலசத்தைக் கண்டு மகிழ்ந்து அதைத் தலையில் வைத்துக் கூத்தாடிச் சந்தோஷ மடைந்து காவலாளிகளுக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டு போய் விட்டான். அதிலுள்ள விலையுயர்ந்த நவரத்தினங்களை விற்றும் சில ரத்தினங்களின் அழகைக் கண்டு களித்துக் கொண்டும் இருந்தான். அப்போது செல்வத்தினால் அவனுக்கு அதிக கர்வம் உண்டாயிற்று. துஷ்டர்களும் விடர்களும் காமுகரும் அவனை வந்து அணுகினார்கள். இப்படி துர்ப்புத்தியை அடைந்த மித்திர பாலன் நல்வழியில் தனத்தைச் செலவிடாமல், துஷ்டர்களைச் சேர்த்துக் கொண்டிருந்தபடியால் அவர்கள் இவனுடைய செல்வத்தைக் கண்டு பொறாமை கொண்டனர். அவர்களிற் சிலர் சில தினங்களுக்கு முன் இராஜ மாளிகையிற் காணமற் போன நவரத்தினங்களெல்லாம் மித்திர பாலனிட மிருப்பதாக அரசனுக்கு அறிவித்தார்கள்.

அரசன் மித்திர பாலனை வருவித்து விசாரணை செய்து அவன் அணிந்திருந்த விலை பெற்ற ரத்தினங்களைக் கண்டு, "இவை உனக்கு எவ்வாறு கிடைத்தன?" என்று கேட்க அவன் தான் தேவாலயத்திலிருந்து ரத்தின கலசத்தை எடுத்து வந்ததை மறைக்க முடியாமல் உண்மையை உரைத்தான். "தேவஸ்தான திரவியத்தை அபஹரிப்பது நியாயமா? ஆனதால் இந்த விலையுயர்ந்த நவரத்தினங்கள் சில நாளைக்கு முன் நமது மாளிகையில் காணமற் போன ரத்தினங்களாக இருந்தாலும் அவைகளை நான் மறுபடி எடுத்துக் கொள்ள மாட்டேன். தேவாலயத் திருப்பை யடைந்தது தேவாலயத் திரவியமேயாகும்" என்று கூறி அப்போதே மித்திரபாலனு

டைய ரத்தினங்களை யெல்லாம் பிடுங்கி ஸ்ரீ தியாகேசருக்கு அளித்துவிட்டான். ரத்தினங்களை இழந்த வைசியன் துக்கத்துடன் வீட்டுக்கு வந்தான்.

உயர்ந்த ரத்தினங்கள் தன்னிடம் உள்ளனவே யென்னும் கர்வத்தினல் அவ்வைசியன் தன் பழைய செல்வத்தையும் சரியாகக் காப்பாற்றவில்லை. சில துஷ்டர்கள் அவன் செல்வத்தை அழித்துவிட்டனர். இவ்வாறு சில தினங்களுக்குள் அவன் செல்வம் முழுவதும் சின்னபின்னமாய் அழிந்தது. அவன் ஏக்கம் அடைந்தான். இப்போதே அந்த ரத்ன கலசமும் வீட்டிலிருந்து காணமற் போயிற்று. இப்படி அவனுக்குப் பலவழிகளில் துக்கங்கள் ஏற்படவே அவ்வைசியன், "செல்வம் நிலையற்றது. இதுவரை செல்வத்தை நம்பி வாழ்நாளை வீணில் கழித்துவிட்டேனே! செல்வமும் நம்பியவனைக் கைவிட்டு இப்போது எங்கேயோ ஓடி ஒளிந்ததே! ஆகையால் செல்வம் சிறந்ததன்று. வைராக்கியமும் மோக்ஷமுமே சிறந்த சுகத்தை அளிக்கும்" என்று நினைத்து அவ்வூரிலுள்ள ஒரு யோகியை உபாசித்து அவரிடமிருந்து மோக்ஷத்தின் மேன்மையை அறிந்து உலகதாபமொன்றுமின்றி விளங்கினன்.

* * *

(57 முதல் 59 வரை மூன்று லீலைகளின் கையெழுத்துப் பிரதிகள் காணப்படவில்லை. இதைப்பற்றி முதற் பகுதியின் முகவுரையில் கூறியிருப்பதை நேயர்கள் கவனிக்கவும்)

* * *



4

## 60. வைசியனுக்குக் காட்சி கொடுத்த லீலை.

முனிவர் மனம் தேடியோடியும் காண்டற்கரிய பரம் பொருள் இவ் வுலகினர் எல்லோரும் இக் கலியுகத்தில் எளிதில் உய்யும் வண்ணம் காவிரி நதியின் தென் கரையில் திருவாரூர் க்ஷேத்திரத்தில் தோன்றி விளங்குகிறார்.

முன்பு ஒரு காலத்தில் மாருதிபுரம் என்னும் ஓர் ஊரில் பொன்னணியான் என்னும் பெயருள்ள வைசிய னொருவன் இருந்தான். பூர்வ புண்ணிய வசத்தினால் அவனுக்கு மிக்க செல்வ முண்டு. அதனால் அவன் சிறிதும் கர்வமடையாமல் பல நற்குணங்கள் அமைந்தவனாகி பெரியோர்களிடமும் தேவர்களிடமும் பக்தி பூண்டு, அறமே தனக்குப் பெருந்துணையாகு மென்று எண்ணி இரப்போர்களுக்கு இல்லையென்னாமல் வஸ்திரங்களையும், திரவியங்களையும், தானியங்களையும் அவர்களுக்குத் திருப்தி ஏற்படும்வகையில் அளிப்பான்.

பசியென்று வந்தவர்களுக்குத் தேவாமிருதத்துக்கு ஒப்பான உணவையளிப்பான். யாசகர்கள் எவ்விதமான பொருள்களை விரும்புகிறார்களோ அவ்வித பொருள்களை அப்பொழுதே தாமதமின்றி அளிப்பான். முகமலர்ச்சியுடன் யாசகர்களிடம் மரியாதைசெலுத்திக் கௌரவ புத்தியுடன் தானம் செய்வான். அவனை யாசகர்கள் கர்ணனென்றும், காமதேனுவென்றும், கற்பக விருக்ஷமென்றும் நினைத்தார்கள். அவனுடைய பெருமையையும், கீர்த்தியையும் அறிந்து நானாதேசங்களிலிருந்தும் யாசகர்கள் கும்பல் கும்பலாய் வந்து தமது விருப்பங்களை நிறைவேற்றிக்கொள்வார்கள்.

ஒரு வருஷம் சித்திரை மாதத்தில் சூரிய கிரகண புண்ணியகாலம் வந்தது. அப்போது பொன்னணியான் வெகு சமீபத்தில் இருக்கும் திருவாரூர் சென்று கமலாலயத்தில் நீராடித் தன் பிதிர்க்களுக்குத் தர்ப்பணம் முதலியன செய்து அந்தணர் முதலிய எல்லோருக்கும் யார் யார் எது எதை யாசித்

தார்களோ அவர்களுக்கு அது அதைக் கொடுத்தான். அத ஞல் அவனுக்கு 'தானபதி' என்ற பெயர் உண்டாயிற்று. தேவாலய கைங்கர்யமென்றும், ஜீரணோத்தாரணமென்றும், குருவின் பிக்ஷாடனமென்றும், மடத்துக்காகவென்றும், பித்ரு ச்ராத்தமென்றும் கல்யாணமென்றும் உபநயனமென்றும் குடும் பத்துக்கென்றும் பசு ரக்ஷணத்துக்கென்றும் இவ்வாறு பல காரணங்களைச் சொல்லிக்கொண்டு வரும் யாசகரின் கூட்டத் துக்கு அவரவர் வேண்டியபடி பிரீதியுடன் பொருள்களைக் கொடுத்து வந்ததில் அவனுக்கு விசேஷ கீர்த்தி உண்டாயிற்று.

அந்த வைசிய தானபதியை ஒருமுறை பரீக்ஷிக்கவேண்டு மென்று தியாகேசர் எண்ணினர். அவன் திருவாரூரில் தங்கி யிருக்கும்போது ஒருநாள் தியாகேசர் பிரம்மசாரி வேடம் பூண்டு அவன் மாளிகைக்குச் சென்றார். அவர் வருவதை யறிந்து தானபதி எதிர்கொண்டழைத்து வந்து ஆஸன மளித்து வணங்கி, "அடியேனல் ஆகவேண்டியது என்ன வென்று கட்டளையிட்டால் செய்யக் காத்திருக்கிறேன்" என்று பணிவுடன் கூறினன். அவர் அவனுக்கு ஆசிகூறி, "ஓ! தானபதியே, உமது நற்கீர்த்தியை அறிந்த நான் உம்மிட மிருந்து ஒரு பொருளைப் பெற்றுக்கொண்டு போகலாம் என்று ஆலோசித்து வந்திருக்கிறேன்" என்று கூறவே வைசியன் முகமலர்ந்து "தேவரீர் வேண்டிய பொருளை அளிக்கிறேன். கருணைசெய்து அதைப் பெற்றுக்கொள்ளவேண்டும். உலகத் திலுள்ள ஸத்புருஷர்களின் மகிமையை தேவரீர் திருவாயி லிருந்து கேட்க விரும்புகிறேன். கிருபை செய்யவேண்டும்" என்று வணங்கி நின்றான். அப்போது பிரம்மசாரி ஆக வந்த வர் உபதேசம் செய்யத் தொடங்கினர்:-

1. ஸத்புருஷர்கள் தானம் செய்வதற்காகச் செல்வத்தைத் தேடுவார்கள்.

2. தானம் செய்யாதவர்களின் கைக்கு அழகில்லை.

3. ஈசுவர குணங்களைப் பாடாத மாந்தர்களின் முகத் துக்கு அழகில்லை.

4. ஈசுவர குணங்களைத் தியானம் செய்யாத புருஷரின் மனதுக்குச் சுத்தி இல்லை.

5. புஷ்பங்களை அளிக்காத மரங்களுக்கு அழகு இல்லை.

6. தானம் செய்யாத செல்வம் குறைந்தேவிடும்.

7. பஞ்சேந்திரியங்களை அடக்காதவனுக்கு நற்கதி கிடைக்குமா?

8. பரமேசுவரனிடம் பக்தி செய்யாதவனுக்குத் தத்துவம் எவ்வாறு தோன்றும்?

9. பெரியோர்களிடத்தில் மரியாதை செய்பவனே சிறந்தவன்.

10. ஸத்பாத்திரத்தில் செய்யும் தானம் பயனைத்தரும்.

11. யாசகர்களுக்கு இல்லையென்று சொல்லாதவனே உலகத்தில் சிறந்தவன்.

12. புண்ணிய க்ஷேத்திரத்தில் வசிப்பதே சிறந்த யாகமாகும்.

13. பொறுமையை ஆபரணமாக உடையவனே பாக்கியசாலி.

14. தர்ம மார்க்கத்தைக் காப்பதே தானத்தினும் சிறந்தது.

15. மூடர்களுடன் சேர்ந்த சுபுத்தி கொக்குக் கூட்டத்துடன் சேர்ந்த ஹம்ஸம்போல் நிந்திக்கப்படுவான்.

16. விநயமற்ற கல்வி பாழாகும்.

17. ஸத்புருஷர்கள் சிந்தாமணிபோல் தேடத்தகுந்தவர்கள்.

18. புண்ணியசீலர் இகழ்ந்ததைப் புத்தியுள்ளவன் ஆதரிக்கமாட்டான்.

என்று இந்தப் பதினெட்டு விதமான தத்துவங்களினாலேயே இவ்வுலகம் படைக்கப்பட்டிருக்கிறது. சாஸ்திரங்க

ளெல்லாம் இவ்வித தத்துவங்களையே கூறுகின்றன. இவற்றையே நீ தத்துவமென்று அறிந்துகொள்வாய். தானபதியே! நான் சீக்கிரமாகப் போகவேண்டும். காலதாமதம் செய்வதற்கு இது தகுந்த சமயமன்று. நான் கேட்ட பொருளை எப்போது கொடுப்பாய்'' என்று அந்த ப்ரம்மசாரி கேட்கையில், ''இந்த நிமிஷத்திலேயே தேவரீர் கைக்கமலத்தில் நீருடன் அளிக்கிறேன். தேவரீர் வேண்டும் பொருள் யாது? எவ்வளவு வேண்டும். சொல்லப் பிரார்த்திக்கிறேன்'' என்று தானபதி கேட்டான். அப்போது தியாகேசர் தமது மாயையினால் அவனது பெட்டியில் இருந்த செல்வங்களெல்லாம் மறையும்படி செய்துவிட்டு ''ஓ தானபதியே! என் விவாகத்துக்காக நூறு ரத்தினங்கள் வேண்டும். அதைக் கொடுத்தாற்போதும்'' என்றார். அப்படியே ஆகட்டுமென்று வாக்களித்துவிட்டு அந்தத் தானபதி தன் பொக்கிஷத்தைத் திறந்து பார்த்தான். ஒரு ரத்தினத்தைக்கூடக் காணவில்லை. ''நேற்று 2 லக்ஷம் ரத்தினங்கள் இருந்தனவே. அவையெல்லாம் இப்போது எங்கே போயின. இப்போது யான் என்ன செய்வேன்! யாசகப் பிரம்மசாரிக்கு நான் நூறு ரத்தினங்களை எவ்விதமாய் அளிப்பேன்!'' என்று எங்கும் தேடிப் பார்த்தான். ஒன்றுகூடக் கிடைக்கவில்லை. ''நான் அஸத்யவானாக இன்று போய்விடுவேன் போல் தோன்றுகிறதே! நான் என்ன செய்வேன்'' என்று அழுதான். பெருமூச்சுவிட்டான். தன் தர்மபத்தினியுடன் சொல்லிக் கதறினான். இதற்குள் பிரம்மசாரி ''எங்கே எங்கே'' என்று துரிதப்படுத்தினார். தானபதி மனம் துடிக்கலானான். கணவனுக்கேற்ற மனைவி, ''நாதா! கவலைப்படவேண்டாம். சில மாதங்களுக்கு முன்பு ஒரு ஸன்னியாசி வந்து உம்முடன் பேசிக்கொண்டிருக்கையில் உமது தானச்சிறப்பைப் புகழ்ந்துவிட்டு உமது வலக்கண்ணில் பத்மராக ரத்தினங்கள் இருப்பதாகச் சொன்னாரல்லவா? அந்த உமது வலது கண்ணைப் பிடுங்கியாவது இந்தப் பிரம்மசாரிக்கு ரத்தினங்களை அளியுங்கள். உமது கண் போனாலும் போகட்டும். கொடுக்கிறேன் என்று சொன்ன தானத்தைக் கொடுத்தே

தீர்வது நமக்கு நலம்" என்று தைரியமாகக் கூறினுள். அது கேட்ட தானபதி மிக்க மகிழ்ச்சியுற்றுப் பிரம்மசாரியிடம் ஓடி வந்து "ஸ்வாமி! நேற்று வரையில் என் பெட்டியில் இருந்த ரத்தினங்கள் இன்று எவ்விடமோ மறைந்து போய்விட்டன. ஆனுலும் கவலை இல்லை. என் வலக்கண்ணில் இரத்தினங்கள் இருப்பதாக ஒரு முனிவர் சொல்லியிருக்கிருர். இந்த என் வலக்கண்ணை நான் தேவரீருக்குத் தானம் செய்துவிட்டேன். கண்ணைப் பிடுங்கிக் கொள்ளவேண்டும்" என்று கூறுகையில் தியாகேசர் அதற்கும் இசைந்து கையை நீட்டி அவன் கண்ணைப் பிடுங்கினுர். இவ்வளவு உயர்ந்த மனமுடைய அவ் வைசிய தம்பதிகளுடைய தூய்மையை அறிந்துகொண்டு அப் பொழுதே க்ஷணகாலம் அவர்களுக்கு நிஜஸ்வரூபத்தைக் காட்டினுர். பூர்வ புண்ணியத்தினுல் தியாகேசர் தங்களிடம் தோன்றிக் காட்சியளித்ததை அவர்கள் போற்றிப் பரமானந்த மடைந்தார்கள். பரமசிவன் மறைந்தவுடன் தானபதி வைசியனுக்கு நேத்திரமுண்டாகி வெகுநாள் வரையில் சிறந்த செல்வத்துடன் பூமியில் வாழ்ந்து முடிவில் ஈசுவர ஸாயுஜ்யத்தைப் பெற்று விளங்கினுன்.



## 61. சேணியனுடன் வழக்குரைத்த லீலை.

மத்தளவொலி கேட்டு இடியோசையென மயங்கி ஆடும் மயில்கள் நிறைந்த மாடங்கள் வாய்ந்த திருவாரூரில் சித்திர வாஸன் என்னும் சேணியனெருவன் இருந்தான். அவன் பட்டாடைகள் நெய்து அவற்றில் அழகிய சித்திரங்களையும் வெள்ளி சரிகைகளையும் தங்க சரிகைகளையும் பொருத்தி விற்று வந்தான். அந்த ஆடைகளைப் போல் மக்கள் வேறெங்கும் கண்டதில்லை. ஆதலின் அனைவரும் அந்தச் சேணியனிடத்திலேயே தமக்கு வேண்டிய ஆடைகளை வாங்கத் தொடங்கினர்.

அதனால் சித்திரவாஸனுக்கு அளவில்லாதபடி செல்வம் குவிய லாயிற்று. அவ்வித செல்வம் நிறைந்தபோதிலும் அவனுக்குத் தர்ம சிந்தனையே இல்லை. தேவர்களுக்காகவும் பித்ருக்களுக் காகவும் அதிதிகளுக்காகவும் சிறிதளவு கூட செலவு செய்வ தில்லை. தானத்தின் சிறப்பையும் அறிந்து கொள்ளவில்லை. புண்ணிய காலங்களிலும் சுப சமயங்களிலும் இயன்ற வரை தானம் செய்ய வேண்டும் என்றும், ஏழைகளுக்கு அன்னமிட வேண்டுமென்றும் உறவினரும் நண்பரும் பலமுறை அவனுக்கு எடுத்துச் சொன்னார்கள். அச்சொற்களுக்கு அவன் செவி சாய்க்கவே இல்லை.

இவ்வாறு அவன் வாழும் நாளில் ஒரு ஜோதிஷர் அச்சித் ரவாசனைக் காண வந்தார். அந்தச் சோதிடர் அங்கு வருமுன் பலர் அவரைப் பார்த்து, "ஐயா! பிரத்தியக்ஷமான விஷயங் களைக் கூட அந்தச் சேணியன் நம்புவதில்லையே! அப்படி யிருக்க வரப்போகும் விஷயத்தை நீர் எடுத்துச்சொல்ல அவன் நம்புவானு? உமது பிரயாசைக்கு ஒரு பயனும் பெறப் போவ தில்லை" என்று கூறினர். அவற்றை யெல்லாம் பொருட்படுத் தாமலேயே அச்சோதிடர் சித்திரவாசனைக் காண வந்தார். சோதிடருடைய கம்பீரத்தோற்றமும் முகவொளியும் சித்திர வாசனுக்கு அவர்மீது பக்தியையுண்டு பண்ணின. அதனால் அவன் அவரை மரியாதையுடன் வரவேற்று உபசரித்து ஆஸன மளித்து, 'தாங்கள் யார்? என்னை நாடி வந்த காரணம் என்ன?' என்று அன்போடு வினவினுன். அதற்குச் சோதி டர் தாம் இன்னர் என்பதைத் தெரிவித்துக் கொண்டார். அதுகேட்ட சித்திரவாசன், 'ஸ்வாமி, என் வியாபாரம் நன்ருக நடக்குமா? அதிக லாபமுண்டாகுமா?' என்று ஆவலோடு கேட்டான். உடனே சோதிடர் அவனது ஜாதகத்தைக் கொணரச் செய்து பார்த்துப் பின் வருமாறு சொன்னர். "சித் திரவாசா! இன்னும் சில மாதங்களுக்குள் நீ அளவற்ற செல் வம் பெறப் போகிருய். அப்போது ஒரு தீரா வழக்கு நேரும். ஆயினும் முடிவில் நன்மையையே அடைவாய்."

இதைக் கேட்ட சித்திரவாசன் ஒருபுறம் மகிழ்ச்சியும் ஒரு புறம் கோபமும் கொண்டு அவருக்குக் கொஞ்சம் வெகுமதி யளித்து அனுப்பினான்.

பக்தர்களின் மனத்தைச் சீர்திருத்தி அவர்களைக் காப் பாற்றுவதற்காகவே கமலாலயத்தில் விளங்கும் தியாகராஜர் ஒருநாள் காலையில் சேணியன்போல் வடிவுகொண்டு சித்திர வாசன் வீட்டுவழியாகச் சென்றுகொண்டிருந்தார். அவர் தம் தலையில் அழகிய சித்திரங்கள் நிறைந்த பட்டுத் துணியைத் தலைப்பாகையாகச் சுற்றியிருந்தார். அதைக்கண்ட சித்திர வாசன் அந்தச் சேணியனை அழைத்து "ஓ பால! நீ தலையி லணிந்திருக்கும் பட்டு எங்கே வாங்கப்பட்டது" என்று கேட் டான். பரம்பொருளாகிய சேணிய பகவான், 'ஐயா! நான் இதனை எங்கும் வாங்கவில்லை. என் கையினால் செய்ததே. இதைவிடப் பன்மடங்கு அழகுவாய்ந்த ஆடைகளையும் நான் செய்வேன்" என்றார். அதைக்கேட்டு ஆச்சரியமடைந்த சித்திரவாசன், "பாலகனே! உனக்கு இன்னும் பதினைந்து வயதுகூட நிரம்பியிராது போலிருக்கிறதே; இதற்குள் இவ் வித திறமைவாய்ந்து நீ விளங்குவது மிகவும் வியப்பாயிருக் கிறது. என்னிடம் வேலைசெய்ய உனக்குச் சம்மதமா? அப் படியானால் நீ எவ்வித பயனை என்னிடம் பெற விரும்புவாய்?" என்று கேட்டான். அதற்கு அந்தப் பாலகன், "உம் விருப் பப்படியே நான் ஆடைகள் செய்கிறேன். எப்போது நான் உம்மைவிட்டுப் பிரிந்துபோகிறேனோ அப்போது என் விருப் பம்போல் நீர் செய்யவேண்டும்" என்றான். சேணியன் அவனது வேலைத்திறனில் மயங்கி அவன் சொன்னவற்றை ஆராய்ந்து பாராது அப்படியே செய்வதாகச் சொல்லித் தன் தொழிற்சாலையில் சேர்த்துக்கொண்டான்.

அன்றுமுதல் தியாகப்பெருமானான அந்தச் சேணிய பாலகனால் அந்தத் தொழிற்சாலையிலே பலதரப்பட்ட சித்திர வஸ்திரங்கள் குவிந்தன. அவற்றின் நேர்த்தியைப் பார்த்துப் பல மன்னர்களும் சேணியன் சொன்ன விலையைக் கொடுத்து

வாங்கிச் சென்றனர். அதனால் சித்திரவாசனுக்குச் செல்வம் மலைபோலக் குவிந்தது.

ஒருநாள் அந்தச் சேணியபாலகன் ஓர் அழகிய பட்டாடையைப் பல சித்திரங்கள் வாய்ந்ததாக செய்து சித்திரவாசனை நோக்கி 'ஐயா, இதனை நான் தியாகராஜ ஸ்வாமிக்கு அளிக்க நினைக்கிறேன்' என்றான். அதைக்கேட்ட சேணியன் திடுக்கிட்டு, 'என்ன அநியாயமான காரியம் செய்ய நினைத்தாய்! இதனை விற்றால் பதினாயிரம் பொன் பெறலாமே! சொற்ப விலையுள்ள பட்டாடை கடவுளுக்களித்தால் போதாதா?' என்றான். இதனால் இருவருக்கும் வாக்குவாதம் முற்றியது. அப்போது பாலகன் சினந்து, " ஐயா! நீர் நான் விரும்பியபடி செய்தே ஆகவேண்டும். இனி உமக்கும் எனக்கும் சரிப்படாது. இது வரை நீர் அடைந்த லாபத்திலே பாதியை என் பெயரால் தியாகராஜ பெருமானுக்குச் சமர்ப்பித்துவிட வேண்டும். எனது விருப்பம் அது. நாம் முன் பேசிக்கொண்டபடி என் விருப்பப்படி நீர் செய்தே ஆகவேண்டும். அங்ஙனம் செய்ய உமக்கு விருப்பமில்லையெனில் நியாயஸ்தலத்தில் நம் வழக்கைத் தீர்த்துக் கொள்வோம். யோசித்துச் சொல்லும்' என்று கூறிச் சென்று விட்டான்.

இதைக் கேட்ட சித்திரவாசன் நடுநடுங்கி, " ஐயோ! இதென்ன அநியாயம்! சோதிடன் சொன்னபடி ஆயிற்றே! பாதி லாபத்தைக் கொடுத்து விட்டால் என் செல்வம் முழுவதும் போய் விடுமே" என்று அலறினான். 'தருமமாவது நியாயமாவது! பையனை ஏமாற்றித் துரத்தி விட வேண்டும்' என்று முதலில் தீர்மானித்தான். மறுகணமே அவ்வாறு செய்யின் எவ்வித துன்பங்கள் நேருமோ என்று மனங் கலங்கி அவ்வெண்ணத்தைக் கைவிட்டான். இவ்வாறு சித்திரவாசன் பலவாறு மனங்கலங்குவதைக்கண்ட அவன் மனைவி, 'ஏன் வீணாகத் துயரமும் மனக்கலக்கமும் கொள்கிறீர்கள்? அந்தப்பாலகன் வந்த நாள்முதல் தானே நமக்குச் செல்வம் மிகவும் அதிகமாகக்

குலையலாயிற்று. அவன் தனக்குக் கூட அந்தச் செல்வத்தைக் கேட்கவில்லையே. தியாகப் பெருமானுக்குத் தானே கொடுக்கச் சொல்கிறுன்! தானம் செய்யாத செல்வம் துன்பத்தையே அளிக்குமல்லவா? வீணே கலங்காதீர்கள். அந்தப் பாலகன் சொன்னபடி செய்யுங்கள். தியாகராஜருக்கு நம் செல்வம் போய்ச்சேருமாயின் எல்லாப் பெருமைகளும் நம்மைத்தேடி வந்தடையும்' என்று அறிவுறுத்திச்சொன்னுள். இதைக் கேட்ட சேணியன் மனம் மாறிச் சிவபக்தி நிறைந்து மறுநாள் அவ்வாறே தன் உடைமையைத் தியாகப் பெருமானுக்கு சமர்ப்பிக்கத் தீர்மானித்தான். பொழுது விடிந்ததும் அந்தப் பாலகன் வரவை எதிர் நோக்கி யிருந்தான். அவன் வரவில்லை. நகரில் பல பாகங்களிலும் போய் அவனைத் தேடினுன். அகப்படவில்லை. தியாகராஜனே இவ்வாறு பாலகனுக வந்து நம்மை நல்வழிப்படுத்தினுர் என்றுணர்ந்து மனமகிழ்ந்து அன்று முதல் ஸன்மார்க்கத்திலிருந்தும் அறச்செயல்களிலிருந்தும் சிறிதும் வழுவாது வாழ்ந்து வந்தான்.



## 62. வேதியன் அழைக்க வந்து சூதாடிய லீலை.

விருஷகேது மகாராஜன் பூமியைப் பரிபாலித்து வருகையில் நந்திபத்ர கிராமத்தில் சிலீமுகன் என்ற ஒரு சூதாடி இருந்தான். அவன் இளம் வயது முதல் பல சூதுகளைக் கற்றவன். அதனுல் வெற்றியையன்றி வேறென்றையும் அறியாதவன். அவனுடன் சூதாடி அந்த ஊரிலுள்ள பல தனிகர்களும் தம் செல்வங்களை இழந்தனர். அந்த ஊரில் ஆட வருபவர்கள் எவரும் அவனுக்குக் கிடைக்கவில்லை. அதனுல் அவன் தன் சூதாடு கருவிகளை எடுத்துக்கொண்டு ஊரூராகச் சென்று பலரோடு நயமாகப் பேசி ஏமாற்றிச் சூதாட்டத்தில் ஈடுபடுத்தி அவர்கள் செல்வத்தை அபகரித்து மகிழ்ந்து திக்விஜயம் செய்துவந்தான்.

இவன் பெயரைக் கேட்கும்பொழுதே அங்கங்கு கிராமங்களிலும், நகரங்களிலும் ஜனங்கள் நடுங்கினார்கள். இந்தக் கொடியோனை அடக்க வல்லவர் இலராயினர்.

இந்தச் சூதாட்டக்காரன் ஒருநாள் திருவாரூரை நோக்கிப் போகும் பெரிய ஜனக்கூட்டத்தைக் கண்டான். அவனும் அவர்களுடன் சேர்ந்து அந்த நகரத்தை அடைந்தான். அங்கே தியாகேசர் தரிசனத்திற்காக வந்துள்ள ஜனங்களை நடுவழியிலேயே மடக்கி, தன் மாய வார்த்தைகளால் அவர்களை வசப்படுத்தி வலுவில் சூதாட்டத்துக்கு இழுத்து அவர்களின் பொருள்களைக் கவரலானான். இதனால் தமது பொருள்கள் போனதுடன் ஈசனைத் தரிசிக்க இயலாமற் போயிற்றே என்று ஜனங்கள் வருந்திக் கதறினார்கள். சிலீமுகனைப் பல வாறு சபித்தார்கள்.

அடியார்களின் முறையீட்டைக் கேட்ட இறைவன் சிலீமுகனை அடக்கி, பக்தர்களுடைய கஷ்டத்தை நீக்க வேண்டும் என்று திருவுளங்கொண்டார். ஒருநாள் திருவாரூரில் சிலீமுகனுக்கு சூதாட ஒருவரும் கிடைக்கவில்லை. அதனால் அவன் மிகவும் மனம் வருந்தி ஒருவருடனும் சூதாடாமல் ஆகாரம் அருந்துவதில்லை என்று சபதம் செய்துகொண்டான். பகல்பொழுது பூராவும் கழிந்து மாலைநேரமாயிற்று. பசியாலும் தாகத்தாலும் பீடிக்கப்பட்டு வருந்தி நின்றான் சிலீமுகன்.

அப்போது கமலாலயத்தின் கரையில் ஓர் அந்தணர் தமது அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வீட்டுக்குப் புறப்படுவதைக் கண்டான். உடனே அவர் எதிரில்போய் நின்று "வேதியரே! நான் உம்மையே நாடி வந்தேன். நீர் வேதம் ஓதுவதில் சிறந்தவர்! நான் சூது வாதுகளில் தேர்ந்தவன். ஆதலால் என்னோடு சூதாடுவதற்கு நீர்தாம் தகுதியுள்ளவர். வாரும், சூதாட்டம் ஆடுவோம்" என்று அழைத்தான்.

அந்த அந்தணர் சிறந்த சிவபக்தர்; வெகுநாளாய் சிலீ

முகனுடைய தீயச்செயல்களை அறிந்து அவன்பேரில் கோபங் கொண்டவர். அவர் சிலீமுகனை நோக்கி, "சிலீமுக! உனக்குச் சரியாக சூதாட்டம் ஆடவல்லவர் ஒருவர் இருக்கிறார்; அவர் எனது குரு. அவர் இப்பொழுது ஆலயத்தில் வீற்றிருக்கிறார். நீயும் அங்கு வா. அவருடன் சூதாட்டம் ஆடலாம்" எனறு சிலீமுகனை ஆலயத்துக்குள் அழைத்துச் சென்றார்.

அந்தணர் ஆலயத்திலுள்ள ஒரு பெரிய மண்டபத்தில் சிலீமுகனை உட்கார்த்தி, தியாகேசரிடம் சென்று "இந்தக் கொடியனை அடக்க வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டார்.

பக்தரின் வார்த்தையைப் பரிபாலிக்கும் விரதம் பூண்ட பரமேசன், அந்த அந்தணரின் பிரார்த்தனைக்கு இணங்கி ஓர் அழகிய யௌவன புருஷனாக வடிவம்தாங்கி, சூதாட்டக்காரன் இருக்கும் மண்டபத்தை நோக்கிப் புறப்பட்டார்.

இச்செய்தி கொடிப்பொழுதில் திருவாரூர் முழுவதும் பரவியது. குழந்தைமுதல் விருத்தர் ஈறாக உள்ள எல்லா ஜனங்களும் ஆலயத்தில் வந்து கூடினர். அரசனும் அமைச்சர், பணியாளர் முதலியோருடன் அங்கு வந்து சேர்ந்தான். இன்றுடனே இந்தச் சூதாட்டக்காரன் அழிந்துவிடுவான் என்று எண்ணி, பலர் மகிழ்ந்தனர். அதிலும் சிலர் ஒருகால் வஞ்சனையில் நிகரில்லாத சிலீமுகன் தியாகேசப் பெருமானையும் தோல்வியுறச்செய்து அவருடைய செல்வமெல்லாம் கவர்ந்துவிடுவானோ என்றும் கவலையுற்றனர்.

வந்த இளைஞனும் சிலீமுகனும் அவரவர் பந்தயங்களை நிர்ணயம் செய்துகொண்டனர். சூதாட்டம் ஆரம்பமாயிற்று. முதல் ஆட்டத்திலேயே சிலீமுகன் உருட்டிய பாச்சிகை அவனுக்குத் தோல்வியை அளித்தது. வெற்றியே கண்டிருந்த சிலீமுகன் இப்போது மேலும் மேலும் தோல்வியைக் காணத் தொடங்கினன். இறைவன் இச்சையை எவரால்

மீறமுடியும்? சிலீமுகன் சூதாட்டத்தில் தனது ரத்தின மோதிரங்கள் முதலான சகல சொத்துக்களையும் இழந்தான்.

தியாகேசர் சிலீமுகனுடைய செருக்கை அடக்கி, அவனால் ஜனங்களுக்கு நேரிட்டுவந்த இன்னல்களை அடியோடு அழித்து அருளினர். அப்போது ஆகாயத்தில் தேவ துந்துபி முழங்குவதைக் கேட்டு ஜனங்கள் எல்லோரும் மகிழ்ச்சியும் வியப்பும் மீறி இறைவனைப் போற்றினர்கள்.



## 63. கள்ளரைக் காட்டிக் கொடுத்த லீலை.

திருவாரூரில் 'வீரசேனன்' என்னும் அரசன் ஆட்சி புரிந்து வந்த காலத்தில், அந்தப் பிராந்தியங்களில் பிரசித்தி பெற்ற ஏழு கள்வர் இருந்தனர். குளன், பாகுகன், குத்ஸன், புளிந்தன், புச்சன், மல்லன், மதேயன் எனப் பெயரிய இவ்வேழு திருடர்களும் களவுத் தொழிலில் மிகவும் வல்லவர்களாகி மகா மாயாவிகளாகத் திரிந்தனர்.

அவர்கள் மனிதரின் கண்களில் மாயப் பொடிகளைத் தூவியும், திடீரென்று ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்குத் தாவியும், உடலைச் சுருக்கிக் கொண்டு பலகணிகளின் வழியாகப் பெரிய மாளிகைகளில் நுழைந்தும் எல்லோர் பொருளையும் கவர்ந்து வந்தனர்.

மேலும் இவர்களுக்கு நூற்றுக்கணக்கான துணைவரும் இருந்தனர். அவர்களின் உதவியாலும், இணையற்ற தமது மாயா ஜாலங்களாலும் கிராமங்கள் தோறும் சென்று மாதர்களைத் தூக்கி வந்தும், வீடுகளை எரித்துச் சாம்பலாக்கியும், எவ்வித பூட்டுக்களையும் எளிதில் திறந்து பிறர் செல்வத்தை அபகரித்தும் அட்டகாசம் செய்து வந்தனர் அக்கொடியர்.

இவர்களுள் 'மதேயன்' என்பவனே மிக்கத் திறமை வாய்ந்தவனாகவும், அவர்கள் எல்லோருக்கும் தலைவனாகவும் இருந்தான். அவன் ஒரு நாள் ஓர் உயர்ந்த மரத்தின்மீது ஏறி எல்லாத் திசைகளையும் கூர்ந்து நோக்கினான்.

அந்தக் காட்டு வழியே வெகு தூரத்தில் திரள் திரளாக ஜனங்கள் போய்க் கொண்டிருப்பதை 'மதேயன்' கவனித்தான். உடனே மரத்திலிருந்து இறங்கிப் போய் விரைவில் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டு, "ஐயா! நீங்கள் எந்த ஊருக்குப் போகிறீர்கள்?" என்று வினவினான்.

பிரயாணிகள் மதேயனை நோக்கி, "நாங்கள் புகழ்வாய்ந்த திருவாரூருக்குப் போய்க் கொண்டிருக்கிறோம். இப்போது தியாகராஜப் பெருமானுக்கு 'வஸந்தோத்ஸவம்' தொடங்கும் காலம். நீயும் எங்களுடன் வந்தால் இறைவனைச் சேவித்து இன்புற்று மகிழலாம்" என்றனர்.

வஞ்சனையற்ற அந்த வழிப்போக்கரின் சொல்லைக் கேட்ட மதேயன் தன் தீச்செயலுக்கு நல்ல சந்தர்ப்பம் வாய்த்ததென்று கருதினான். பிரயாணிகளுடன் தானும் திருவாரூர் போய்ச் சேர்ந்தான்.

திருவாரூர் 'வஸந்தமண்டப'த்தில் தியாகேசப்பெருமான் வீற்றிருந்தார். ரத்தின ஆபரணங்களும், சுவர்ண கலசங்களும், முத்துக் குடைகளும் அவரால் அழகு பெற்றுப் பிரகாசித்தன. அவற்றைக்கண்ட மதேயனின் மனம் பேராசையால் துடித்தது. அன்று இரவிலேயே பெருமானின் நகைகள் அனைத்தையும் கவர வேண்டும் என்று அவன் ஆலோசித்து முடிவு செய்தான்.

இந்தப் பெருந்தொழிலுக்குத் துணைவரின் உதவியும் அவசியம் என்று அவன் கருதி, தன் தோழர்களையும் உடனே வருவித்து அன்று இரவு பெருமானின் செல்வத்தை அபகரிப்பதற்குரிய திட்டங்கள் வகுத்தான்.

மதேயனும் அவனது துணைவரும் பூட்டுகளைத் திறக்கும் யந்திரங்களையும், பலவித கயிற்று வலைகளையும் எடுத்துக் கொண்டு, அன்றிரவு திருவாரூர் நகரில் நுழைந்தனர். அங்குள்ள வீடுகளின் சிறப்பையும், மாளிகைகளின் மேன்மையையும், கடைத் தெருக்களின் செல்வப் பெருக்கையும் கண்டு வியப்படைந்த அவர்கள், "நாம் மூன்று வருஷ காலம் கொள்ளையடித்தாலும் இந்த நகரில் செல்வம் குறையாதே. மடத்தனமாக இதுபரியந்தம் இந்நகரை வீணே விட்டு வைத்தோமே" என்று தம்மைத் தாமே நொந்து கொண்டனர்.

சூரியன் மேற்கில் மறைந்ததும், அந்தச் சூரியனின் கிரணங்களைப் போன்ற விளக்குகள் தேவாலயத்தின் கோபுரங்களில் எரியத்தொடங்கின. பறவைகளும், பசுக்களும், மற்றுமுள்ள ஜீவராசிகளும் தமது இருப்பிடங்களுக்கு வந்து சேர்ந்தன. எதிரில் வருவோர் கண்ணுக்குத் தெரியாதபடி எங்கும் காரிருள் சூழ்ந்து கொண்டது.

தியாகேசருக்கு முதல் யாமத்தில் வஸந்த கால மகோத்ஸவம் நிறைவேறியது. இரண்டாம் யாமத்தில் கமலநாயகிக்கும் பசுபதிக்கும் பூஜை, நிவேதனம், உபசாரம் முதலியன நிறைவேறின. பின்பு கோயில் அதிகாரிகள் ஆலயத்தின் எல்லாக் கதவுகளையும் பூட்டிக் கொண்டு தமது வீடுகளுக்குச் சென்றனர்.

ஒருவரை ஒருவர் காண இயலாத அந்த இருட்டு வேளையில் 'மதேயன்' முதலிய கள்வர்கள் ஆலயத்தின் காவலாளிகளைப்பிடித்து அங்கிருந்த தூண்களில் இறுகக்கட்டி விட்டனர். பின்பு அவர்கள் தங்கள் மாயையினுல் மதில்களையும், பிராகாரச் சுவர்களையும் தாண்டி உட் புகுந்தனர்.

இரண்டொரு வினாடிகளில் சில பூட்டுகளை உடைத்தும், சிலவற்றைத் திறந்தும், கதவுகளை எளிதில் முறித்தும் கர்ப்பகிருஹத்தின் அருகில் பிரவேசித்தனர். உடனே அவர்கள்

தங்கள் கண்களில் மையைத் தடவிக் கொண்டதால், ஆலயத்திலுள்ள எல்லாப் பொருள்களும் அவர்களுக்கு எளிதில் புலப்பட்டன.

அந்தத்தருணத்தில் அக்கள்வர்கள் தாம் இறைவனுடைய பொருளை அபகரிக்கையில் யாரேனும் வந்து விடாதபடி தடுப்பதற்காகத் தாம் கொண்டு வந்த கயிற்று வலையை உட்பிராகாரத்தின் மண்டபங்களில் கட்டி விட்டனர்.

ஏழைகளின் சாபத்துக்கும் தெய்வங்களின் கோபத்துக்கும் எள்ளளவும் அஞ்சாத அக்கொடியர்களை உடனே சிக்ஷிக்க வேண்டுமென்று 'தியாகேசர்' திருவுளங்கொண்டார். உடனே அவருடைய ஸங்கல்பப்படி கள்வர்களில் ஒருவன் கண்ணுக்கு மற்றொருவன் காவலாளியைப் போல் தென்படலாயினன். அவர்களுக்குள்ளேயே ஒருவன் மீது மற்றொருவன் கடுஞ்சினங்கொண்டு ஒருவனையொருவன் அந்தக் கயிற்று வலையில் சேர்த்துக் கட்டினன்.

இவ்வாறு அந்த ஏழு கள்வர்களும் அவரது துணைவரும் ஒருவனையொருவன் காவலாளியென எண்ணி ஒரு முகூர்த்த காலத்தில் கயிற்று வலையில் கட்டுண்டு தொங்கலாயினர். சிவனுடைய சினத்தினால் அவர்களுடைய மாயா பலம் முற்றிலும் குன்றிவிட்டது. கண்கள் இருளடைந்தன. நாவில் ஜலம் சுரக்கவில்லை. குரலும் எழும்பவில்லை. இவ்வாறு விஷம் நீங்கிய நாகம்போலும், இறக்கை இழந்த மலைகள் போலும் தமது மந்திர தந்திர சக்திகளை அறவே இழந்த அவர்களுக்கு அப்போதுதான் தாங்கள் புரிந்த பாபங்களைப் பற்றி நினைப்பு உண்டாயிற்று. தங்கள் தீச்செயல்களுக்காகத் தியாகேசரே தக்க தண்டனை அளித்தனர் என்பதை உணர்ந்து இவர்கள் ஊமைகளைப்போல் வாளாவிருந்தனர்.

இதற்குள் பொழுது புலர்ந்ததும், காவலாளிகள் கட்டுண்டும் ஆலயத்தின் கதவுகள் திறந்தும் கிடக்கும் செய்தி

அரசன் வரையில் எட்டியது. அரசனுன வீரசேன மகா ராஜனும், நகர மாந்தரும் ஆலயத்துக்கு விரைந்து வந்து காவலாளிகளைக் கட்டவிழ்த்து விட்டு உள்ளே நுழைந்து பார்த்தனர். அங்கே களவாட வந்தவர்கள் கயிற்று வலையில் கட்டுண்டு தொங்குவதைக் கண்டு, அவர்கள் வாயாலேயே தியாகேசரின் மகிமையை உணர்ந்து அந்தத் திருடர்களைச் சிறைப்படுத்திக் கொண்டுபோயினர்.

இந்தச் சம்பவம் நடந்தது முதல் திருவாரூரிலும், தியாகேசர் ஆலயத்திலும் 'களவு' என்னும் பெயரே இல்லாமல் ஒழிந்தது. இவ்விதம் கள்வரைக் காட்டிக்கொடுத்த தியாகேசரின் அருளால் மறுபடியும் உலகம் அமைதியுடன் சிறப்புற வாழ்ந்தது. ஈசனுடைய மகிமையைக் கேட்ட அடியார்கள் பக்தி வெள்ளம் பெருகியோட தியாகேசனுக்குத் துதி மாலை சூட்டினுர்கள்.



## 64. மழையைத் தடுத்து யாகத்தைக் காத்த லீலை.

கலியுகத்தின் பாதியில் 'ஸுபர்வன்' என்னும் அரசன் ஆட்சி புரிந்து வந்தான். அப்போது 'விசுவநாத தீக்ஷிதர்' என்னும் அந்தணருக்கு 'வித்யாதர தீக்ஷிதர்' என்னும் ஒரு நற்புதல்வர் வாய்த்திருந்தார்.

'வித்யாதரர்' நான்கு வேதங்களையும், அவற்றின் இலக்கணங்களையும் நன்முக ஓதி அத்யயனம் செய்தவர். தாம் ஓதிய வேதத்தைப் பிறருக்குக் கற்பிப்பதில் மகிழ்ச்சி உடையவர். பதினெட்டு வகைப் புராணங்கள், எழுபத்து நான்கு உபபுராணங்கள், இருபத்தெட்டு சைவ ஆகமங்கள் முதலிய யாவற்றினையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் கற்றுணர்ந்தவர். வேதத்தின் சூக்குமப் பொருளை அறிந்தவர். கர்மாநுஷ்டானங்

களைத் தவற விடாதவர். நற்குலத்தில் உதித்தவர். ஒழுக்கந் தவறாத உத்தமர். ஈசனிடத்தில் அசைவற்ற பக்தி உடையவர். ஸத்புத்திரனைப் பெற்றவர். உயிரே போயினும் பொய் புகலாதவர். பிராணிகளிடத்தில் பார பக்ஷமில்லாத அன்பு கொண்டவர். கர்வத்தைக் களைந்தவர். சிறு பிராயத்திலிருந்து பரோபகாரத்தில் தீக்ஷை பெற்றவர். செல்வமும் புகழும் மிக்கவர். தேவர்களையும் அதிதிகளையும் காலம் தவறாமல் உபாஸிக்கும் விரதம் உடையவர். ஆதலால் இவருக்கு ஸாதுக்கள் யாவரும் ஒன்றுகூடி 'ஸர்வக்ஞர்' என்னும் நாமதேயத்தைப் பொருத்தமுற சூட்டியிருந்தனர்.

இத்தகைய பெருமை வாய்ந்த ஸர்வக்ஞரான வித்யாதர தீக்ஷிதர் ஒரு சமயம் 'ஸர்வக்ரது' என்னும் சிறந்த யாகத்தைச்செய்ய வேண்டுமென்று விரும்பினர். அந்த வேள்வியை நிறைவேற்றுவதற்குத் தக்க புண்ணிய பூமி 'திருவாரூரே' என்று அவர் தீர்மானித்து அவ்விடத்தில் 'ஸர்வக்ரது' யாகத்தைச் செய்ய ஏற்பாடுகள் செய்தார்.

சுப முகூர்த்தத்தில் யாகசாலை நிர்மாணிக்கப்பட்டு, தக்ஷிணாக்னி, கார்ஹபத்யம், ஆஹவநீயம்—என்னும் மூன்று அக்கினி குண்டங்களும் தயாராயின. ஹோமத் திரவியங்களும் ஸித்தமாயின. வித்யாதரர் நியமத்துடன் தீக்ஷை பெற்று 'உத்காதா' 'அத்வர்யு' முதலியவர்களையும் முறைப்படி உபசரித்து அந்தந்த ஸ்தானங்களில் ஆவாஹனம் செய்தார். இந்த வேள்வியைக் காண எல்லாத் திசைகளினின்றும் வேதமோதிய அந்தணர்களும், ஸாதுக்களும், வித்வான்களும், கவிஞர்களும், பெரியோர்களும், ராஜ தந்திரிகளும், பக்தர்களும், யாசகர்களும் லக்ஷக்கணக்காகத் திரண்டு வந்து திருவாரூரை அடைந்தனர். யாகத்தின் முடிவில் தானம் செய்வதற்காக தீக்ஷிதரின் பாதபீடத்தருகில் அநேக தனிகர் அளவற்ற பொற்குவியல்களைக் குன்றுபோல் குவித்தனர்.

இவ்வாறு சிறப்புடன் அந்த யாகம் நடைபெற்று வருகை

யில் இரண்டு நாட்கள் இனிது கழிந்தன. மூன்றும் நாள் காலையில் வேதபடனமும், ஹோம காரியமும் முடிந்த பிறகு தியாகேசருக்கு உச்சிகால பூஜையும், நிவேதனமும் நிறைவேறின.

அதன்பின்பு அந்த தீக்ஷிதர் பந்தலின் கீழ் அளவற்ற அந்தணர்களுக்கு அன்னம் அளித்தார். அவர்கள் அந்த சுத்த அன்னத்தைப் புசித்துக்கொண்டிருக்கையில் திடீரென்று வானத்தில் நீருண்ட மேகங்கள் நிறைந்து தென்பட்டன. நொடி நேரத்துக்குள் ஆகாயம் கார் மேகங்களால் மூடப்பட்டு கறுத்து விளங்கியது. பிரளய காலத்தைப் போன்று, இடியும் மின்னலும் எங்கும் பரவி யாவருக்கும் என்றும் காணாத அச்சத்தை உண்டாக்கத் தொடங்கியது.

அவ்வித பயங்கர சமயத்தில் எங்கும் பேரிருள் பரவி மழைத்தாரைகள் பூமியில் விழுந்தன. யாகசாலையின் பந்தற் கீழ் போஜனம் செய்யும் வேதியர் எல்லோரும் திகிலுற்று பயத்தால் நடுங்கினர். சிலர் இது உலகத்தை அழிக்கத் தோன்றிய பிரளயமோ எனவும் மனங்கலங்கினர்.

கடலின் அலைகளைப் போன்ற கர்ஜனையுடன் அந்த மேகங்கள் மேலும் மேலும் மழைத் தாரைகளை இடைவிடாமல் பெய்யலாயின. வித்தியாதர தீக்ஷிதர் கதிஒன்றுங் காணாதவராய்க் கைகள் இரண்டையும் உயரத் தூக்கிக்கொண்டு மேலே நோக்கி "ஏ பரம்பொருளே! என் யாகம் அழிவுறுகிறதே! அந்தணர்களின் போஜனமும் முடியவில்லையே; நற்பயனுக்குப் பதிலாக எனக்கு நரகம் அல்லவா கிட்டும்! இந்த யாகத்தை தரிசிக்க வந்துள்ளோருக்கும் உய்ய வழி இல்லையே! நான் என்ன செய்வேன்? மனிதரால் இந்த மழையைத் தடுக்க இயலாதே" என்று கதறினர்.

மேலும் அவர் "ஏ யக்ஞேச! யாக மேடையில் மந்திரரூபியாய் வீற்றிருப்போனே! ஐந்து முகங்களை உடை-

யோனே! வரமளிக்கும் வள்ளலே! அந்தணரின் ஹவிர் பாகத்தை அருந்தும் அண்ணலே! தயாநிதியே! நடராஜப் பெருமானே! மறைகள் தேடும் மெய்ப் பொருளே! எல்லா உலகங்களுக்கும் இறைவனே! முத்தொழில் நாயகனே! பிரம்ம வித்துக்களின் மனச் சுடரே! உமை பங்கனே! யோகத்தின் ஒளியே! தியாகராஜ! மகாதேவ! உனது பாதகமலங்களே கதி! சரணம் சரணம்!'' என்று கூவினர்.

இந்த வேதியருடைய முறையைக் கேட்ட கருணைக் கடலான தியாகேசர் உடனே ஒரு புரோகிதர் உருவங் கொண்டு அந்த வேள்விச் சாலையின் வெளியில் வந்து நின்றார். உடனே அவர் தமது இடது கையில் ஏந்திய கலச ஜலத்தை வலக்கையில் பிடித்திருக்கும் கூர்சத்தினால் கொஞ்சங் கொஞ்சமாக ஆகாயத்தில் புரோக்ஷிக்கத் தொடங்கினார்.

புரோகித வடிவங் கொண்ட பரமேசன், வாயினால் வேத மந்திரங்களை உச்சரித்தபடியே இப்படி ஜலப்ரோக்ஷணம் செய்யவே, அந்த நீர்த்துளிகள் வானத்தை நோக்கிக் கிளம்பிக் கூர்மையான சரங்களைப் போல் மேகங்களின் மீது பாய்ந்து அவற்றைப் பிளந்து விட்டன. ஒரு நொடிப் பொழுதுக்குள் மேகக்கூட்டங்களும், இடியும், மின்னலும், மழையும் இருந்த இடம் தெரியாமல் திசைகளில் ஒளிந்து விட்டன.

அத்தருணத்தில் தேவர்கள் புஷ்பமாரி சொரிந்தனர். தீக்ஷிதருக்கு மனத்தில் உற்சாகமும் மகிழ்ச்சியும் உண்டாயின. "ஜலம் புரோக்ஷித்த இந்தப் புரோகிதர் யார்? இவர் எந்த மந்திரத்தைச் சொல்லுகிறார்?'' என்று சிலர் அவரது சமீபம் நெருங்குகையில் புரோகிதராக வந்த பசுபதி மறைந்து விட்டார்.

புரோகிதராக வந்து அருள் புரிந்தவர் தியாகராஜரே என்பதை அறிந்ததும், யாகத்துக்காகக் கூடியிருந்த ஜனங்கள் எல்லோரும் தமக்கு நேரிட்ட விபத்தைக் கணப் போதில்

தீர்த்து அருளிய அப்பரமேசனது மகிமையைக் கொண்டாடி மகிழ்ந்தனர்.

தீக்ஷிதர் யாகத்தை இனிது நிறைவேற்றி, முடிவில் ஸர்வாஹுதியும் செய்து, பரமேச்வரனைப் பணிந்து, பல வித தானங்களையும் வழங்கினர். அங்கு ஆஹுதிப் புகையையும், ஹவிஸ்ஸின் சேஷத்தையும், பவித்ர தாரணத்தையும் உபாஸித்த ஜனங்கள் எல்லோரும் பரமானந்தமுற்றுத் தத்தம் இருப்பிடம் சென்றனர்.



## 65. விருந்தளித்து வேதியனைக் காத்த லீலை.

முனிவர்களைப் பார்த்து ஸூத புராணிகர் மேலும் சொல்லலுற்றார். "கேளீர் முனிபுங்கவர்களே! பரமேசன் செய்த மற்றொரு லீலையையும் சொல்லுகிறேன்" என்று தொடங்கினர்.

திருவாரூருக்கு மேற்கே ஒரு யோசனை தூரத்தில் 'சிவபுரம்' என்னும் அக்கிரகாரம் ஒன்று உள்ளது. அங்கே 'யக்ஞேசுவரர்' என்னும் அந்தணர் ஒருவர் இருந்தார். அவர் கல்வியிலும், ஒழுக்கத்திலும் இணையற்றவராக விளங்கினர். புத்திரப்பேறும் அவருக்கு வாய்த்திருந்தது.

இவ்வளவு சிறப்புக்கள் இருந்தும், இந்த உலக வாழ்க்கைக்கு மிக்க அவசியமான தன தான்யாதி செல்வங்களில் ஒன்றும் வாய்க்கவில்லை. தினந்தோறும் உஞ்ச விருத்தியினாலேயே அவர் தமது குடும்பத்தைக் காப்பாற்றிவந்தார்.

பஞ்சகால பாராயணத்தையும், அக்கினி ஹோத்திர வேதபடன ஜபாதிகளையும், எக்காலத்திலும் தவறாமல் அனுஷ்

டித்து வந்த அந்த சுத்த ஸ்வரூபி எவ்வித பாபத்தொழிலேயும் மனத்தாலும் நினைத்தவரல்லர். அவரது மனைவியும் சீலம், ஒழுக்கம் முதலிய நற்குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாக விளங்கினாள். அந்தத் தம்பதிகள் தமக்கு வாய்த்த ஏழைமை நிலையைக் குறித்து ஒருபோதும் வருந்தியதில்லை. எந்தச் சமயத்திலும் பிரம்ம தேஜஸ்ஸாலும், மனக் களிப்பினாலும் அவர்களுடைய முகங்கள் பிரஸன்னமாகவே விளங்கின.

அவர்கள் தமது தர்மத்தினாலும், ஸத்யத்தினாலும் இந்த உலகையே அழிக்கவும், சபிக்கவும், அருள்புரியவும் ஆற்றல் படைத்தவராக இருந்தனர்; இருந்தும் கர்வமோ, கோபமோ அவர்களை அணுக இயலவில்லை. அவர்களுடைய தூய்மையைக் கண்டும், கேட்டும் வியப்படைந்து, அவ்வூருக்கு வருவோர் எல்லோரும் இந்தத் தம்பதிகளின் வீட்டுக்கே வலுவில் விருந்தாக வந்து அன்னத்தைப் புசித்து ஆன்மாவுக்குப் பலனை அடைவித்துக்கொண்டு செல்வார்கள்.

இவ்விதமாகச் சிறப்படைந்த அவ்வந்தணர் ஒருபொழுதேனும் அதிதிகளை அடையாமல் தாம் ஒருவர் மட்டும் உண்டதே இல்லை. தண்டுல பிக்ஷையினாலும், உஞ்ச விருத்தியினாலும், இல்லறத்தை இனிது நடத்தி வருகையில், ஒருவருஷம் கார்த்திகை மாத கிருஷ்ணபக்ஷ ஆருத்திரா தினத்தில் தியாகராஜரைச் சேவிப்பதற்காகப் பற்பல திசைகளிலிருந்தும் பக்தர்கள் போய்க்கொண்டிருந்தார்கள். சிவபக்தியில் சிறந்தவராயும், வைதிக கர்மானுஷ்டானங்களுக்கு இருப்பிடம் போன்றவராயும் விளங்கிய அந்த யக்ஞேசுவரரைப் பணிந்து செல்ல வேண்டுமென்று ஆயிரக்கணக்கான ஜனங்கள் அந்தச் சிவபுரத்தின் மார்க்கமாகத் திருவாரூருக்குப் போகலாயினர்.

இங்ஙனம் ஆருத்திரா தரிசனத்துக்கு ஒரு பக்ஷ காலம் முன்னதாகவே ஜனங்கள் போய்க்கொண்டிருக்கையில் நாலைந்து நாட்களாகப் பெருமழை பெய்யத் தொடங்கியது. இரவும் பகலும் இடைவிடாமல் மழைபெய்ததினால் யக்ஞேசர் உஞ்ச

விருத்திக்குப் போக இயலாமற் போயிற்று. காவிரியாற்றில் கரைபுரண்ட வெள்ளம் போகவே, உணவுக்கும் விறகுக்கும் பெருங்கஷ்டம் விளைந்தது.

மழையின் கொடுமையால் ஜீவராசிகள் துன்புற்றன. தனவான்கள்கூட நீண்ட காலமாகப் பெய்யும் அந்த மாரிகாலத்தில் தமது பசியை ஆற்றிக்கொள்ள வகைகாணுது வருந்தினர் என்ருல், தினந்தோறும் பிக்ஷாடனம் செய்து ஜீவிக்கும் யக்ஞேசரின் நிலைமையைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ?

நாலைந்து நாட்களாக அந்த வேதியர் தண்டுல பிக்ஷைக்கு வீதியில் செல்லவே இல்லை; சிவ பூஜைக்கு வேண்டிய ஹவிஸ்ஸை சமைப்பதற்கு விறகு முதலியவை கிடைப்பதும் அரிதாகி விட்டது.

அத்தகைய ஸந்தர்ப்பத்தில் ஒரு நாள் மாலை இருபத்து நான்கு பிராமணர்கள் ஒரே கூட்டமாக அவ்வேதியன் வீட்டுக்கு விருந்தினராக வந்து சேர்ந்தனர். வந்த வேதியர்களை யக்ஞேசர் அன்புடன் வரவேற்று, பாத்யம் முதலியவைகளால் உபசரித்து, அவர்களை அதிதிகளாக ஏற்ருர்.

ஸந்தியாகால அனுஷ்டானங்களை முடித்துக் கொண்டபின் சில பிராமணர்கள் ஸ்தோத்திரங்களையும், இன்னும் சிலர் தர்க்கப் பிரஸங்கங்களையும், மற்றும் சிலர் வேதாந்த சர்ச்சைகளையும், செய்து கொண்டு வெகு சந்தோஷத்துடன் அவ்வீட்டின் இடை வழியில் உட்கார்ந்து போஜன காலத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். மழையும் ஓயாமல் பெய்து கொண்டிருந்தது.

இத்தருணத்தில் யக்ஞேசர் வீட்டில் இருந்த அரிசி ஒன்றிரண்டு பேருக்கு மட்டுமே உணவளிக்கப் போதுமானதாக இருந்தது. அது எப்படி போதும்? மழையின் கொடுமையால் வெளியில் சென்று கடன் கேட்கவும் இயலவில்லை.

இக்நிலையில் என்ன செய்வதென்பது தோன்றாமல் யக்ஞேசரின் மனைவி கவலைப்படலானாள். அதனைக் கவனித்த யக்ஞேசர், "இன்று ஈசன் நம்மைச் சோதிக்கிறார் போலும்; இந்த நாழிகையில் நாம் ஸாமக்கிரியைகளை எப்படி அடைவோம். நம்மை இந்தத் தருணத்தில் தியாகேசர் தாம் காப்பாற்ற வேண்டும்." என்று மகாதேவனை மனத்திலே தியானித்தபடியே மிகவும் கொஞ்சமாக இருக்கும் வஸ்துக்களைக் கொண்டு சமையல் செய்து முடிக்கச் சொல்லினர்.

அவரது மனைவி பிராமண அபசாரம் நேர்ந்து விடுமோ என்னும் அச்சத்தினால் கண்ணீர் விட்டு அழுது கொண்டே சமையலை ஒருவாறு முடித்து வைத்தாள். யக்ஞேசுவரர் தமது போஜனசாலையில் உடனே இருபத்து நான்கு இலைகளைப் போட்டு ஜலம் தெளித்தார். பின்னர் 'அன்னம் ப்ரம்ம' என்று தொடங்கி, அன்னபூரணீ தேவதா விஷயமாகவும், பரமேசுவர ப்ரீதிகரான்ன ப்ராசன மந்திரங்களையும், ஸ்தோத்திரங்களையும் ஜபித்து அந்த இலைகளில் கூர்ச்சத்தைப் போட்டு ஒவ்வொன்றிலும் கொஞ்சங் கொஞ்சம் அன்னம் பரிமாறினர். பின்பு விருந்தாளிகளை போஜனத்துக்காக வரும்படி உபசரித்து அழைத்தார்.

வேதியர் இருபத்து நால்வரும் இலைகளின் முன் வந்து உட்காருவதற்குள், எல்லா இலைகளிலும் அறுசுவை உண்டிகள் நிரம்பி விட்டன. பஞ்ச பக்ஷ்ய பரமான்னங்களுடன் அந்த இலைகள் விளங்குவதைக் கண்டு வந்த வேதியர்கள் வியப்படைந்து இந்த மகிமைக்குக் காரணம் யக்ஞேசரின் தவப் பயனே என்று புகழ்ந்து தியாகேசன் அருளைக் கொண்டாடி விருந்துண்டு களித்தனர். யக்ஞேசரும் அவரது மனைவியும் தியாகராசப் பெருமானின் கருணையை நினைந்து கைகூப்பித் தொழுதனர்.



## 66. நாரதர் சோதிக்கையில் ராஜேந்திரனைக் காத்த லீலை.

புண்ணியவ்ரத க்ஷேத்திரத்துக்கு ஆபரணம்போல் விளங்கும் திருவாரூர் நகரை ஒரு காலத்தில் 'ராஜேந்திரன்' என்னும் அரசன் நீதிநெறி தவறாது ஆண்டுவந்தான். அவன் களங்கமற்ற தனது விவேகத்தையே முதன் மந்திரியாகவும், தன் வில்லையே முக்கிய சேனையாகவும், நீண்டு அழகிய தன் கரங்களையே பிரதான வீரர்களாகவும் கொண்டு, எல்லா மன்னர்களின் மணிமுடிகளுடைய ஒளியினால் சூழப்பட்ட பாதங்களை உடையவனாகி அரசு செலுத்தி வந்தான்.

இந்த வேந்தன் சிறந்த சிவபக்தன்; தன் இளமைப் பருவத்திலிருந்தே க்ஷத்திர தர்மத்தைப் போலவே விருதங்களையும் கைக்கொண்டவன்; பசுபதிக்குக் குறித்து பக்ஷங்களிலும் மாதங்களிலும், வருஷங்களிலும் நடத்த வேண்டிய விருதங்களைக் கொஞ்சமேனும் குறைவு நேராமல் சைவ ஆகம முறைப்படி நடத்தி வரும் சீலம் உடையவன்.

இத்தகைய மன்னன் ஒருசமயம் மாசிமாத கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியின் இரவில் தோன்றிய மஹாசிவராத்திரி விருதத்தை அனுஷ்டித்தான். அன்று நான்கு ஜாமங்களிலும் பரமேசனுக்கு அபிஷேகம் முதலியவற்றை நியமத்துடன் செய்யத் தொடங்கினான்.

அச்சமயம் இந்த மகாபக்தனைப் பரிசோதிக்க வேண்டும் என்று நாரதருக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. உடனே அவர் ஸ்வர்க்கத்திலிருந்த ஒரு கந்தர்வனை அழைத்து அவனைப் பூலோகத்துக்குப் போய் அங்கு விருதம் அனுஷ்டிக்கும் அரசனை நிஷ்டையினின்றும் கலைக்கவேண்டும் என ஏவினார். மேலும் நாரதர் அந்தக் கந்தர்வனுக்கு மனிதருபம் கொடுத்து, அவன் அவ்வரசனிடம் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமோ அவ்வித உபாயங்களையும் கூறினார். நாரதரின்

ஆணையைத் தலையில் தாங்கிய கந்தர்வன் அவரது கட்டளையை நிறைவேற்ற ராஜேந்திரனுடைய அரண்மனை வாசலிற்போய் நின்றான். நாரதர் ஆகாயத்தில் மறைந்திருந்து நடக்கும் விஷயங்களைக் கவனிக்கலுற்றார்.

மனிதரூபத்துடன் அரண்மனைப்புறம் அணுகிய கந்தருவன் அங்கிருந்த மந்திரிகளைக் கண்டு தன்னைப் பற்றித் தெரிவித்துக் கொண்டான். அவன் அவ்வமைச்சர்களை நோக்கி, "ஐயா! நான் வஸந்தபுரத்தைப் பரிபாலிக்கும் குணஸாகர மகாராஜாவின் முக்கிய மந்திரி; என் பெயர் ச்ருதபோதன். நான் ஸத்தியத்தையும் நியாயத்தையும் துணையாகக் கொண்ட தூயன். எனது அரசனாகிய குணசாகரனுக்கு ராஜ்ய காரிய விஷயமாகச் சில நற்புத்திகளைக் கூறினேன். அதற்கு அவன் சில துர்மந்திரிகளின் போதனையால் என் வார்த்தைகளை ஏற்காமல் என்னைப் பலவாறு நிந்தித்துப் பேசி விட்டான். இனி அந்தச் சபையில் நான் மந்திரியாக இருக்கக்கூடாதென்று கூறி என்னைத் துரத்தி விட்டான். அப்போது நான் அவனை நோக்கி, "அரசே! நீர் அநியாயம் மிக்கவர்; உமது முகத்திலும் இனி விழிக்க மாட்டேன். உம்மைப் போல் இல்லாமல் ஸத்திய சீலர்களான வேறு அரசர்களை இன்னும் மூன்று நாட்களுக்குள் தேடி அடைந்து என் தரும நியாயங்களை நிலை நாட்டிக் கொள்ளுவேன்" என்று சபதம் கூறிவிட்டு அந்தச் சபையை விட்டு விலகினேன். அதற்குப் பின்னர் அநேக அரசர்களைப் போய்ப் பார்த்தேன். நான் நினைத்தபடி நற்குண மிக்க மன்னர் ஒருவரும் கிடைக்கவில்லை. இப்போது தான் இந்த ராஜேந்திரனின் ஸத்தியத்தைப்பற்றியும் தரும குணங்களைப் பற்றியும் கேள்வியுற்றேன். அதற்காக இங்கே ஓடி வந்தேன். இப்போது நான் அவரிடம் சரணம் அடைகிறேன். என் பிரதிக்ஞையின்படி நான் அவருடைய முகத்தை உடனே பார்த்தாக வேண்டும். ஆதலால் எனக்கு இக்கணமே அவரைக் காட்டுங்கள். இதற்கு நீங்கள் மறுத்தால் மூன்று நாட்களாகப் பட்டினி கிடக்கும் என்னுடைய உயிர் உடனே

போய் விடும். நான் இறந்தால் என்மனைவியும் உடனே மரிப்பள். பின்பு என் இளங்குமரன், ஒரு இனிய பசு, ஒரு மான், ஒரு கிளி இவையும் இறக்கும். இன்னும் ஒரு முகூர்த்த காலத்துக்குள் உங்கள் அரசரின் முகத்தை நான் பார்க்காவிடில், எங்கள் இத்தனை பேருடைய உயிரும் உடனே போய் விடும். அந்தப் பாபமெல்லாம் உங்களைத் தான் வந்தடையும். ஆகையால் உடனே அரசரைக் காண்பித்து என்னை அவருடைய மந்திரியாக ஏற்றுக் கொள்ளும்படி ஏற்பாடு செய்யுங்கள்'' என்று கூக்குரலிட்டான்.

இதைக் கேட்ட மந்திரிகளும் மற்றுமுள்ள வேலைக்காரர்களும் ஒன்றும் தோன்றாமல் சிறிது நேரம் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து நின்றனர். "இந்த மகாசிவராத்திரியின் இரவில் நான்கு யாமங்களும் ஈசனைக் குறித்து விசேஷ பூஜை செய்ய வேண்டுமென்று ஸங்கல்பம் செய்து கொண்டு நமது அரசர் தியான நியமத்தில் இருக்கிறார். நாளை சூரியோதயம் வரையில் அவர் தமது ஆஸனத்தைவிட்டு எழுந்திருக்கப் போவதில்லை. ஆனால் இந்த மனிதனோ அரசரைக் காணாவிடில் ஆறு ஆன்மாக்களுக்கும் ஆபத்து நேரும் என்கிறான். இந்தப் பாபத்துடன் சரணம் புகுந்தவனைக் காப்பாற்றாது விட்ட பெரும் பாபமும் நம்மைச் சாரும் என்கிறான். இவனைக் காப்பதானால் அரசரது நிஷ்டை கலைந்துவிடும். நிஷ்டையைக் காப்பதானால் இவனையும், மற்றும் சில உயிர்களையும் கொன்ற பழியும் பாபமும் சேரும். என்ன செய்வது? இந்தத் தருணத்தில் ஈசன் தான் நமக்கு ஒரு வழிகாட்டி உய்விக்க வேண்டும்'' என்று அவர்கள் எல்லோரும் கைகூப்பி கண்களில் நீர் மல்க தியாகேசனைக் குறித்துப் பிரார்த்தித்தனர்.

பக்த ரக்ஷகனாகிய தியாகராஜப் பெருமான், உடனே ராஜேந்திரனைப் போல் உருவங் கொண்டு அந்த மனிதனுக்கு எதிரில் தோன்றினார். அவர் அவனைப் பார்த்து, "இதோ நீ விரும்பிய வண்ணம் உன் எதிரில் தோன்றினோம். உனக்கு

அபயமும் வழங்கினேம். நீ நமது முகத்தைக் கண்டு செல்லலாம்" என்றனர்.

இந்தக் காட்சியைக் கண்ட நாரதாதி மகரிஷிகள் ராஜேந் திரனின் பக்தியையும், தியாகேசருடைய கருணையையும் கொண்டாடி அந்தரத்திலிருந்து பூமாரி பொழிந்தனர். இந் நிலையில் அங்கிருந்த மந்திரி பிரதானிகள் யாவரும் வந்தவர் பரமேசனே என்பதை அறிந்ததும் மெய்ம்மறந்து அளவிலா ஆனந்தமுற்றனர்.



## 67. வேதியனுக்கும் மா மாத்துக்கும் ஸாயுஜ்யம் அளித்த லீலை.

பல்லாயிர வருஷங்களுக்கு முன் மஹோததியின் கரையில் காத்தியாயன மகரிஷி நிலை பெற்றுத் தவம் புரிந்தார். அதனுல் அது முதல் அந்தக் காட்டுக்குக் 'காத்தியாயன வனம்' என்னும் பெயர் உண்டாயிற்று.

அந்த வனத்தில் பூமியெங்கும் தருப்பையும் பசும்புற் களும் நெருக்கமாகப் படர்ந்து அழகுபடுத்தின. கோட்டான், கழுகு, பருந்து முதலிய துஷ்டப் பறவைகள் இல்லாமல் கிளி, சாரிகம், குயில், மயில், அன்னம், காரண்டவம், ஸாரஸம், சக்ரவாகம் முதலிய பட்சிகளும், மான் முதலிய சாந்த ஜந்துக் களும், செந்நெல் முதலிய உணவுப் பொருள்களும், ரஸாலம், பனஸம் முதலிய கனி வகைகளும் அங்கே நிறைந்து விளங்கின. ஆதலால் அந்த வனம் தவத்துக்குத் தக்க இடம் என்னும் புகழைப் பெற்றது.

இந்தக் காத்யாயன வனத்தில் 'தக்ஷிணமூர்த்தி' எனப் பெயரிய வேதியன் ஒருவன் இருந்தான். அவன் தக்ஷிண

மூர்த்திப் பெருமானின் பாத கமலங்களையே உறுதியாக நம்பியவன், தனது வயது முதிர்ந்ததும் அந்த அந்தணன் வைராக்கியமடைந்து கண்களை மூடிக்கொண்டும், ஒரு காலால் பூமியில் நின்றுகொண்டும், இரண்டு கைகளையும் சூரியனுக்கு எதிராக நீட்டியும், கண் பார்வை மூக்கின் நுனியில் விழும்படி செய்தும், எவ்வித உணவும் இல்லாமலும் அநேக ஆண்டுகளாக ஓர் அருந்தவம் செய்து வந்தான்.

அந்தத் தவம் முடிந்த பிறகு அப்பிராமணன் ஆச்ரமத்தின் வாசலில் கிருஷ்ணாஜினத்தில் உட்கார்ந்துகொண்டு, பசுபதியின் பாத கமலத்தைத் தன் இதயத்தில் நிறுத்தி, மூச்சு விடாமல் தியானம் செய்யலானான். ஈசனுடைய தரிசனம் கிடைத்தாலன்றி நிஷ்டை கலைவதில்லை என்னும் ஸங்கல்பத்துடன் வீற்றிருந்த அந்த வேதியனுக்கு மழை, காற்று, வெய்யில் முதலிய கொடுமைகள் தோற்றுவாயின.

இவருடைய ஆசிரமத்துக்கு எதிரில் ஒரு தடாகமும், அதன் கரையில் ஒரு மாமரமும் இருந்தன. அந்த மாமரத்தை ஒரு காளஸர்ப்பம் சுற்றிக்கொண்டு அங்கேயே வசித்து வந்தது. அந்தப் பாம்பு நூறு வருஷங்களுக்கு ஒரு தடவை விஷத்தைக் கக்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தது. அந்த விஷ அக்கினியால் அருகிலிருந்த வஸ்துக்களும், பிராணிகளும் எரிந்து சாம்பராயின.

மாமரத்தின் வேர்களின் வழியாக ஊறிச் சென்ற விஷம் அந்தக் குளத்தின் ஜலத்திலும் பரவியிருந்தது. அதனால் அந்தத் தடாகத்தில் நீர் அருந்திய மான்களும் மனிதர்களும் ஆவி நீத்துப் பிணமாய்க் கிடந்தனர். அந்த மரத்தின் காற்றுப் பட்டால் கூட பல உயிர்கள் சேதமடைந்தன. அந்த மரத்தைச் சுற்றிலும் ஒரு புல் பூண்டு கூட முளைப்பது இயலாததாகி விட்டது.

அம்மரத்தின் கனிகளைப் புசித்தும், தடாகத்தில் நீர்

அருந்தியும் தினந்தோறும் அநேக ஜீவராசிகள் தம் உயிரைத் துறந்து வந்தன. இது இவ்வாறு நடந்துவருகையில் ஒரு நாள் திருவாரூரைப் பரிபாலனம் செய்யும் 'ஸுபர்வ சோழ' னுடைய மந்திரியாகிய 'மதிஸாகரன்' என்பவனும், இளவரசனும் வேட்டையாடச்சென்று இந்த ஆசிரமத்தை அடைந்தனர். ஆசிரமத்தின் சுற்றுப்புறங்களிலும், மரத்தின் கீழும், தடாகத்தின் படிகளிலும் ஆயிரக்கணக்கான பற்பல ஜீவராசிகள் மாய்ந்திருப்பதைப் பார்த்து அவர்கள் அதிசயித்தனர். நெடுநேரம் யோசித்துப் பார்த்தும் அதற்கு உரிய காரணம் அவர்கள் புத்திக்குப் புலப்படவில்லை.

அவர்கள் அங்கே தவநிலையில் வீற்றிருந்த தக்ஷிணமூர்த்தியை நோக்கி, "இத்தனை உயிர்களும் இறந்திருக்கையில் இவன் ஒருவன் மட்டும் பிழைத்திருக்கிறானே; ஒருகால் இவனுடைய தவத்துக்கு இடையூறு நேர்ந்ததால் இந்தப் பிராணிகளைச் சபித்து எரித்தும், பிணமாகவும் செய்து விட்டானோ? சரி, இவனைத் தூக்கிக் கொண்டுபோய் அரசரின் முன்பு விட்டு உள்ளதை அறிவோம். இதுமுதல் இந்தப் பிரதேசத்தில் வரவோ, இந்தத் தடாகத்தில் நீர் அருந்தவோ கூடாதென்று எச்சரிக்க இங்கே சில காவலாளிகளையும் நியமிப்போம்" என்று தீர்மானித்து, அப்படியே அங்கே சில காவலாளிகளை ஏற்படுத்தியபின், தவஞ்செய்யும் வேதியனைத் தூக்கிப் பல்லக்கில் வைத்துக்கொண்டு தமது நகரத்தை நோக்கி விரைந்தனர்.

இந்தச் சம்பவத்தை அறிந்துகொண்ட மூன்று உலக சஞ்சாரியான நாரதர் உடனே அவர்கள் எதிரில் தோன்றினர். ஏதோ சொல்வதற்காக அவர் உதடுகள் துடித்தன. முனிவரைக் கண்டவுடனே மந்திரியும், இளவரசனும் கரங்கூப்பிப் பணிந்து நின்றனர்.

அப்போது நாரதர் அந்த அமைச்சனை நோக்கி, "மதிசாகர! நான் நாரதன். இங்கே உயிர்கள் மரித்திருப்பதற்குக்

காரணம் இந்த யோகியல்ல; அதோ அந்த மாமரம். அதன் கதையைச் சொல்லுகிறேன் கேள்.

"சம்புபத்திரன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் மிக்க கருவமுற்று, காட்டில் இருந்த ஒரு ஸர்ப்பத்தைப் பிடித்துத் தன் கழுத்தில் அணிந்துகொண்டு, பாம்பாபரண னாகிய பரமேசனுக்குத் தான் ஸமமாகிவிட்டதாய் எண்ணித் திரிந்தான். ஒரு சமயம் நான் அவன் எதிரில் தோன்றிய போது என்னை அவமதித்தான். அதனால் அவனுக்கு நான் மாமரமாக முளைக்கும்படியும், அந்தப் பாம்பும் அந்த மரத்தையே சுற்றி யிருக்கும்படியும் சாபமிட்டேன். அந்த மரமும் பாம்பும் தான் இவை. மீண்டும் சற்று மனமிரங்கி நான் சாபத்துக்கு விமோசனமும் கூறினேன். அதன்படி இந்த அந்தணனுக்குப் பேரருள் கிட்டும்போது இந்த மரத்தின் சாபமும் விலகி சம்புபத்திரன் நற்கதி பெறுவான்.

இந்த வேதியன் திருவாரூர் நாதனைக் குறித்துத் தவம் செய்து முடித்துவிட்டு இப்போது யோகத்தில் அமர்ந்திருக்கிறான். இந்த யோகமும் இன்னும் சில நிமிஷங்களுக்குள்ளாகவே முடிவடைந்து தியாகேசர் அவன் எதிரில் தோன்றி அவனுக்கு 'ஸாயுஜ்யம்' அளிக்கப்போகிறார். அப்போதே மாமரத்துக்குச் சாப விமோசனமும், இவ்விடத்தில் இறந்த ஜீவராசிகளுக்கு மோக்ஷமும் உண்டாகப் போகின்றன. ஆகையால் இந்த யோகியைக் கொண்டுபோய் இருந்த இடத்தில் விட்டுவிடுங்கள்; நீங்களும் விரும்பினால் சற்றுநேரத்தில் இந்த யோகிக்காக வரப்போகும் வேதச் சுடரைக் காணலாம்" என்று சொல்லிக்கொண்டே இருக்கையில் கோடி சூரியப் பிரகாசத்துடன் பார்வதி தேவியை அணைந்துகொண்ட தியாகேசர் ஆகாயத்தில் கணநேரம் தோன்றினார்.

திரிகாலமும் உணர்ந்த நாரதர் கூறியது போலவே யோகிக்கு ஸாயுஜ்யம் கிடைத்தது. விருக்ஷமும் சாபம் மாறி வேந்தனாக நின்று துதிசெய்தது. அங்குள்ள ஜீவராசிகளும்

நற்கதி அடைந்தன. மந்திரி முதலியோர்கள் தியாகேசனையும் அங்கே தோன்றிய மகிமைகளையும் கண்ணாரக் கண்டு களித்தனர். அதுமுதல் 'காத்யாயன' வனத்தில் தீங்குகள் அழிந்து திருவருள் நிறைந்தது.



## 68. நரி முகத்தை மாற்றி நன்மையளித்த லீலை.

எப்போதும் வேதகோஷம் நிறைந்து விளங்கிய வேதநாதபுரம் என்னும் அக்ரகாரத்தில் 'குணபூஷணன்' என்னும் அந்தணர் ஒருவர் இருந்தார். அவர் இளம்பிராயத்திலேயே குருவின் ஆசிரமத்தை அடைந்து முப்பத்திரண்டு வயது ஆகும் வரையில் ஆசிரியரிடம் வித்தை கற்றார். அவர் ஆசிரியரிடம் பணிவும், பக்தியும் கொண்டு சிட்சை, வியாகரணம், சந்தஸ்ஸு, நிருக்தம், ஜோதிஷம், கல்பம் என்னும் ஆறு அங்கங்களுடன் கூடிய ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும், மீமாம்ஸை, தர்க்கம், பதினெண் புராணங்கள், தர்ம சாஸ்திரம் முதலியவற்றையும் ஐயமறக் கற்றார்.

குருகுல வாஸம் முடிந்தபின்பு அவர் ஆசிரியரிடம் அனுமதி பெற்றுத் தம்முடைய இல்லத்துக்குத் திரும்பி வந்தார். பின்னர், காச்யப கோத்திரத்தில் உதித்த ஒரு மறையோனின் மகளை மணந்து இல்லறத்தை இனிது நடத்தலானார். அதன் பயனாக அவருக்கு ஒரு புதல்வி பிறந்தாள். ஆனால் அந்தக் குழந்தை பூமியில் ஜனித்தவுடனே கழுத்துக்குக் கீழே பெண் உருவமாகவும், முகம் மட்டும் நரியைப்போலவும் தோற்றமளித்தாள். இதனைக்கண்ட பெற்றோர்கள் மிகவும் வருந்தி தங்கள் பாபப் பயன்தான் இந்த நரிமுகப் பெண்ணைத் தமக்கு அளித்ததோ என நினைந்து மனம் நொந்தனர்.

குணபூஷணர் எவ்வளவு யோசித்தும் தமது புதல்வியின் நரிமுகத்தை மாற்றத்தக்க உபாயம் புலப்படவில்லை. பசுபதியின் கருணை ஒன்றினால் அல்லாது மற்ற எவ்வகையாலும் தமது பாபத்தைத் தீர்க்க முடியாதென்பதை அவர் உணர்ந்து அது முதல் ஒவ்வொரு புண்ய க்ஷேத்திரத்திற்கும் சென்று சிவதரிசனம் செய்ய வேண்டுமென்று நிச்சயித்தார். அவ்வாறே அவர் ஸங்கல்பம் செய்துகொண்டு தமது மனைவியுடனும் புதல்வியுடனும் ஸ்தல யாத்திரைக்குப் புறப்பட்டுவிட்டார்.

இவ்வாறு அந்த அந்தணர் அநேக க்ஷேத்திரங்களுக்குப் போய்ப் பரமேசனைத் தரிசித்துப் பின்னர் திருவாரூர் வந்து சேர்ந்தார். அங்கு தியாகேசனின் திவ்ய ஸ்வரூபத்தைத் தரிசிக்கும்பொழுதே அவ்வேதியனுடைய ஸுஷும்நா நாடி வழியாக ஓர் ஆனந்தப் பெருக்கு உண்டாயிற்று. அவருடைய மனத்தில் ஒரு புத்துணர்ச்சி தோன்றி புளகம் உண்டாயிற்று. நான்கு திசைகளிலும் நற்சகுனங்கள் உண்டாயின.

இவற்றை எல்லாம் கண்ட குணபூஷணர் மிகவும் மகிழ்ச்சியுற்று "ஆ! தியாகேசனின் மகிமையை என்ன சொல்ல? இந்தச் சந்நிதியில்தான் எனக்கு இத்தகைய ஆனந்தம் உண்டாயிற்று. இல்லாமலா தொண்டர்கள் இந்த இறைவனை 'இணையற்றவன்' என்று போற்றி வருகிறார்கள்? நாம் சில காலம் இந்தப் பெருமானையே வழிபட்டு வருவோம்" என்று தமது மனைவியுடன் கூறி திருவாரூரிலேயே தங்கினார்.

அதுமுதல் அவர் தமது மனோரதம் நிறைவேறுவதற்காக பஞ்சேந்திரியங்களின் ஓட்டத்தை அடக்கி தினந்தோறும் காலையில் பஞ்சாக்ஷர மந்திரத்தையும் ஈசான தேவதா ப்ராண மகா மந்திரம் முதலிய மந்திர மாலிகையையும் பதினாயிரம் தடவை ஜபம்செய்து வரலாயினர். பின்பு, ஒவ்வொரு நாளும் தமது புதல்வியைப் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வித்து நெற்றியில் விபூதி குங்குமங்களிட்டு அவளுடன் தியாகேசனின் ஸந்நிதியை நூற்றெட்டு தடவை பிரதக்ஷிணம் செய்துவந்தார்.

ஒருநாள் இந்த அந்தணர் ஜபம் செய்துகொண்டிருக்கையில், கருணாமூர்த்தியாகிய தியாகராஜர் ஒரு பிராமணவடிவங்கொண்டு அவர் எதிரில் வந்து நின்றார். குணபூஷணர் அவரைக் கண்டவுடனே வணங்கி "ஏ பிரம்ம ஸ்வரூபியே! என் ஜபம் முடிந்தவுடனே உமது தரிசனம் கிடைத்ததால், இதனை ஈச்வர தரிசனமாகவே நினைக்கிறேன். இன்று என் ஆன்மாவுக்குப் பயன் உண்டாகியது. நீர் என் வீட்டுக்கு அதிதியாக எழுந்தருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தார்.

பரம்பொருளாகிய பிராமணர் குணபூஷணரின் பிரார்த்தனைக்கு இணங்கி அவர் இல்லத்துக்கு அதிதியாகச்சென்று அங்கே அன்புடனும் பக்தியுடனும் செய்யும் உபசாரங்களைப் பெற்றார்.

அச்சமயத்தில் அவர் நரிமுகத்தோடு விளங்கிய பெண்ணைப் பார்த்து "இந்தப் பெண் யார்'' எனக் கேட்டார். அதற்கு குணபூஷணர் பதில் சொல்லிக்கொண்டிருக்கையிலேயே அந்த நரிமுகப்பெண் நரியைப்போல் ஊளையிட்டுக்கொண்டு விருந்துக்கு வந்த வேதியன் பேரில் பாய்ந்தது. அதைக்கண்ட பரமன் சினங்கொண்டு பாய்ந்த அந்தப் பெண்ணைத் தடுத்து தமது திருக்கையினால் அவளது வாயைக் கெட்டியாக மூடி, ஊளையிடாமல் செய்து ஒரு தடவை முகம் முழுவதையும் தடவிக்கொடுத்தார். அவரது கர ஸ்பரிசத்தினால் உடனே அந்தப் பெண்ணின் நரிமுகம் மாறி அழகிய மனுஷ்ய முகம் உண்டாகி விட்டது.

இந்த அதிசயத்தைக் கண்ட அவ் வந்தண தம்பதிகள் அதிதியை நமஸ்கரிக்க வேண்டுமென்று அவர் அருகில்செல்லுகையில் அதிதி விரைந்தெழுந்து ஓட ஆரம்பித்தார். அந்தண தம்பதிகள் அவரை விடாமல் பின்னாலேயே தொடர்ந்து ஓடினர். நகரத்தோர் கண்களில் தென்படும்படி மனித உருவத்துடன் ஓடிய மகாதேவன் கோயிலுக்குள் நுழைந்து மஹா சக்தியில் மறைந்துவிட்டார்.

இத்தருணம் காலைநேர பூஜை சமயமாயிருந்ததால் அர்ச்சகரும் அடியார்களும் அங்கே திரண்டிருந்தனர். ஆனால் கர்ப்ப க்ருஹத்தில் ஈசனைக் காணாமையால் அவர்களிடையே பெரிய பரபரப்புத் தோன்றியது. அதே சமயம் பிராமண தம்பதிகள் ஓடிவருதலைக் கண்டு அவர்களை விசாரிக்கையில் செய்திகள் யாவும் வெளியாயின. தியாகராஜப் பெருமானே திருக்கோயிலை விட்டுச் சென்று அந்தப் பெண்ணின் நரி முகத்தை மாற்றி அருள்புரிந்தவர் என்பதை அனைவரும் உணர்ந்து இறைவனது கருணையைப் பலவாறு போற்றி மகிழ்ந்தனர்.



## 69. பழியை நீக்கி முனிவரைக் காத்த லீலை.

விசாகா நகரத்தில் மணிபத்திரன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவனுடைய குமாரனை ராஜபத்திரன் என்பவன் வேட்டையாடுவதில் மிக்க விருப்பம்கொண்டவன். அவன் ஒருநாள் ராஜவீதியில் போய்க்கொண்டிருக்கையில் ஒரு குதிரை வியாபாரியைக் கண்டு வெகு நேரம் அவனுடன் பேசியபின், அந்த வியாபாரியிடமுள்ள குதிரைகளில் சிறந்த ஒன்றைத் தனக்கு விலைக்குத் தரும்படி கேட்டான்.

வியாபாரி ஒரு குதிரையை இளவரசனுக்குக் காட்டி "இளவரசே! இந்தப் புரவியைப் பாரும். நெற்றியில் இரண்டு முத்துச் சுழிகள்; அர்த்த சந்திர லோமம்; இவற்றை உடைய இந்தப் பரி மிகவும் லக்ஷணமானது. இதனை வாங்கிக்கொள்ளும்" என்று கூறினான்.

இளவரசன் அதற்குச் சம்மதித்து, தன் தந்தையின் அனுமதியும் பெற்று அந்தக் குதிரையை விலைகொடுத்து வாங்கிவிட்டான். மேலும் அந்தச் சமயம் ஜோதிஷர்கள் எல்லோரும் வெளியூர் போயிருந்தமையால் நல்ல நாள் நக்ஷத்திரம் முதலியவற்றைப் பார்க்காமலும், கால விளம்பத்தைப் பொறுக்காமலும் அந்தப் புரவியின் மீது ஏறியும் சென்றான்.

சிலநாள் சென்றபிறகு ஜோதிஷர் திரும்பி வந்து இளவரசன் புதிதாக வாங்கிய புரவியையும், அவன் அதன்மேல் ஏறிச்சென்ற ஓரையையும் ஆராய்ந்து பார்த்து, குதிரை மிகவும் சிறந்ததாயினும் அதனை வாங்கிய நாளும் ஆரோகணித்த நேரமும் கொடியன என்பதைக் கண்டனர். இச் செய்தியை அரசனுக்கும் அவர்கள் தெரிவித்து, உடனே அரசன் திருவாரூர் சென்று காவிரியில் நீராடி சில தானங்களைச் செய்தால் வரப்போகும் தீமை விலகும் எனவும் உணர்த்தினர்.

அவர்கள் வார்த்தையின்படியே அரசன் தன் பொறுப்பை அமைச்சர்களிடம் ஒப்படைத்துவிட்டு புண்ணியத்தை நாடி திருவாரூருக்குப் புறப்பட்டான். அங்கே சேர்ந்தபின் கமலாலயத்தின் கரையில் விளங்கும் தியாகேசனைத் தினந்தோறும் தரிசித்தும் பற்பல தானங்களைப் பீடை நிவர்த்திக்காகச் செய்தும் வரலானான்.

இங்ஙனம் மூன்று மாதங்கள் கழிந்தபின், ஒருநாள் இளவரசன் வேட்டையாடுவதற்காகப் புதிய குதிரையின் மீது ஏறிக்கொண்டு புறப்பட்டான். அவன் பெருங் காட்டில் நுழைந்து பற்பல விலங்குகளைக் கொன்று களைத்துப்போய் ஒரு தடாகத்தின் கரையில் தங்கித் தண்ணீர் அருந்தி ஒரு மரத்தடியில் படுத்தான். உடனே அவனைத் தூக்கம் சூழ்ந்து கொண்டது.

விசாகா நகரத்து அரசனுக்கும் கலிங்கநாட்டுக் காவலனுக்கும் அப்போது பெரும் பகை மூண்டிருந்தது. கலிங்க நாட்டிலிருந்து வேவுகாரன் ஒருவன் அந்த வழியாக வந்து

கொண்டிருக்கையில் அழகிய குதிரை ஒன்று மரத்தில் கட்டப் பட்டிருப்பதையும், விசாகா நகரின் இளவரசன் நன்றாகத் தூங்குவதையும் கண்டு மெதுவாகக் குதிரையைக் கட்ட விழ்த்து, வலுவில் அதனை இழுத்துப்போய் ஒரு மலைக் குகை யில் அடைத்துவிட்டுச் சில வீரரை அங்கே காவலும் வைத் தான்.

நித்திரை நீங்கிய இளவரசன் எழுந்து சுற்று முற்றும் பார்த்துக் குதிரையைக் காணாமையால் மனங்கலங்கினன். அதற்குள் அவனுடைய பணியாட்களும் அங்கு வந்துசேரவே எல்லோருமாகப் புரவியை எங்கெங்கும் தேடியும் அது அகப் படவில்லை.

இளவரசன் வருத்தத்துடன் நகரைச் சேர்ந்தான். மறு நாள் பல வீரர்களை வருவித்துக் குதிரையைத் தேடிக் கண்டு பிடிக்கும்படி நாலாபுறமும் அனுப்பினன்.

அவ்வாறு சென்ற வீரர்களில் சிலர் கோதாவரி நதிக் கரையில் ஒரு ஆசிரமத்தின் முன்பு குதிரையின் குளம்படிகள் இருக்கக் கண்டனர். அங்கு ஆசிரமத்தில் சிவனைப்பற்றி சிந்தித்துப் பாராயணம் செய்துவரும் ஒரு முனிவரைக்கண்டு அந்த வீரர்கள் “முனிவரே! இங்கே ஒரு குதிரை வரக் கண் டீரா? இங்கே குதிரையின் குளம்படிகள் தென்படுகின்றனவே” எனக் கேட்டனர்.

முனிவர் தமது ஆஸனத்தைவிட்டு எழுந்துவந்து வெளியே மணலில் பதிந்திருக்கும் குதிரையின் குளம்புச்சுவடுகளைக் கூர்ந்து நோக்கினர். அவர்கள் அந்த வீரர்களைப் பார்த்து “உங்கள் குதிரையின் நெற்றியில் இரண்டு முத்துச் சுழிகள் உள்ளனவா? புரவியின் நிறம் சிவப்பா? ரந்திர ஸ்தானத்தில் அர்த்த சந்திர ரோம ராஜி உண்டா?” என்றும் பல கேள்வி களைக் கேட்கக் கேட்க வீரர்கள் “ஆம் ஆம்” என்று தலையை அசைத்து அவ்வாறு எல்லா அடையாளங்களையும் கூறும் அந்த

முனிவரே குதிரையைத் திருடியிருக்க வேண்டும் என்று தீர்மானித்து அவரைக் கொண்டுபோய் இளவரசனிடம் விட்டனர். அந்த முனிவர் புத்திக்கூர்மையாலும், தவ மகிமையாலும் குதிரையின் அடையாளங்களைக் கூறினர் என்பதை உணராத இளவரசன் அவரைச் சிறையில் அடைக்கும்படி கட்டளையிட்டான்.

சிறைச்சாலைக்குச் சென்ற முதல்நாளே முனிவர் தியாகேசனைக் குறித்து "ஏ பரம்பொருளே! இன்று உன்னைப் பாராயணத்தால் பணிந்து போற்ற இயலாமற் போயிற்றே; இந்தப் பாவிகள் சிறையில் அடைத்து உன்னைச் சிந்தித்துப் போற்ருத வாறு இடையூற்றை விளைவித்தனரே" என்று வருந்தி முறையிட்டார்.

அத்தருணம் திருவாரூரில் இருந்த மணிபத்திர மகாராஜன் கேட்கும்படியாக ஓர் அசரீரி உண்டாயிற்று. "ஏ அரச! உன் புதல்வனுடைய புரவியை உன் பகைவர் மகேந்திர மலைக் குகையில் அடைத்திருக்கின்றனர். அதற்காக குற்றமற்ற என் தொண்டனை உன் மகன் காவலில் வைத்திருக்கிருன். உடனே என் பக்தனை விடுதலைசெய்; வரப்போகும் ஆபத்தில் அவனே உனக்கு உதவிசெய்வான்" என்று அசரீரி சொல்லிற்று.

இதைக்கேட்ட அரசன் மனம்வருந்தி, உடல் நடுங்கி இச் செய்தியை இளவரசனுக்குச் சொல்லியனுப்பினுன். இளவரசன் முனிவரை உடனே விடுதலை செய்து தன்னை மன்னிக்குமாறு பிரார்த்தித்தான்.

அதன் பின்பு சில வீரர்கள் மகேந்திர மலைக்குச் சென்று குதிரையை மீட்க முயற்சித்தனர். அந்தக் காரணமாக களிங்கத்துக்கும் விசாகா நாட்டுக்கும் பெரும் போர் நிகழ்ந்தது. விசாகா நாட்டு மந்திரிகள் முனிவரை அணுகித் தமக்கு அருள் புரிய வேண்டும் என்று பிரார்த்தித்தனர்.

கருணைமிகுந்த முனிவர் யுத்தகளத்துக்குள் நுழைந்து அந்தக் குதிரையின் காதில் ஒரு மகா மந்திரத்தை உபதே

சித்தார். அந்த மகிமையினல் அப்புரவிக்கு பதினயிரம் யானை பலம் உண்டாகிவிட்டது. உடனே அது பகைவரின் படைக்குள் புகுந்து அச்சேனைகளைச் சின்னபின்னமாக்கி இள வரசனுக்கு வெற்றிமாலையைச் சூட்டியது. இதற்குள் மணி பத்திர ராஜனும் வந்துசேர்ந்தான். இவ்வித வெற்றிக்குக் காரணம் அந்த வேந்தன் சிலகாலம் திருவாரூரில் தங்கியிருந்து தானம்செய்த பலனே என்பதை எல்லோரும் உணர்ந்து தியா கேசனைப் புகழ்ந்து போற்றினர்.



## 70. மாயா மந்திரத்தை அழித்து மகவைக் காத்த லீலை.

சோழ மண்டலத்தை 'விக்கிரம சோழன்' என்னும் மன்னன் ஆண்டு வருகையில் 'ஸுகுண பாண்டியன்' என்பான் பாண்டி நாட்டுக்கு அரசனக இருந்துவந்தான். இவ்விரு அரசர்களுக்கும் பகை மூண்டதின் பயனக பெரும் போர் விளைந்தது. செல்வமும் படையும் மிகுந்திருந்த சோழன் பாண்டியனை முறியடித்து அவன் படைகளைப் பஞ்சுபோல் பறக்கச்செய்தான்.

இதனல் மனக்கொதிப்பும் அவமதிப்புமுற்ற ஸுகுண பாண் டியன் சோழனைப் பழிவாங்குவதற்குரிய காலத்தை எதிர்பார்த் திருந்தான். அதற்காகப் பற்பல சூழ்ச்சிகளை அதுமுதல் செய் யத் தலைப்பட்டான்.

அத்தருணத்தில் விக்கிரம சோழனுடைய பட்டமகிஷிக்கு பரமேசன் கருணையினால் கர்ப்பம் உண்டாயிற்று. தன் வம்சத்துக்கு ரத்தினம்போன்ற ஸந்தானத்தை வயிற்றில் தரித்திருக்கும் மனைவியைக் கண்டு அரசன் மிகவும் மகிழ்ச்சியுற்றான். உரிய காலத்தில் பும்ஸவனம் முதலியவையும் நிறைவேறின.

பத்துமாதமும் சென்றபின் பட்டமகிஷி ஒரு சிறந்த லக்னத்தில் பார்வதி தேவி ஷண்முகனை ஈன்றதுபோல் ஒரு சற்புத்திரனுக்குத் தாயாகினாள். ஜோதிடர்கள் அந்தக் குழந்தை பிறந்த லக்னத்தைப்போல் மேன்மையானதே இல்லை என்று புகழ்ந்து பேசினர். அந்தச் சமயத்தில் திசைகள் நிர்மலமாக விளங்கின. குளிர்ந்த காற்று வீசியது. அக்கினி பிரதக்ஷிண ஜ்வாலையோடு விளங்கினான். பட்சிகள் இனிமையாகப் பாடின. வந்திகளும் வைதாளிகரும் பண் இசைத்து மகிழ்வூட்டினர். சிறையிலிருந்தோர் விடுதலை பெற்றனர். நாடெங்கும் அரசனுக்கு புத்திரப்பேறு உண்டான சந்தோஷத்தால் ஆலய வழிபாடுகள் நடந்தன.

அந்த நன்னாளில் விக்ரம சோழன் மங்கள ஸ்நானம் செய்து சுத்த வஸ்திரம் உடுத்திக் கொண்டு பிராமணர்களுக்கும் ஏழைகளுக்கும் விசேஷ திரவிய தானம் செய்த பின் புதல்வனுடைய முகத்தை மிக்க ஆவலுடன் பார்த்தான். குங்கும தூள்களைப் போன்ற சிவந்த நிறமுடையவனாகவும், சங்கு, சக்கிரம், குடை, தாமரைப்பூ, கொடி, மீன் இவற்றின் உருவத்தை ரேகைகளால் கைகளிலும் கால்களிலும் தரிக்கிறவனாயும், கமலம் போன்ற அழகிய கண்களை உடையவனாயும், அழகாக அசைந்து தொங்கும் முன் நெற்றி மயிர்களை உடையவனாயும் விளங்கும் அப்புதல்வனைக்கண்டோர் அனைவரும் ஆசி கூறினர்.

சோழனுக்கு வாய்த்த இந்த மகிழ்ச்சிப் பேற்றை வேவுகாரர் மூலமாய் ஸுகுண பாண்டியன் கேள்வி யுற்று

அடங்காப் பொருமை கொண்டான். எவ்வகையாலேனும் சோழனுடைய குழந்தையைக் கொன்றுவிடவேண்டும் என்று அவன் தீர்மானித்து மந்திர வித்தைகள் கற்றுத்தேர்ந்த ஒரு வஞ்சகனை வருவித்து "நீ போய் எப்படியாவது அந்தச் சோழனுடைய புதல்வனைக் கொன்று வா" எனப் பணித்தான்.

மந்திரவாதி பாண்டியனுடைய கட்டளையை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு ஒரு ஸந்நியாசியைப்போல் உடையணிந்து திருவாரூர் நகரை அடைந்தான். அங்கே ஸபாமண்டபத்தின் எதிரில் நின்று "ஹர ஹர சம்போ சங்கரா" என்று பசுபதியின் நாமங்களைப் பலவாறு உச்சரித்துக் கூவினான். இவனுடைய வஞ்சகநினைப்பை அறியாத மன்னனும் மற்றோரும் இவன் ஒரு உண்மையான யதிதான் என்று எண்ணி அவன் பாதங்களில் விழுந்து பணிந்தனர்.

அந்தச் சந்தர்ப்பத்தையே எதிர்பார்த்திருந்த மந்திரவாதி அரசனை ஆசீர்வதித்து அவனுடைய கையில் கொஞ்சம் விபூதியைக் கொடுத்து "வேந்தே! இது மஹா மந்திரங்களால் ஜபிக்கப்பட்ட திருநீறு. இதனைப் பயபக்தியுடன் எடுத்துச் சென்று உன் புதல்வனுடைய சரீர முழுவதிலும் தடவித்தேய்; அதனால் எவ்வகையான பீடைகளும் விலகி, உன் மைந்தன் விசேஷ ஸௌக்கியத்தை அடைவான். இந்த நீறு உன் குழந்தைக்காகவே நம்மால் தயாரிக்கப்பட்ட ஸித்த ஔஷதம். எடுத்துச்சென்று நாம் சொன்னபடி செய்" என்றான்.

இவன் வார்த்தைகளை உண்மையென நம்பிய சோழ அரசன் அந்த விபூதியை அரண்மனைக்கு அனுப்பி குழந்தையின் உடலில் தேய்க்கச் சொன்னான். அவ்வாறு தேய்த்தவுடனே குழந்தையின் கண்கள் சிவந்து கலங்கின. அது 'வீல் வீல்' என்று கதறியழத் தொடங்கியது. உடம்பு முழுவதிலும் திடீரென்று பச்சை ரணம் தோன்றிவிட்டது. குழந்தையின் குரல் மாறிவிட்டது. கையாலும் அதைத் தொடமுடியவில்லை. அரண்மனையே அல்லோல கல்லோலப்பட்டது. அரசன்

அடைந்த துயரத்துக்கு அளவே இல்லை. இதற்குள் மந்திரவாதி மறைந்துவிட்டான்.

இந்த ஆபத்து வேளையில் அரசனை ரக்ஷிக்க வேண்டும் என்று, புண்ணிய விருத க்ஷேத்திரத்தின் நடுவில் நாகேச லிங்க ரூபியாய் தோன்றிய தியாகேசன் திருவுளங்கொண்டார். உடனே ஓர் அசரீரியாக மேலே இருந்து உரைக்கலானார்.

"சோழ மன்ன! துயருறுதே! உங்கள் எதிரில் தோன்றிய ஸந்நியாசி, உங்கள் பகைவனை பாண்டியனால் ஏவப்பட்ட கொடிய மந்திரவாதி; அவன் கொடுத்த திருநீறு விஷம் நிரம்பியது. அதனைத் தடவியதால் குழந்தைக்கு இவ்விதமான தீங்கு நேர்ந்தது. குழந்தையை உடனே கோயிலுக்குக் கொண்டு போய் தியாகேசன் ஸந்நிதியில் விடுங்கள். அந்த மந்திர விஷங்கள் அழிந்து குழந்தை ஸௌக்கியமாகும்" என்று சொல்லக் கேட்டதும் மன்னனும் மந்திரிகளும் உடனே குழந்தையைக் கோயிலுக்கு எடுத்துச் சென்று தியாகராஜப் பிரபுவின் எதிரில் பூமியில் படுக்கச் செய்தார்கள். அதே கணம் குழந்தை அழுகை நீங்கிக் கண்களைத் திறந்து விளையாடத்தொடங்கியது. தியாகேசரின் அருளால் அது உடனே முற்றிலும் ஆரோக்கியம் அடைந்தது. இந்த அதிசயச் செய்தியைக் கேட்ட யார் தாம் பார்வதீ வல்லபனைப் போற்றி வணங்கார்?

*　　　*　　　*

குறிப்பு:—71-வது லீலை மூலத்தில் காணப்படவில்லை.

*　　　*　　　*



## 72. கிளிக்கும் வேடனுக்கும் நற்கதி அளித்த லீலை.

கமலாலயத்தின் கரையில் பெரிய ஆலமரம் ஒன்று உண்டு. அதில் வெகு காலமாக அநேகம் கிளிகள் கூடு கட்டிக் கொண்டு வசித்து வந்தன. அவற்றுள், 'சுகாயன்' என்னும் கிளி, நாள் தோறும் அதிகாலையில் வேதியர்கள் நீராடுவதையும், தர்ப்பணம் செய்வதையும், ஜபம் செய்வதையும், பிரதக்ஷிணம் செய்வதையும், சிற்சில புண்ணிய காலங்களில் பற்பல நாடுகளிலிருந்தும், சிறுவர் முதல் பிராயம் முதிர்ந்தோர் வரை ஆயிரக்கணக்கான ஜனங்கள் வந்து நீராடுவதையும் கவனித்து வந்தது. சில சமயங்களில் மாலையிலும், சில சமயங்களில் காலையிலும் முனிவர்கள் சிவத் தியானத்தின் சிறப்பை எடுத்துக் கூறுவதையும் கேட்டு வந்தது. பஞ்சேந்திரியங்களுக்கு எட்டாததாயும், நிர்மல வடிவுள்ளதாயும், தனக்கு ஒப்புயர்வு இல்லாததாயும், குணங்களின் தொடர்பு இல்லாததாயும், நற்குண வடிவாயும், ஸர்வாண்டங்களுக்கும் ஆதாரமாயும், வ்யக்த ஸ்வரூபியாயும், அவ்யக்த ஸ்வரூபியாயும், தியான பாவனையினால் பூஜிக்கப்பட்டவராயும், ஸாங்க வேத வடிவாயும், லிங்க ரூபியாயும், திரிமூர்த்தி வடிவாயும், திக்பாலக உருவாயும், ஸுதர்சன ரூபியாயும், ஸந்தியா ஸ்வரூபியாயும், கங்காதர வடிவாயும், உமாமகேசுவர வடிவாயும், குருவாயும், சக்தி வடிவாயும், விருஷபாரூட ஸ்வரூபியாயும், க்ஷேத்திரபால வடிவாயும், யக்ஷயக்ஞ ஸ்வரூபியாயும், கிராத வடிவாயும், ஸ்வயம்பிரகாசமாயும், அந்தராத்ம ஸ்வரூபியாயும், விளங்கும் பரப்பிரும்மமானது கமலாலயக் கரையில் தியாக ராஜ வடிவமாய் விளங்குகிறது என்றும், ஈசனுடைய வெவ்வேறான திவ்ய லீலைகளின் பெருமையையும், அந்தந்த பெரியவர்கள் சொல்லக் கேட்ட கிளியானது, "ஆஹா! என்ன ஆச்சரியம். பரமசிவனுடைய இவ்விதமான வடிவத்தை நாம் மனிதவுடலுடன் அல்லவா பார்த்து அனுபவிக்க வேண்டும்! மானிட சரீரம் நமக்கு இல்லையே! பூர்வ ஜன்ம பாபங்களால்

பறவை ஜாதியில் ஜனித்தோம்! ஆனாலும், நமது ஆன்மாவுக்கு நற்கதி கிடைக்கும்படி இவ்வீசனுக்கு நம்மாலான கைங்கரியம் ஏதேனும் செய்ய வேண்டும். ஈசுவர கைங்கரியமே நமக்கு உற்ற துணையாகும்! இந்த ஜன்மத்தில் நற்காரியங்களைச்செய்யாவிடில் மறுபிறப்பிற்கு எவ்வித நன்மையேற்படும்? ஜாதிக்கும் சக்திக்கும் ஏற்றவிதம் தக்கபடி செய்பவைகளை ஈசன் அங்கீகரித்துக் கொள்வாரென்று இக்குளக்கரையில் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆகையால், இது முதல் முடிந்த வரையில், தொண்டு செய்வதே ஜன்ம பலமாகும்" என்று எண்ணி சுநாயன் என்னும் அந்தக் கிளியானது ஒரு நாள் காலையில் நித்திரை விட்டு நீங்கியவுடன் சிறகுகளை நன்றாக உதறிக் கொண்டு எதிரில் விளங்கும் கோபுரத்தைத் தரிசித்து, "இக்கூட்டிலேயே சுகமாயிருங்கள். வெளியே எங்கும் போகவேண்டாம்" என்று தன் காதலிக்கும் மகவுக்கும் புத்தி சொல்லிவிட்டு மிகவும் வேகமாக வடதிசையை நோக்கிச் சென்றது. அங்கங்கே நதிகளின் வெள்ளத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் சக்கிரவாகப் பக்ஷியின் அழகையும், வனங்களில் மேயும் மான் கூட்டத்தையும், உத்தியானங்களின் செழிப்பையும், அழகையும், மலைச்சாரலின் தோற்றத்தையும பார்த்துக் கொண்டே வெகு தூரம் சென்று மகேந்திர மலையின் சரிவிலுள்ள ஒரு வனத்தையடைந்தது.

அங்கே சிறந்த மூங்கிற் காடு ஒன்று இருந்தது. மூங்கில்களின் கணுக்களிலிருந்து வெடித்து உதிர்ந்த முத்துக்கள் கும்பல் கும்பலாகத் தரையில் விழுந்திருப்பதைக் கண்டு மகிழ்ந்தது. "இந்த முத்துக்களால் அழகிய மாலை கட்டி நமது தியாகேசனுக்குச் சமர்ப்பிக்க வேண்டும்" என்று நிச்சயித்தது. அது முதல் தினந்தோறும் தன் மூக்கினால் கொத்திக் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்துக் கொண்டு தன் கூட்டில் சேகரித்து வைத்தது. அவற்றைக் கொண்டு மாலைகளைக் கட்டி ஒவ்வொரு மாதத்தின் பௌர்ணமியில் தியாகே

சனுக்கு ஒரு மாலேயும், கமலநாயகிக்கு ஒரு மாலேயும் அளித்து வந்தது.

இவ்வாறு நான்கு ஐந்து வருடங்கள் செய்து வந்தது. அப்பால் தேவாலய அதிகாரிகள் ஸ்வாமியின் எதிரிலும், அம்பிகையின் எதிரிலும் முத்து மாலே இருப்பதைக் கண்டு "மிகவும் விலே உயர்ந்த இந்த முத்து மாலேகளே யார் இவ்விடத்தில் போட்டனரோ" என்று ஸந்தேஹமடைந்தார்கள். பிறகு ஒவ்வொரு பௌர்ணமியின் இரவிலும் தவருமல் முத்து மாலே போடப்பட்டு வருவதைக் கண்டு அவர்கள் 'ஏதோ ஒரு தேவதை. நமது நாதனே இரவில் பூஜித்து விட்டு இதைக் காணிக்கையாக அளித்து வருகிறது போலும்' என்று அவ்வித முத்து மாலேகளே அலங்காரமாக ஈசனுக்குக் கழுத்திலும், கிரீடத்திலும் ஸமர்ப்பித்து வந்தார்கள்.

சுநாயன் என்னும் கிளியானது இவ்வாறு ஈசனுக்கு முத்து மாலே அளித்து வருகையில் ஒரு பௌர்ணமியின் பகலில் கூட்டில் உட்கார்ந்து சில முத்துக்களேத் தன் காதலிக்குக் கொடுத்துச் சில முத்துக்களே மூக்கினுல் கவ்வியெடுத்துக் கொண்டு வெகு வேகமாக மாலே கட்டி வருகையில் ஒரு முத்துத் தவறி அந்த ஆலமரத்தின் அடியில் வீழ்ந்தது. அச்சமயம் தற்செயலாய் அங்கே வந்த ஒரு கொடிய வேடன் முத்து வீழ்ந்ததைக் கவனித்தான். அதைக்கையில் எடுத்துப் பார்த்து, "இவ்வித சிறந்த முத்து இங்கே உதிர்வதற்கு என்ன காரணம்" என்று ஆலோசனே செய்து மேலே நோக்கினுன். ஆலமரத்தின் கிளேயைக்கவனிக்கையில், அதில் ஒளிந்திருந்த ஒரு கிளிக் கூட்டைக் கண்டு கையில் வில்லுடன் மரத்தில் ஏறி கிளியின் எதிரில் போய் நின்றுன். அதை நோக்கிய கிளி கிராதமூர்த்தியாகிய பரமேச்வரனே தமக்கு நன்மையளிக்க வந்துள்ளான் என்று எண்ணி மனுஷ்ய வாக்கினுல் "வாரும். நான் கிளி ஜாதியானதால் என் கூட்டில் நீங்கள் இருக்க முடியாது! இம்மரத்திலுள்ள ஒரு பெரிய கிளேயில்

எனக்கெதிரே நீர் இரும். இதோ பழம் தருகிறேன். இதை யுண்டு விடாய் தீரும்" என்று உரைத்தது. அப்போது வேடன் "தான் காலைமுதல் பலவிடம் சுற்றியும் ஒரு பறவையும் கிடைக்கவில்லையென்றும் மரத்தடியில் தான் வரும்போது ஒரு முத்து உதிர்வதைக் கண்டு மேலே பார்த்து நீ இருப்பதைக் கவனித்து உன்னைக் கொன்று புசிக்கலாம் என்றும் இங்கே வந்தேன்" என்றான். அதைக் கேட்ட பெண் கிளி கதறியது. அதைக் கவனித்த ஆண் கிளியானது தன் காதலிக்கும், தன் மைந்தனுக்கும் பல தத்துவங்களைச் சொல்லி ஆற்றுவித்து வேடனை நோக்கி, "ஓ வேடனே! நீ விரும்பியபடியே எனது மாமிசத்தினால் உன் பசியை ஆற்றிக் கொள்! அதற்கு ஒரு தடையுமில்லை. ஆனாலும், ஒரு காரியம் சொல்லுகிறேன். நீ உத்திரவு கொடுத்தால் அதனைச் சொல்லுகிறேன்" என்றது. அதைக் கேட்ட வேடன் அப்படியே சொல்லும்படி கேட்டான். உடனே கிளி "வேடர் தலைவனே! வனத்தில் உதிரும் முத்துக்களைப் பொறுக்கி வந்து மாலை கட்டி ஒவ்வொரு பௌர்ணமியின் இரவிலும் தியாகேசன் பாதத்தில் சேர்ப்பிப்பது வழக்கம். அதுபோலவே பௌர்ணமியாகிய இன்று ஈசனுக்காக இம்மாலையைக் கட்டி முடித்தேன் பார். நீ தயவு செய்து உயிருடன் விடுவாயானால் இவ்விரவு இரண்டாம் ஜாமம் கழிந்தவுடன் நான் இந்த முத்து மாலையை ஈசன் பாதங்களில் ஸமர்ப்பித்து விட்டு மறுபடியும் உன் கையில் வந்து சேருகிறேன். நான் உரைப்பது ஸத்தியம். சூரியன் முதலிய நவக்கிரகங்களும் சாக்ஷி. என் வார்த்தை பொய்யாகாது. எனது தெய்வமாகிய தியாகேசன் அறிய சத்தியம். இந்தத் தொண்டை முடித்து விட்டு மறுபடியும் வந்து சேருகிறேன். சத்தியம் சத்தியம்" என்று பிரதிக்ஞை செய்தது. அதை நம்பி வேடன் கிளியை விட்டு விட்டான். சுகாயன் என்னும் கிளி அன்றிரவில், தியாகேசனுடைய ஆலயத்திற்குள் செல்லும் சமயத்தை எதிர்பார்த்து இருந்தது. மூன்றாம் சாமம் பிறந்தவுடன் முத்து மாலையைத் துவஜ ஸ்தம்பத்தின் எதிரில் வைத்துப் பல தடவை பணிந்து ஈசனைப் போற்றி

வெகு வேகமாகப் பறந்து தன் கூட்டுக்கருகில் உட்கார்ந்திருந்த வேடனை வணங்கி, "இதோ என் சரீரத்தை உனக்கு அளித்து விட்டேன். என்னுடைய விரதம் பூர்த்தியாயிற்று. உதிரமும் மாமிசமும் நிறைந்த இந்த உடலினால் எனக்கு இனி ஆக வேண்டியது ஒன்றுமில்லை. நீயே கைப்பற்றுவாய்" என்றது.

இவ்விஷயங்களை யெல்லாம் கவனித்த அந்த வேடன் வியப்புற்று, "பக்ஷி ஜாதியில் பிறந்த கிளிக்கு ஈசுவர பக்தியும் உள்ளனவே! மனித ஜாதியில் பிறந்த நான் இது வரையில் பாபத்தையே செய்து வந்தேனே" என்று அந்தக் கிளியைப் பணிந்து, "ஓ சுகாய! நீ எனக்கு இன்று ஈசுவர தத்துவத்தை உபதேசித்தாய். நீ எனக்குக் குரு. உன்னை விட்டு விட்டேன். என் வந்தனத்தைப் பெற்று நீ வெகு காலம் வாழ வேண்டும்" என்று சொல்லி விட்டு ஆலமரத்திலிருந்து கீழே யிறங்கி மறுநாள் காலை வரை ஒன்றும் புசியாமல் சூரியன் உதித்தவுடன் கமலாலயத்தில் நீராடி வேதியரை வணங்கி, அவர்கள் அளித்த விபூதியையணிந்து தியாகேசனைப் பணிந்தான். அது முதல் உயர்ந்த சிவ பக்தியுடன் விளங்கினான். அவனுக்கும் அக்கிளிக்கும் தியாகேசர் நற்கதியை அளித்தார்.



## 73. சூன்யவாதிக்குச் சூது விளைவித்த லீலை.

ஒரு நாள் மாலை நேரத்தில் சூன்யவாதி யொருவன் மாறு வேடத்துடன் கையில் ஜப மாலையும், கழுத்தில் உருத்திராக்ஷ வடத்தையும், நெற்றியில் விபூதியையும் அணிந்து திருவாரூரிலுள்ள சந்திரசேகரப்பட்டத்தில் விளங்கும் சந்திர மௌளி பட்டருக்கருகே வந்தான். அந்தப் பட்டர் தினந் தோறும் தியாகராஜாவுக்குப் பூஜை செய்யும் அர்ச்சகர். சூன்யவாதி அவரை நோக்கி, "மூத்த சகோதரரே! உமது பாதங்களை வணங்குகிறேன்" என்று சொல்லி வணங்கி நின்றான். பட்டர் வியப்புற்று, "நீ யாரப்பா? உன் பெயர் என்ன? உனக்கு நான் எவ்விதத்தில் மூத்தவன்? இது வரையில் நான் உன்னைக் கண்டதில்லையே! உன் விருத்தாந்தத்தைச் சொல்லுவாய்" என்று கேட்டார்.

உடனே சூன்யவாதி, "ஐயா, உமது பிதாவும் என் பிதாவும் ஒரே உதரத்தில் ஜனித்தவர்கள். பால்யவயதிலேயே என் தந்தை கங்கா யாத்திரையாகச் சென்று காசியையடைந்து கங்கா தீரத்திலேயே தமது வாழ்நாட்களைக் கழித்து விட்டார். அவருக்கு நான் புத்திரனாக ஜனித்த பிறகு அவருடைய கதாப் பிரசங்கத்தில் ஒரு நாள் திருவாரூரின் சிறப்பையும் தியாகராஜனுடைய திவ்விய குணங்களையும், உமது கீர்த்தியையும் சொல்லக் கேட்டு உமது பாதங்களைக் காண வேண்டுமென்று இங்கு வந்தேன். இங்கு உம்முடன் சேர்ந்து சில தினங்கள் நானும் தியாகேசருக்கு உபசாரம் செய்ய விரும்புகிறேன். சில தினங்கள் வரை இங்கே தங்கி காவிரியில் நீராடி உம்முடன் சேர்ந்து பரமசிவனுக்குத் தொண்டு செய்து என் தந்தையிடம் போய்ச் சேருவேன். என் பெயர் ஸோமதேவன் என்பது" என்று கூறினான்.

இதைக் கேட்ட சந்திரமௌளி பட்டர் வெகு காலத்திற்கு முன் தம் சிறிய தந்தை தேச சஞ்சாரியாக வெளியிடம் சென்று அறுபது வருடமாகியும் அது வரையில் திரும்பவில்லையென்று தம் குடும்பத்தார் சொல்லக் கேட்டிருந்தமையால் அவன் சிறிய தந்தையின் குமாரனாக விருக்கலாம் என்று நம்பினர். அவனுடைய மாறுவேடத்தை முதலில் அறிந்து கொள்ள வில்லை. ஸோமதேவனைத் தம் சுற்றத்தாருக்குக் காட்டி தம்பியைப் போலவே தம்முடன் வைத்துக் கொண்டார். சில தினங்கள் சென்ற பிறகு அவன் ஸ்ரீ தியாகேசனின் பூஜையைத் தானும் செய்ய வேண்டுமென்று விரும்பினன். அப்போது பட்டர், "இந்நகரத்தாரும் அதிகாரிகளும் நீ இப்போது பூஜை செய்ய அனுமதி கொடுக்க மாட்டார்கள். சைவாகமங்களில் உள்ளபடி பெரிய தீக்ஷை பெற்றுக் கொண்டு பிறகு பூஜை செய்யலாம். வருகிற வஸந்த காலத்தில் நான் உனக்கு தீக்ஷை செய்விக்கிறேன். அது வரையில் நீ என்னுடன் இருந்து நான் பூஜை செய்யும் முறைகளையும், தந்திரங்களையும் வழிகளையும் பார்த்துக் கொண்டிரு" என்றுரைத்தார். அங்ஙனமே சூன்யவாதி ஒவ்வொரு நாளும் பட்டருடன் ஆலயத்தினுள் பிரவேசிக்கையில் தியாகராஜாவின் ரத்னஹாரம் கிரீடம் முத்துமாலை முதலிய ஆபரணங்களையும், ஸ்வர்ண மயமான பூஜா பாத்திரங்களையும் கண்டு அவற்றை யெல்லாம் எவ்வாறேனும் அபகரிக்க வேண்டுமென்று எண்ணமுற்றான். சிறந்த மேதாவியாகிய சந்திர மௌளி பட்டர் அவன் நோக்கும் நோக்கத்தையும், அகால சகாயத்தையும், பெரு மூச்சையும், முக விகாரங்களையும் பல சமயங்களில் கவனித்து அவனைப் பற்றி ஸந்தேகம் கொள்ளலானர். ஒரு நாள் இரவு அவன் தூங்குகையில் தூக்கத்தில் அவன் கிரீடம் முத்து மாலை யென்று பிதற்றுவதைக் கவனித்தார். மறு நாள் காலையில் அவனை யழைத்துப் பட்டர், "ஏ நூதன புருஷா! இது வரை நான் உன்னைப் பார்த்ததில்லை; இப்பொழுது சில நாளாக உன் முக விகாரங்களைக் கவனிக்கையில் எனக்குப் பயம்

உண்டாகிறது. நீ சொல்லியதை உண்மையென்று நம்பி என் தம்பியாக எண்ணினேன். இனி நீ என்னிடம் இருக்க வேண்டாம். போய்விடு" என்று சொன்னார். உடனே சூன்யவாதி கடுஞ்சினங் கொண்டு, "ஓ பட்டாரகரே! நீர் என்னைப் பகைக்க வேண்டாம். நான் எண்ணி வந்த காரியம் முடியும் வரை உம்முடன் இருந்து விட்டுப் போய் விடுகிறேன்; நீர் என்னை வீணாகப் பழித்தால் உமக்கு அநேகம் துன்பங்கள் உண்டாகும். இப்பொழுது சமயம் நேரவில்லை. இன்னும் சில தினங்கள் வரையில் என்னை உமதருகில் வைத்து இருப்பீர். இல்லாவிடில் பெரும் துன்பமே விளையும்" என்று பயமுறுத்தினான். அதைக் கண்ட பட்டர் அவனைப் பலவாறு இகழ்ந்து பேசி அப்பொழுதே துரத்தி விட்டார்.

அதனால் கோபமடைந்த சூன்யவாதி தன்னிருப்பிடத்தை யடைந்து சில யந்திரங்களை யெழுதி பட்டரின் வயிறு வீங்கும்படி கோரமான சில மந்திரங்களை உச்சரிக்கலானான். அன்றிரவு படுக்கையில் தூங்கிக்கொண்டிருந்த பட்டரின் வயிறு குண்டம் போல் வீங்கிற்று. பெருமூச்சு அதிகமாய் உண்டாயிற்று. எழுந்து நடக்க முடியவில்லை. அகாரணமாக இவ்விதமான துன்பத்தையடைந்த பட்டர் அன்று தியாகப்பிரபுவைத் தான் பூஜைசெய்யவேண்டிய தினமாகையால் மெல்ல எழுந்து கமலாலயத்தில் ஸ்நாநம்செய்து ஜபதபங்களைமுடித்துக்கொண்டு ஒரு கோலை யூன்றி நடந்து துவஜஸ்தம்பத்தின் அருகில் வந்து பணிந்து "தயாநிதியே! நான் என்ன செய்வேன்? இன்று உமது பாதகமலத்தில் பூஜை செய்ய நான் புண்ணியம் செய்யவில்லை. நான் என்ன பாபம் செய்தேனோ? என்னிடம் உறவு கொண்டாடி என் வீட்டில் வந்திருந்த ஒரு துஷ்டன் செய்த வஞ்சனையோ? ஒன்றும் தெரியவில்லை. என் வயிறு மேன்மேலும் அதிகமாக வீங்கி வருகிறதே. ஈசுவரா! நீயே துணை", என்று பூமியில் விழுந்தார். அப்போது தியாகராஜர் சூன்யவாதியின் மேல் கடுஞ் சினங் கொண்டு அவன் வயிறு

வீங்கும்படி சபித்தார். சூன்ய வாதியின் வயிறு அப்போதே கொஞ்சங்கொஞ்சமாக வீங்க ஆரம்பித்தது. பட்டருடைய வயிற்று வீக்கம் சிறிது சிறிதாக வடிய ஆரம்பித்தது. வயிற்று வீக்கம் குறைந்து சரீர பீடையும் நீங்கவே பட்டர் மிக்க மகிழ்ச்சியுடன் எழுந்திருந்து பூஜையை நிறைவேற்றினர். அதற்குள்ளாக சூன்யவாதியின் வயிறு ஏற்றச்சால் போல வீங்கி விட்டது. அவனுடைய மந்திரங்களும் யந்திரங்களும் ஒரு விதமான பலனையும் அளிக்கவில்லை. மேன்மேலும் பெருமூச்சு அதிகரித்தது. அப்போது சூன்யவாதி மெய்மறந்து "ஐயோ நான் என்ன செய்வேன். குற்றமற்ற பட்டருக்கு நான் சூன்யம் வைக்கவே எனக்கே அது திரும்பி விட்டது. நான் என்ன செய்வேன்? தியாகேசனே துணை" என்று வீதியில் கதறிக்கொண்டே அழுதும் புரண்டும் பிரபுவின் ஆலயத்திற்கு வந்து வேறு கதியில்லையென்று விழுந்தான். பிறகு தியாகேசனுடைய அனுக்கிரகத்தால் அவன் சரீரத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக ஜலம் வடியவே வயிறு வீக்கம் தணிந்து அவன் தன் பழைய நிலைக்கு வந்தான். சூன்யம் முதலிய கெட்ட காரியங்களை அவன் அதுமுதல் விட்டுத் தியாகமூர்த்தியிடம் மிக்க பக்தியுடன் விளங்கினன். பட்டருக்கும் சூன்யவாதிக்கும் நேரிட்ட இம்மாறுபாடுகளைக் கண்ட ஜனங்கள் ஆச்சரியமடைந்து ஈசனைத் தொழுது வந்தார்கள்.

கட்டமும் பிணியுங் களைவானைக்
காலற் சீறிய காலுடையானை
விட்ட வேட்கை வெந்நோய் களைவானை
விரவினல் விடுதற் கரியானை
பட்ட வார்த்தை படா நின்ற வார்த்தை
வாராமே தவிரப் பணிப்பானை
அட்ட மூர்த்தியை மட்டவிழ் சோலை
யாரு ரானை மறக்கலு மாமே.

— சுந்தரர்



## 74. கூந்தலையிரந்து பக்தியை வெளியிட்ட லீலை.

வஸந்த காலம், க்ரீஷ்ம காலம், வர்ஷா காலம், சரத் காலம், ஹேமந்த காலம், சிசிர காலமென்று வகுக்கப்பட்ட ஆறு ருதுக்களிலும் மலரக்கூடிய புஷ்பங்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட புஷ்பபுர மென்னும் நகரம் திருவாரூருக்கு மேற்கில் வெகு ஸமீபத்திலுள்ளது. அந்நகரில் வஸுமித்திரன் என்னும் வைசியனொருவனிருந்தான். அவன் ஆரூர் நாதனிடத்தில் அதிக பக்தி வைத்தவன். அந்தந்த மாதங்களில் புஷ்பிக்கும் மலர்களைக் கொய்து மாலை கட்டிப் பரமேசனுக்குச் சூட்டுவான். அமிர்தத்துக்கு ஒப்பான கனிகளையும் ஈசனுக்கு முதலில் அளிப்பான். கோடை காலத்தில் குளிர்ந்த சந்தனக் கலவையைச் சேர்த்து தியாகராஜாவின் திருமேனி குளிரும்படி சாற்றுவான். இவ்விதம் ஒவ்வொரு சமயத்திலும் ஈசனுக்குத் தன் செல்வத்துக்குத் தகுந்தபடி ஊழியங்களைச் செய்து அளவற்ற ஆனந்தத்தையடைவான். இப்படிப்பட்ட வஸுமித்திரனுக்கு வெகு நாள் வரையில் புத்திரோத்பத்தி யுண்டாகவில்லை. இவ்வித பாக்கியக்குறைவினால் மனம் நொந்து வாடிய அவனது மனைவி ஒரு நாள் நாயகனை வணங்கி நின்று, "ஓ நாத! நமது தியாகராஜன் கருணாரஸத்தினால் நாள்தோறும் செல்வக் கொடிகள் வளருகின்றன. இவைகளால் நமக்குத் துன்பமே படருகிறது. பாலசந்திரன் போலழகிய குழந்தையின் முகத்தைக்காணாத பாபியாகிய நான் பூர்வ ஜன்மங்களில் எவ்வித பாபம் செய்தேனோ; அக்காரணத்தினால் இப்பிறப்பில் எனக்கு 'புத்திரவதி' என்னும் பெயர் ஏற்படவில்லை போலும். இதற்கு எவ்விதமான பரிஹாரப் பிராயச்சித்தம் செய்யலாம்" என்று ஆலோசனை செய்கையில் புத்தியினால் சிறந்த அவ்வஸுமித்திரனும் ஞானத்தினாலும், வயதாலும், ஸத்கர்மானுஷ்டானத்தினாலும் சிறந்தோங்கி விளங்கும் பெரியோர்களை யடைந்து அவர்களின் உபதேசப்படி மேஷ

ராசியில் சூரியன் பிரவேசித்த தினத்தில் ஆயிரம் குடம் பசுவின் பாலினால் ஸ்ரீ தியாகராஜருக்கபிஷேகம் செய்து வைத்தும், கமல நாயகியாருக்கும் குங்கும தானம் செய்தும், பசுமடம் கட்டியும் பரமேசன் பாதாரவிந்தங்களை மனதில் தியானம் செய்து கொண்டிருக்கும் நாளில் கமலநாயகியாரின் கருணை கடாக்ஷத்தினால் அவ்வைச்ய தம்பதிகளுக்கு ஓர் பெண் பிறந்தாள். வளர் பிறைச் சந்திர கலைகளைப் போல் வளர்ந்து வரும் அப்பெண்ணைக் கண்டு மகிழ்ந்த தம்பதிகள் கமலாக்ஷி யென்று பெயரிட்டு அழைக்கலாயினர்.

பரமேச்வரியின் கருணையினுலுதித்தபடியால் அப்பெண்ணிடத்தில் ஒப்பற்ற ஸௌந்தரியமும் நல்ல புத்தியும், லக்ஷணங்களும் இயல்பான ஆபரணம் போல் விளங்கின. வயதுக்குத் தகுந்தபடி பால லீலா ரஸங்களையெல்லாம் அனுபவித்து பாலிய வயதைக் கழித்த கமலாக்ஷி சங்கீதப் பயிற்சியிலும், அபிநயக் கலையிலும், சித்திர வேலையிலும், கதைக் கோர்வையிலும், தோழியரின் நட்பிலும் நல்ல தேர்ச்சியடைந்திருக்கிறுளென்று நகரத்தார் சொல்லக்கேட்ட ராஜ குமாரிகளும் அந்தக் கமலாக்ஷியைத் தமது அரண்மனைக்கு வரவழைத்து அவளது கலா சாதுரியத்தைக்கண்டு மகிழ்ந்து சிறந்த பட்டுகளையும், நவரத்தினங்களையும், குண்டலங்களையும், கேயூரங்களையும் வெகுமதியாக அளித்தார்கள்.

இவ்விதமாய் நற்கீர்த்தி பெற்ற கமலாக்ஷியும் கௌமார வயதைத் தாண்டி யௌவனமாகிய புஷ்ப வனத்தில் சென்றுள். அப்பொழுது அவளுடைய கூந்தல்கள் சமரீ மிருகத்தின் மயிரைப் பழித்தன. முகமானது பூர்ண சந்திரனைப் பரிகாசம் செய்தது. மை அணியப்பெற்று நீண்டு அழகிய கண்கள் நீலோற்பலத்தையும், அதரம் கோவைப் பழத்தையும், கைகள் தாமரை மலரையும் வென்றன. இவ்வித ஸௌந்தரியம் நிறைந்து விளங்கும் கமலாக்ஷிக்கு விவாகம் செய்யக் கூடிய வயது நெருங்கியதைக் கண்ட வஸுமித்திரன் தனது

வைச்ய குலத்துக்குறிய வியாபாரத் தொழிலிலும், ரத்தின ஞானத்திலும் சிறந்தவனுயும் குலம், வயது, ஆசாரம், கல்வி, குணம், சேர்க்கை, வியாதியில்லாமை முதலிய வரலக்ஷணங்களை யெல்லாம் ஸம்பூர்ணமாய் அடைந்து விளங்கும் ஒரு வரனைத் தேடி தனது மாளிகையில் வெகு சிறப்பாக கமலாக்ஷியின் விவாகத்தை நடத்தத் தொடங்கினன். அந்தக் கலியாணத் துக்குப் புஷ்ப புரத்திலுள்ள சித்திர வேலைக்காரர்களின் சாதுரியம் நிறைந்ததாய் ஜோடிக்கப்பட்ட முத்துப் பந்தலின் கீழ் மங்கள வாத்தியங்கள் முழங்கவும், புஷ்ப வாசனை கமழவும், 'கந்தர்வ கீதமோ?' என்று சந்தேகப்படக்கூடிய கானங்களை மாதர்கள் பாடவும், கணிகைகள் ஆடவும் இரண்டு பக்கத்தாரின் பந்து ஜனங்கள் வந்து நிறையவும், வெகு சந்தோஷத்துடனும், கோலாகலத்துடனும் கூடியதாய் கண்டோர் மனம் களிக்கும்படி விளங்கும அந்தச் சமயத் தில் விவாகத்துக்காகக் குறிப்பிட்ட முகூர்த்த வேளையும் லக்கினமும் வந்தது. அத்தருணத்தில் மங்களஸ்நானம் செய்து வைத்து நல்லாடையுடுத்தி அலங்கரிக்கப்பட்ட கமலாக்ஷியும் விவாக மேடையின் எதிரில் வந்து நின்ருள். குல குருவும் அந்தணரும் பாலிகாவாஹநம் செய்து கங்கணம் கட்டி அப் பெண்ணுக்கு விவாகம் செய்து வைக்க எதிர்பார்த்திருக் கையில் அந்த வஸுமித்திரனுடைய பக்தியைப் பரிசோதிக்க வேணுமென்று ஸ்ரீ தியாகராஜர் ஓர் ஸந்நியாசியின் உருவ மெடுத்துக் கொண்டு அக்கலியாணப் பந்தலின் அருகே வந்தார். கையிலேந்திய கமண்டலத்தையும் சரீரத்தில் விளங், கும் காஷாயத்தையும், முகத்தில் விளங்கும் ஒளியையும் கண்டு வியப்படைந்து அவ்விடத்திலிருந்தவரெல்லோரும் இவர் ஒரு புண்ய மூர்த்தியாயிருக்கிருரென்று எழுந்திருந்து கைகூப்பி மரியாதை செய்தார்கள். இவ்விதமந்தச் சந்நியாசி வந்ததைக் கண்ணுற்ற வஸுமித்திர வைச்யனும் எதிர் நோக்கிச் சென்று அவரை அழைத்து ஆஸனமளித்து சுத்த ஜலத்தினல் அவர் பாதங்களைக் கழுவி அந்த ஜலத் தைத்தன் சிரஸில் ப்ரோக்ஷணை செய்து கொண்டு தம்பதி

களின் சிரஸிலும் தெளிக்கச் செய்தான். பிறகு அந்தப் பரிவ்ராஜக ஸந்நியாசியும் அவனுக்கும் அந்த நூதன தம்பதிகளுக்கும் ஆசீர்வாதம் செய்து, "ஓ வஸுமித்திர! இப்பொழுது இம்மாளிகையில் உமது புத்திரிக்கு விவாகம் நடந்து வருவதாக அறிகிறேன். இக்குமாரத்திக்குச் சிறந்த நன்மையுண்டாக வேண்டுமென்றால் என் வார்த்தையை நம்பி ஒரு காரியம் செய்ய வேண்டும். அதைப் பற்றிச் சற்றும் விசாரிக்கலாகாது. மன மகிழ்ச்சியுடன் செய்ய வேண்டும். டம்பத்துக்காகவும் செய்யலாகாது. இவ்வித ஏற்பாட்டுக்கு உமக்குச் சம்மதமா?" என்று கேட்டார். சிறந்த முனிவர் சொல்லும் அம்மொழியைக் கேட்டு வஸுமித்திரன் அவர் பாதத்தில் நமஸ்கரித்து, "ஓ ஸ்வாமி! குலகுருவே! பரம்பொருளின் அம்சமே! தாங்கள் எக்காரியத்திலென்னை ஏவிய போதிலும் நான் மன மகிழ்ச்சியுடன் செய்து முடிப்பேன். அதைப் பற்றிச் சந்தேகமில்லை. அக்காரியத்தை இப்பொழுதே சொல்வீர்" என்று கைகூப்பிக் கொண்டு நின்றான். அந்த முனிவரும் 'வஸுமித்திர! உமது பெண்ணாகிய இந்தக்கமலாக்ஷியின் கேச பாசத்தை யிப்பொழுதே அறுத்து என்னிடமளிப்பீராகில் சிறந்த மங்களமுண்டாகும்" என்றார். அதைக் கேட்கும்பொழுது அச்சபையிலிருந்தவர்களில் சிலர் கடுஞ்சினங்கொண்டு, "இந்த அநியாயத்தை யாரிடம் உரைப்போம். விவாக அலங்காரத்துடன் நிற்கும் இப்பெண்ணின் தலை மயிரை அறுக்க விரும்பிய இவர் சந்நியாசியாக மாட்டார்" என்றும், சிலர் "இப்பாபியை வதைத்தாலும் பாபம் நேரிடாது" என்றும், சிலர் "இவ்வஸுமித்திரனின் பகைவருள் ஒருவன் இந்தச் சந்நியாசி வேஷம் கொண்டு துரோகம் செய்கிறான்" என்றும், சிலர் "கூந்தலை இழந்த பெண்ணுக்கு எவ்வித நன்மை செய்யப்போகிறா"ரென்றும், சிலர் "ஈசனே கதி. இவ்வித நன்மையும் வேண்டாம். கூந்தலையும் கொடுக்க முடியாதென்று வஸுமித்திரன் கூறுவதே நலமென்றும், மற்றும் சிலர் "இவ்வழகிய பெண்ணின் கேசத்தை அழிப்பதைக் காட்டிலும் மாய்ப்பதே நல"மென்றும் உரைத்தார்கள்.

இவ்விதமாய் சபையோரும் பந்துக்களும் சொல்லிக் கொண்டிருக்கையில் அந்த வஸுமித்திரன் தியாகேசனுடைய பாதாரவிந்தங்களை மனதில் தியானித்துக்கொண்டு தனியாய் வரனைக் கூப்பிட்டு, "நீ மனக்கலக்கத்தை யடையாதே; என் புத்திரியை உனக்கே தானம் பண்ணிவிட்டேன். நீ இவளை விவாகம் செய்து கொண்டு வெகு நாள் வாழக் கடவாய்; இந்த மங்கள காரியம் முடிவதற்குள் இந்த மஹா ஸன்னியாசி என் பெண்ணின் கேசத்தை யாசித்து விட்டார். நான் அதைக் கொடுத்தே இவரது மனதைக் குளிரச் செய்வேன். இது உனக்குச் சம்மதமா?" என்று கேட்க அதற்கு அவனும் சம்மதித்தவுடனே அவ்வைசியன் அம்பட்டனுக்குத் தைரிய மொழிகளைக் கூறி தன் பெண்ணின் கேசபாசத்தை அவன் கத்தியினுல் வேறு பிரிக்கச் செய்து அதைச் சுருட்டி ஒரு பாத்திரத்தில் வைத்துக் கொண்டு வந்து பிக்ஷுவின் எதிரில் வணங்கி, "உமது விருப்பம் போல் என் பெண்ணின் கூந்தலை இதோ அளித்து விட்டேன். பெற்றுக் கொள்வீரென்"றுரைக்கையில் அந்த மாய பிக்ஷுவும் திடீரென்று மறைந்து விட்டார்.

"ஓ வஸுமித்திர! தியாகராஜன் இவ்விதமாய்த் தோன்றி உனது பக்தியையும் மனநிலைமையையும் பரிசோதித்தாரே தவிர வேறில்லை. உன்னைப் போல் பக்தியில் சிறந்தவர்கள் இவ்வுலகில் சிலரே. இது முதல் உன் குடும்பத்துக்கு அநேக மங்களமுண்டாகும். உன் புத்திரிக்கும் முன் போல் கூந்தலுண்டாகிவிடு"மென்று ஆகாய வாணியுரைத்ததைக் கேட்ட சகல ஜனங்களும் ஸந்தோஷமடைந்து வஸுமித்திரனைத் துதித்தார்கள்.



## 75. பஞ்சத்தை நீக்கிப் பூமியைக் காத்த லீலை.

செல்வம், கல்வி, விநயம் முதலிய நற்குணங்களுக்கிருப்பிடமாயும், பாபகாரியங்களை நினைக்காதவனுயும் தன் குலாசாரங்களைக் கை விடாதவனுயும் காமம் கோபம் முதலான பகைக்குணங்களை வேருடன் களைந்தவனுயுமுள்ள வீரஸேந மகாராஜன் சந்திரிகா புரியைப் பரிபாலனம் செய்து வந்தான். அம்மன்னவன் தினந்தோறும் வேதம் பயில்வதைக் கைவிடுவதில்லை. வேதமறிந்த அந்தணக்கூட்டங்களுக்கும் யாசகர்களுக்கும் தானம் செய்த பிறகே உண்ணச் செல்வான். அரண்மனையில் உள்ள தாஸிகள் அந்தந்தச் சமயங்களில் தன் எதிரில் நின்று கேட்போர் மனதைக் கவரக்கூடிய கானங்களைப் பாடினுலும், அழகிய நர்த்தனம் செய்தாலும் அவனது மனநிலைமை சற்றேனும் சலிக்கிறதில்லை. அவன் மனதிலிருக்கும் கருத்தை யாரும் எளிதில் அறிய முடியாது. ஐம்பொறிகளின் வேகத்தை யடக்கிக் கொண்டு தர்மவழியில் நின்று அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்குவித புருஷார்த்தங்களையும் தக்க சமயத்தில் அடைந்துகொண்டு பூமண்டலத்தைப் பரிபாலித்து வந்தான். மக்கள் அவ்வரசனைத் தமது தந்தையாயும், குருவாயும், துணைவனுயும், உறவினராயும், தெய்வமாயும் நினைத்துவந்தார்கள். அம்மன்னவன் ஸிம்மாசனம் ஏறி அரசு புரிகையில் பொய், சோரம், வியபிசாரம், பெரியோரைப் பழித்தல் முதலான கெட்ட காரியங்கள் நடக்கவேயில்லை. அவனுடைய தேசத்தில் ஸத்புருஷர்களுக்கு விரோதமான காரியங்களை ஒருவனும் செய்யவில்லை. அவனுடைய ஜனங்கள் எல்லோரும் மிருதுவாய்ப் பேசுகிறவர்கள். தானசீலர்கள். கல்வி நிறைந்தவர்கள். செல்வத்துக்கும் சுகத்துக்கும் இருப்பிடமானவர்கள். பிறர் பொருளைக் கவராதவர்கள். பரோபகாரத்தையே விரதமாகக் கைக்கொண்டவர்கள், பிறர் மனைவியைக்கனவிலும் நினைக்கமாட்டார்கள். கணவனுக்கும் மனைவிக்

11

கும் குடும்பத்தில் ஏதாவது கலகம் உண்டானால், அக் கலகங்களைத்தீர்ப்பார்களே யொழிய வளரச்செய்யமாட்டார்கள். இவ்வண்ணமே ஒரு தாயின் வயிற்றில் உதித்த சகோதரர்களுக் கும், இரண்டு சிநேகிதர்களுக்கும், குரு சிஷ்யர்களுக்கும் ஏதா வது பகை நேரிட்டாலும் அவர்களுடைய நியாயத்தை விசா ரித்துத் தாங்களே அதற்குத் தக்கவாறு பரிகாரம் செய்து விடுவார்கள். தேவர்களையும், பித்ருக்களையும், ரிஷிகளையும், அதிதிகளையும் காலம் தவறாமல் பூஜிப்பதில் விருப்பமுடைய வர்கள்.

இப்படிப்பட்ட சற்குணங்களுக்கு இருப்பிடமாகிய ஜனங் கள் நிறைந்து விளங்கும் தேசத்தை வீரசேன மகாராஜன் தனது வெண்குடை நிழலில் பாதுகாத்து வருகையில் ஒரு வருஷத்தில் மேகங்கள் மழைத்தாரைகளைச் சொரியவில்லை. அதனால் தடாகங்களிலும் குளங்களிலும் உள்ள தண்ணீர் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து வந்தது. மறு வருஷத் திலும் வருணன் மழைத்தாரைகளைப் பொழியாமலிருந்தபடி யால் நதிகளிலும் ஜலம் வற்றிப்போயிற்று. பயிர்களும், செடி களும் ஓஷதிக் கொடிகளும் உலர்ந்து கருகிவிட்டன. ஜீவராசி களுக்கு உணவுப்பொருள்கள் பலிக்கவேயில்லை. பத்துத் திசை களும் பிரளய காலாக்கினிச்சுவாலையினால் எரிக்கப்படுகிறது போல் தோன்றின. பசுக்களும், பறவைகளும் தாகத்தினால் வாட்டமடைந்தன. உத்தியான வனத்திலுள்ள புஷ்பச் செடி களும் வளர்ச்சியை யடையவில்லை. வேதகோஷத்துடன் விடியற்காலத்தில் அந்தணர்கள் நீராடுவதற்காக ஜலத்தைக் காணாமல் வெகு கஷ்டத்தை யடைந்தார்கள். இவ்விதமாக தேசத்தில் பன்னிரண்டு வருடகாலம் வரையில் வருணன் மழைபொழியாதிருப்பதைக் கண்ட ஜனங்கள் எல்லோரும் துக்கக்கடலில் ஆழ்ந்தார்கள். சிலர் சமீப தேசத்தை நாடிச் சென்று ஜீவனம் செய்யலாயினர். மற்றும் சிலர் இக்கொடிய காலத்தில் எங்கு போய் பிழைப்போமென்று கதறினார்கள். மற்றும் சிலர் உணவு இல்லாமையால் உயிரைத்துறந்தனர்.

சிலர் நமது தேசத்தில் இவ்விதமான பஞ்சகாலம் நேரிடுவதற்கு அரசனே காரணமாவானென்று ராசனை சிந்திக்கத் தொடங்கினார்கள். மற்றும் சிலர் நமது தேசத்திலுள்ள பாபிகளைத் துரத்தி விட்டால் நன்மை நேரிடுமென்று புலம்பலாயினர்.

இவ்வாறு நிலைமையைக்கண்ட வீரஸேன மகாராசன் பெருந்துயரத்துடனே அமைச்சரை வரவழைத்து இக்கொடியபஞ்சம் நீங்குவதற்கு உபாயமுண்டோவென்றுலோசித்தான். அவர்களுடைய ஆலோசனையால் தினந்தோறும் விசேஷ தானங்களைச் செய்ய ஆரம்பித்தான். ஆயிரக்கணக்கான பிராம்மணர்களுக்குப் போஜனமளித்தும் தேவாலயங்களில் விளங்கும் திரிமூர்த்திகளுக்குச் சிறந்ததோரபிஷேக நைவேத்யங்களைச் செய்து வைத்தும், மற்றுமுள்ள ஜனங்களுக்கு அன்னமளித்தும் பசு, மான் முதலிய ஜீவராசிகளுக்கு ஆகாரம் கொடுத்தும், தன்னால் கூடிய வரையில் ஜீவராசிகளைக் காப்பாற்றிக்கொண்டும் பசுபதியின் பாதகமலத்தைப் பணிந்து கொண்டிருந்தான். அப்பொழுது அவ்வரசன் செய்யும் தானத்தைக் கேட்டு ஒரு சோதிடன் ராஜஸபையை யடைந்தான். அர்க்கியம், பாத்தியம் முதலிய உபசாரங்களால் முறைப்படி பூசிக்கப்பட்ட அந்தச் சோதிடன் ஆசீர்வாதம் செய்த பிறகு ஓ மகாராஜனே! நீர் இந்தப் பஞ்சகாலத்தின் கொடுமையைப் பற்றி சற்றும் சிந்திக்கவேண்டாம். நல்ல லக்ஷணம் பொருந்திய குதிரையின் மீதேறிக் கொண்டு நான்கு திசைகளிலும் செல்வீர். எந்தத் திக்கில் உமது குதிரை மெய்மறந்து வேகமாய்ச் செல்லுகிறதோ அந்தத்திசையிலேயே உமக்கு நன்மை நேரிடும். அதனால் இந்தப் பஞ்சமும் நீங்கிவிடும் என்று உரைத்தான். அம்மொழியைக் கேட்ட மன்னவனும் மகிழ்ந்து அவ்வித்துவானுக்கு விசேஷ வெகுமதியை யளித்து விட்டு மறுநாட்காலையில் மஹாகாளேசுவரனை மனதில் தியானித்துக் கொண்டு யக்ஷசத்வம் நிறைந்து விளங்கும் தன் குதிரைமீது ஏறிக்கொண்டு முதலில் வடக்குத் திக்கை நோக்கிச் சென்றான். வெகுதூரம் சென்றபோதிலும் அவ்வரசன் நற்குணத்தைக்

காணவேயில்லை. வெய்யிலாலும், பசிதாகத்தாலும் வாடிய முகத்துடன் மாலைநேரத்தில் தன் நகரத்துக்குத் திரும்பினான். இரண்டாம் நாள் காலையிலும் இவ்வண்ணமே குதிரையுடன் கிழக்குத் திசையையடைந்தான். அவ்விடத்திலும் நற்குறியைக் காணவில்லை. மனித சஞ்சாரத்தையும் பார்க்கவில்லை. பறவைகளின் கூவுதலையும் கேட்கவில்லை. இம்மாதிரியாய் வனமெங்கும் நிச்சப்தமாய் இருப்பதைக் கண்டு இதுவுமொரு அபசகுனம் என்றே எண்ணிக் கொண்டு சூரியன் மேற்குக் கடலில் மூழ்கியவுடன் தனதிருப்பிடம் வந்து சேர்ந்தான். மூன்றாம் நாட் காலையிலும் கதிரவன் உதய பர்வதத்தில் விளங்கிய பொழுது அந்தச் சந்தியா காலத்துக்குரிய கர்மங்களை முடித்துவிட்டு கைலாசசுவாமியை மனதில் தியானித்துக் கொண்டு குதிரையுடன் தெற்குத் திசையை நோக்கிச் சென்றான். தனது வேகத்தினால் கருடனை வென்ற குதிரையானது அன்றைய தினம் திடீரென்று எழும்பி எழும்பி வெகு வேகமாய் ஓடுகையில் கடிவாளத்தைக் கடினமாய் இழுத்துப் பிடித்த போதிலும், அதன் வேகத்தை அவ்வரசனால் அடக்கமுடியவில்லை. தேவப்புரவிக்குச் சமமான அக்குதிரை அரை யாமத்துக்குள் அநேக நதிகளையும், வனங்களையும், மலைச் சாரல்களையும் கடந்து செல்வதைக் கண்ட மகாராஜன் தனக்கு ஏதோ அபாயம் நேரிடுமென்று நினைத்தான். அத் தருணத்திலேயே அக் குதிரையின் ஹயஹய சத்தத்தையும் குளம்பின் படபடப் பொலியையும் கேட்டு வெகுண்டு எதிர்முகமாய்ப் பாய்ந்து வருகிற ஓர் செந்நாய்க் கூட்டத்தைப்பூபாலன் கண்டான். கண் இமைகளைக்கொட்டி மூடுவதற்குள் அவைகளுள் ஒரு நாய் வேகமாய் ஓடி வந்து அக்குதிரையைச் சூழ்ந்துகொண்டு அதன்மீது ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து தேவமணி தங்குமிடத்திலுள்ள மாமிசத்தைப் பற்களால் பிடுங்க முயன்றது. அதைக் கண்ட வீரஸேனன் அடங்காக் கோபங் கொண்டு தனது கையிலுள்ள அம்பினால் அந்நாயை மாய்த்துக் கொன்றான். நொடிப் பொழுதில் அந்நாய் மடிந்ததாக மற்ற நாய்களின் சேஷ்டை

யினலறிந்துகொண்ட வேடர்கள் கண்களில் நெருப்புப்பொறி கிளம்பும்படி அத்தகைய கோபத்துடன் வில், அம்பு, வாள், கத்தி, வலை முதலிய ஆயுதங்களுடன் அரசனுக்கெதிரில் வந்து நின்றுகொண்டு, ' எங்கள் காட்டில் அனுமதியில்லாமல் நுழைந்ததுடன் குற்றமற்ற எங்கள் வேட்டை நாயைக் கொன்ற உன்னை நாங்கள் இப்பொழுதே யமபட்டினத்துக்கு அனுப்புகிறோம்'' என்று இவ்வாறு பலவித நிஷ்டூரப் பேச்சுகளைச் சொல்லிக்கொண்டும், தோள் தட்டிக்கொண்டும் வில்லுகளை டங்காரம் செய்துகொண்டும் எதிர்த்தார்கள்.

அவர்களுடன் வீரஸேன மகாராஜன் இரண்டு யாம நேரம் வரையில் கடும் போர் புரிந்து சிரமத்தினல் வாட்டமடைய நாவில் நீரூறாமல் கண்கள் சுழன்று மனம் கலங்கி ஏங்கி நிற்கையில் தொண்டர் வினையை நீக்குகிறவராயும், வேதாந்தத்தின் மெய்ப்பொருளாயும், முனிவரின் ஞானக்கண்ணால் காணக்கூடியவராயும் விளங்கும் ஸ்ரீ தியாகராஜப்பிரபுவானவர் அத்தருணத்தில் அவ்வரசனைக் காப்பாற்ற வேணுமென்று ஸங்கல்பம் செய்து கொண்டு ஒரு கழுகின் உருவமாய்த்தோன்றி அக்குதிரையின் வலது பக்கத்திலுள்ள உபரந்திரபாகத்தை மூக்கினல்குத்தினர். அப்போது அப்புரவி திடீரென்று ஓரேபாய்ச்சலாக ஆகாயத்தில் கிளம்பி தேவப் புரவிபோல் பறந்து தென் திசையைக்குறித்துச் செல்வதைக் கண்ட அவ்வேடரெல்லோரும் புரவியைப்பின் தொடரமுடியாமல் வெள்கியேகினர். அக்குதிரையானது நிமிஷ நேரத்துக்குள் திருவாரூரின் தேவாலயத்துக் கருகில் சென்று நின்றது. ஆகாயத்தையளாவிய கோபுரங்களையும், மண்டபத்தின் சிறப்பையும், கமலாலயத்தின் கரையில் தவம்புரியும் முனிவர்களையும் கண்டு மனக்களிப்பையடைந்த வீரஸேனன் பிரம்மதீர்த்தம், கபிலதீர்த்தம் முதலிய புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்து கோதானம், பூதானம், ஹிரண்ய தானம் முதலிய தானங்களைச் செய்து பிறகு தியாகராஜனுடைய திருக்கோயிலின் முன் சென்று ஆயிரந்தடவை

பணிந்து துதித்தான். அதற்கு மறுநாள் ஜ்யேஷ்டமாஸ பௌர்ணமி தினமாயிருந்ததைக் கண்டு அந்த தியாகப்பிரபுவுக்கு ஆகமங்களின் முறை வழுவாமல் ஆயிரம் குடம் பாலாலும், ஆயிரம் குடம் காவிரி நீராலும் சுகந்த திரவியங்களாலும், நூற்றுக்கணக்கான ஸ்நபன கலசங்களாலும், ஜ்யேஷ்டாபிஷேகம் செய்துவைத்து, "எனது தேசத்தைக் காப்பாற்ற அருள்புரிவா"யென்று அஞ்சலி செய்துகொண்டு நிற்கையில் ஆகாயத்தில் ஓர் அசரீரிவாக்கு உண்டாகி, "ஓ ஓ வீரஸேனமகாராஜ! நீ நமது தொண்டரில் ஒருவன். இனி உமக்கு எவ்விதத் துன்பமும் உண்டாகாது. உமது தேசத்தில் இப்பொழுது சிறந்த மழை பொழிகின்றது. துவாதச வருடக்ஷாமம் நீங்கிவிட்டது. இனி உமக்கும் உமது நாட்டோருக்கும் நன்மையுண்டாகு"மென்று மொழிந்த மொழியைக்கேட்ட அவ்வரசன் மகிழ்ந்து ஸ்ரீ தியாகராஜனுக்கு விலையற்ற பீதாம்பரங்களையும், ஆபரணங்களையும் அளித்து, உற்சவங்களையும் செய்து வைத்து சில நாள் அவ்விடத்தில் தங்கியிருந்து பிறகு தன் தேசத்துக்குத் திரும்பினான். ஸ்ரீ தியாகராஜனுடைய கருணையினால் முன்னிருந்ததைக் காட்டிலும் பதின்மடங்கு சிறப்புற்றதாய் விளங்கும் தன் தேசத்தில் வாழும் ஜனங்களுக்குப் பசுபதியின் கருணையை எடுத்துரைத்து அவர்களுக்கும் சிவபக்தியைப் புகட்டி நெடுநாள் வாழ்ந்திருந்தான்.



## 76. ஸத்தியவாதி வைச்யனுக்குச் சாக்ஷியுரைத்த லீலை.

ஜயபாலனென்னும் சோழநாட்டரசன் மனுநீதி வழுவாமல் செங்கோல் நடாத்தி வருகையில், "தன் தேசத்தில் எவ்வித காரியத்திலும் எவ்விடத்திலும் பொய்யுரைக்காமல் ஸத்தியத்தையே கைக்கொண்ட புண்யசீலன் யாரிருக்கிறான்; அவனது பாதங்களை யான் சென்னியால் வணங்க விரும்புகிறேன்" என்று மந்திரிகளிடம் மொழிந்தான். அம்மந்திரிமார்களும் அக்கட்டளையை மாலையைப் போல் தலைமேற்கொண்டு மாறுவேடம் பூண்டு, சில வேஷக்காரர்களையும் உதவியாகச் சேர்த்துக்கொண்டு அந்நாட்டில், "ஸத்தியவாதி யார்?" என்று விசாரிக்கத்தொடங்கினர். ஆறுமாத காலம் வரையில் ஒவ்வொரு ஊர்களிலும் நகரத்திலும் புறத்திலும் அநேக தந்திரங்களினாலும், யுக்திகளினாலும், ஸத்யவாதியைத் தேடிப்பிடிக்க முயன்றார்கள். அவ்விதம் தேடிவருகையில் சிலர் "தமது ஏழாவது வயதில் பால்யத் தன்மையினால் சில பொய்யுரைத்ததுண்டெ"ன்று ஒத்துக் கொண்டார்கள். சிலர், "தங்கள் குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக ஒரு நாள் ஒரே பொய் உரைத்திருக்கிறோம்" என்றும், சிலர், "பிறருக்குத் துன்பம் விளையாதபடி சில பொய் உரைத்திருக்கிறோம்" என்றும், சிலர், "நற்குண வேதியரைக் காப்பாற்றும் பொருட்டு மொழிந்த பொய் பொய்யாகுமா" என்றும், மற்றுசிலர், விவாகத்தை நிறைவேற்றி வைப்பதற்காகச் சொன்ன பொய்ப் பேச்சுக்களுக்கு ஒரு சாஸ்திரத்திலும் பிராயச்சித்தம் கூறப்படவில்லையே" என்றும், சிலர், "மந்திரிகள் சொல்லும் இலக்கணங்களைப்பெற்றும் அரிச்சந்திரனைப் போல் ஸத்யசீலனுமுள்ள புண்ணிய புருஷன் இவ்வுலகில் இல்லை" என்றும், மற்றும் சிலர், "கனவிலும் பொய்யுரைக்காத பெரியோர்கள் வானுலகு எய்தினரே" என்றும், இவ்வண்ணம் தத்தமக்குத் தோன்றியவாறு அமைச்சருக்கு அறிவித்தார்கள்.

அம்மொழிகளைக் கேட்ட மந்திரிகள் ஹேமந்த காலத் தாமரை மலர்போல் வாடிய முகத்துடன் நரபதியிடம் திரும்பினார்கள். அவ்வரசனும் நாட்டில் நடந்த விஷயத்தைக் கேட்டு மிகவும் வருத்தத்துடன், "சத்தியவாதி ஒருவனுமில்லாத நமது ராஜ்யத்தினால் நமக்கு இனி எவ்வித மேன்மை ஏற்படப்போகிறது? நாம் முறைப்படி அரசு செலுத்தாமையினாலேயே இவ்விதம் நேரிட்டது. இனி நாம் ஸிம்மாஸனத்திலிருந்து இறங்குவதே நலம் எனத்தோன்றுகிறது" என்று இவ்விதத் துயரத்தினால் மந்திரிகளிடத்தில் ராஜ்ய காரியத்தை ஒப்புவித்து விட்டுச் சோக சாகரத்தில் மூழ்கினவன்போல் ஆயினான். அவ்வரசனுக்கு அபரபக்ஷ சந்திரன்போல் முகவொளி குறைந்தது. சரீரம் இளைத்து விட்டது. சமயங்களுக்குத் தகுந்த ஆகாரமும் நித்திரையும் இல்லாதபடியினால் யோக தசையிலிருப்பவன் போல் விளங்கினான். தினந்தோறும் க்ஷீண தசையையடையும் பார்த்திவனை நோக்கி மந்திரி வணங்கிக்கூறியதாவது:— 'மஹாராஜ பூபால! நீங்கள் வன் அகாரணமாய் துயரப்படுகிறீர்கள்? உமது ராஜ்யத்தில் நீங்கள் விரும்பும் ஸத்தியசீலன் ஒருவனாகிலும் இருப்பானென்றே எனக்குத் தோன்றுகிறது. அப்புண்ணிய புருஷனை நமது தூதரும் வேவுகாரரும் கண்டறியாமல் திரும்பியது யாருடைய குற்றம்? உமது ராஜ்யத்தில் பிராமணர், க்ஷத்திரியர், வைச்யர், சூத்திரர் என்னும் நான்கு வர்ணத்தாரும் பிரம்மசாரி, கிருகஸ்தன், வானப்ரஸ்தன், ஸந்நியாசி என்னும் நான்கு ஆச்ரமத்தில் அமர்ந்தவர்களும் தமது குலாசார தர்மங்களை மீறி நடக்கவே இல்லை. உமது ராஜ்யத்தில் அந்தந்த ருதுக்களுக்குத் தகுந்தபடி இந்திரன் வர்ஷிக்கிறான். மரங்களும் செடிகளும் கொடிகளும் ஓஷதிகளும் தங்கள் தங்கள் காலத்தை மீறாமல் மலர்ந்து அளவற்ற பலனைக்கொடுத்து வருகின்றன. வேதியரின் வேத ஒலியும், திருவிழாவின் ஒலியும் நமது காதுகளில் விழுந்து நமது அந்தராத்மாவைப் பரிசுத்தி செய்து வருகிறது. உமது ராஜ்யத்தில் தானசீலர்களும், தார்மி

கரும் நிறைந்து இருக்கிறார்கள். உமது ராஜ்யத்தில் அகால மரணம், அஞ்ஞானம், பகை, குருத்துரோகம், வறுமை, கோபம், காமம் முதலிய துர்க்குணமுடையவன் ஒருவனும் இதுவரையில் காணப்படவே இல்லை. இவ்விதமாய் சிறப் படைந்த உமது ராஜ்யத்தில் ஸத்யவாதி ஒருவனாகிலும் இருப்பான் என்பதில் ஸந்தேகமில்லை. அவ்வித புண்ணிய சீலனும் வெகு சீக்கிரத்தில் உமது கண்களுக்குத் தென்படு வான். ஆகையால் நீங்கள் கொஞ்சமேனும் இனி கவலை கொள்ளலாகாது. முன் போல் நீங்களே ஸிம்மாஸனத்தில் வீற்றிருந்து தர்ம காரியங்களை நடத்த வேணும். இப்படி உமது சரீரத்தை இகழ்ச்சி செய்யலாகாது. க்ஷத்திரியன் சரீரம் குன்றினால் பிரஜைகளின் நீதியும் குறைந்து விடும் என்னும் ராஜதர்மத்தை நீங்கள் அறியவில்லையா? ஆகை யினால் இப்பொழுது நீங்கள் மனதுக்கும் சரீரத்துக்கும் புஷ்டியை உண்டுபண்ண வேண்டும். வஸந்தகால மஹோத் ஸவத்தைச் செய்வதினாலும், வேட்டையாடி வருதலாலும் உமது சரீரத்துக்குப் பூர்வ ஸ்திதி ஏற்படக்கூடும்" என்று பலவிதமாய் நீதிகளைக் கூறித் தேறுதல் செய்தான். அந்த ஜயபால மகாராஜனும் அந்த மந்திரியை மார்புடன் அணைத்துத்தழுவி அவன்கூறிய நீதி வாக்கியங்களைப்பற்றிப் புகழ்ந்து கொண்டாடினான். மறுநாட் காலையில் ஜயபாலன் குதிரையின் மேலேறிக் கொண்டு வேட்டைக்குப் புறப்பட் டான். வில், அம்பு, கத்தி, சூலம், வலை, கச்சை முதலிய வேட்டைக்குத் தக்கவைகளை கையில் தரித்துக் கொண்ட பல வீரர்களும் அரசனுடன் சென்றார்கள். வனத்தையடைந்த அவர்களில் சில வீரர் புதர்களில் மறைந்து இருந்து அழ கிய கீதங்களைப்பாடி மான்களைப் பிடித்தார்கள். சில வீரர் வலை வீசி வஞ்சனையினால் மான்களை மாய்த்தார்கள். சில வீரர் கரடி, புலி முதலிய துஷ்டமிருகங்களைப் பாணங்களி னால் அடித்துக் கொன்றார்கள். சில வீரர் செந்நாய்களைத் துரத்தி முயல்களைப் பிடித்துக் கொண்டார்கள். சிலவிடங் களில் மறைந்து சென்றும், சிலவிடங்களில் முட்செடிகளை

அறுத்து வழிசெய்துகொண்டும் மேடுபள்ளங்களில் நுழைந்தும் பலவித தந்திரங்களினால் அக்காட்டிலுள்ள துஷ்டப் பிராணிகளை வதம் செய்து அம்மன்னவன் திரும்புகையில் அவனது முகத்தில் முத்துக்கள்போன்ற வேர்வைத்துளிகள் சொரிந்தன. நாவில் ஜலம் சுரக்கவில்லை. கொடுமையான வெய்யிலாலும், வேட்டையின் சிரமத்தினாலும், அவனுடைய உறுதியுள்ள சரீரமும் தளர்ச்சி அடைந்தது. அதைக் கண்ட வீரர்கள் அவ்வனத்தில் எட்டுத்திக்குகளிலும் ஓடிப் பார்த்து ஓர் அழகிய தாமரைப்பொய்கையை அரசனுக்குக் காண்பித்தார்கள். அந்தத் தாமரைத் தடாகத்தின் நிர்மல ஜலத்தைக் குடிக்கவே தாகசாந்தியடைந்த அரசன் அப் பொய்கையின் கரையிலுள்ள ஓர் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு சற்றுநேரம் சிரமத்தை ஆற்றிக்கொண்டிருந்தான்.

அம்மரத்துக்கெதிரில் பாழடைந்து இருக்கும் ஓர் சிவாலயத்தைக்கண்ட ஜயபாலன் அதற்குள் பிரவேசித்து அங்குள்ளவைகளை உற்றுப் பார்த்துக் கொண்டு பிரதக்ஷிணமாய் வருகையில் அவ்வாலயத்தின் ஓர் மூலையில் இருவர் ரகசியமாய் பேசிக்கொண்டு இருப்பதைக் கண்டு, "நீங்கள் யார்? ஏன் இவ்விடத்தில் தனித்துப் பேசுகிறீர்கள்?" என்று கேட்டான். அரசனுடன் பின் சென்ற சில வீரர் அவ்விருவர்களைத் திருடர்கள் என்றே சந்தேகித்தார்கள். ஏகாந்தமாயுள்ள அவ்விடத்தில் திடீரென்று தோற்றிய அவ்வரசனையும் பரிஜனங்களையும் கண்டு நடுக்கமுற்ற அவ்விருவரில் ஒருவன் கைகூப்பிக் கொண்டு கூறியதாவது:– "கேளீர் மன்னனே! நான் புண்ணிய விரதம் என்னும் திருவாரூரில் விளங்கும் தேவகன் என்னும் வைச்ய திலகருக்குப் புத்திரன். இளமைப்பிராயமுதல் நான் சொல்லும் உண்மைகளைக் கேட்டிருந்தபெரியோர்கள் என்னை 'ஸத்தியவாதி' என்று அழைக்கத் தொடங்கினார்கள். என் ஜாதிக்குரிய வியாபாரத் தொழிலில் எனக்கு விசேஷ விசுவாசம் உண்டாகவில்லை. தினந்தோறும் ஆரூர்ச்செல்வனையே என் மனம் நினைக்கும். என் கைகள்

அவனையே பணிந்து அவனுக்கு அஞ்சலி செய்யும். கண்கள் இரண்டும் அவன் வடிவழகையே உற்று நோக்கும். ஈசனையன்றி மற்றவனை என் வாய் உரையாது. சூலபாணியின் கதைகளே என் செவிக்கு அமுதாகும். இப்படி நான் சிவபக்தியையே ஆபரணமாய் அணிந்த நாளில் என் தந்தையின் கட்டளையால் சில வியாபார சரக்குகளைக் கொண்டு வருவதற்காக நான் மற்றொரு நகரத்துக்குச்சென்று திரும்பி வருகையில் மாலைப் பொழுதில் எனது வழி தடுமாறி விட்டது. நான்கு திக்குகளிலும் வெகு தூரம் ஓடிச் சென்றாலும் வழியே புலப்படவில்லை. அன்றிரவு அவ்வனத்திலே அலைந்து திரிந்து கொண்டிருந்தேன். விடியற்காலத்தில் குறவர்களின் குரலைக்கேட்டு அவர்களின் குடிசையை அடைந்து அவர்கள் காட்டிய வழியைப் பற்றிக் கொண்டே செல்லுகையில் என் வழிக்கு நேராக ஓர் ஜனக்கூட்டம் வருவதைக்கண்டேன்.

அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாய் நெருங்கி நெருங்கி வரவே அக்கூட்டத்தில் இருப்பவர் முழங்கும் மங்கள வாத்திய ஓசையும் எனது செவியில் புகுந்தது. நானும் அவர்கள் அருகில் நெருங்கிச் செல்லுகிறபடியால் அக்கூட்டத்தின் நடுவில் சகல ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட அழகிய பல்லக்கில் உட்கார்ந்து கொண்டிருக்கும் ஒரு கலியாணப் பெண்ணையும், அவளுக்கு எதிரில் அவளது கணவனையும் கண்டேன். அப்பொழுது அவ்வாத்திய ஒலியைக் கேட்டு கடுங்கோபம் கொண்ட ஒரு காட்டுப்பன்றி வெகு வேகமாய் ஓடி வருவதைக் கண்ட சிலர் பயந்து நடுங்கி ஓடி விட்டனர். சிலர் அப்பன்றியின் முறுமுறு சத்தத்தைக்கேட்டு மூர்ச்சை அடைந்து கீழே விழுந்தார்கள். அக்காட்டுப்பன்றி சீறிக் கொண்டு ஜனங்கள்மீது பாய்வதற்குமுன்னமே பலர் திக்கு திக்காய் ஓடினார்கள். இவ்விதம் அந்த ஜனக்கூட்டம் சின்னா பின்னமாய்த் திடீரென்று சிதறி விட்டது. அவர்களெல்லோரும் அப்பெண்ணை மாத்திரம் தனிமையாய் விட்டு விட்டு விரைவாய் ஓடிவிட்டனர். அவள் புருஷனும் தனது

உயிரையே காப்பாற்ற நினைத்துச் சமீபத்திலுள்ள ஒரு மரத்தில் ஏறிக்கொண்டான். கலியாணம் செய்துகொண்டு மங்களமாய் தன் இருப்பிடத்துக்குப் போகும் அப்பெண்ணுக்குக் காட்டுப் பன்றியால் நேரிட்ட துன்பத்தை நான் கண்களால் கண்டபொழுது என் மனதில் கருணை உண்டாயிற்று. அத்தருணத்தில் என் கையில் ஓர் ஆயுதமுமில்லை. துணையும் ஒருவரும் இல்லை. ஆகிலும், பாலிய வயதில் சில வேடருடன் சேர்ந்து மிருகங்களின் இயற்கைக்குணங்களையும், அவைகளுடன் நேசம் செய்யும் முறைகளையும், அவைகளை எதிர்க்கும் விதத்தையும், அவைகளை மாய்க்கும் உபாயத்தையும் கற்றிருந்தபடியால் நான் என் அருகில் இருக்கும் ஒரு புதரில் மறைந்து கொண்டு ஒரு விதமாய் பெரிய சத்தமிட்டேன். என்னுடைய அவ்வொலியைக் கேட்டு அப்பன்றி மற்றொரு துஷ்ட பிராணியின் குரல் என்று எண்ணி அப்பெண்மணியை விட்டு விட்டு, அவ்வொலி வந்த வழியாகவே என் சமீபத்துக்கு ஓடி வருகையில் நடுவழியிலிருந்த ஒரு சேற்றுப் பூமியில் இறங்கி வெளிக் கிளம்ப சக்தியற்றதாய் ஓய்ந்து விட்டது. அப்பொழுது, "நம்மைக் காப்பவர் யார் இருக்கிறார்கள்; நாம் ஒருத்தியாய் என் செய்வோம்" என்று நடுநடுங்கி விசனமடைந்திருக்கும் அப்பெண்மணியின் அருகில் சென்று, "நான் இவ்வித தந்திரமாய் அக்காட்டுப் பன்றியை மாய்த்த விஷயத்தை எடுத்துக்கூறி அவளுடைய பயத்தை நீக்கியபொழுது அவள் என்னைப்பார்த்து, "ஓ தீர! இவ்வித அபாய காலத்தில் என்னைத் தனியாக விட்டுத் தன் உயிரையே காப்பாற்ற முயன்ற என் கணவன் கணவனல்ல. இவ்வளவு தைரியமும் புத்தியுமுள்ள நீரே எனக்குக் கணவனாகக்கடவீர்; எனக்கும் என் புருஷனுக்கும் விவாக முறை மாத்திரம் நிறைவேறியதே தவிர நான் அவனுடன் இன்னும் சேரவே இல்லை. ஆகையால், நீர் என்னை இப்பொழுதே கைப்பற்றவேண்டும்" என்று பாதத்தில் விழுந்தாள். நான் அவளைப்பார்த்து, "ஓ பெண்ணரசே! நீ சொல்வது உண்மையாயினும் முதலில் கைப்பற்றிய கணவனை விடலாகாது,

கணவனை விட்டுவிடின் பலநரகங்கள் உண்டாகும்'' என்று தேறுதல் சொல்லியும் அவள் என் போகத்தையே விரும்பியபடியால் அவள் கூறிய சங்கேத ஸ்தலத்திற்கு நான் வருவதாய் ஒப்புக்கொண்டேன். அதற்குள் அக்காட்டில் சிதறிய அனைவரும் ஓடி வந்து அப்பெண்ணைச் சூழ்ந்து கொண்டு ஆறுதல் சொல்லி, தமது இருப்பிடத்துக்கு அழைத்துச் சென்றார்கள். அவளிடத்தில் மோகம் வைத்த நானும் அந்த சங்கேத ஸ்தானத்தில் அவள் வரவை எதிர்பார்த்து இருந்தேன். இந்த வேதியனுடைய உதவியினால் எனக்கும் அவளுக்கும் உண்டான நட்பை இவனுடன் ஏகாந்தத்தில் பேசிக்கொண்டிருந்தேன். நாங்கள் திருடர்கள் அல்ல. வஞ்சகர்களுமல்ல. எனக்குச் சத்தியவாதி என்னும் பெயர் உண்மையாயின் எனக்கு ஸ்ரீ தியாகராஜாவின் பாதங்களில் பக்தியிருப்பது உண்மையாயின் இதோ எதிரில் விளங்கும் இச்சிவலிங்க ஸ்வரூபியை நான் சாக்ஷியாக அழைப்பேன்'' என்று ஸத்யவாதி சொல்லும்பொழுது, ''ஸத்தியவாதி சொல்லியதெல்லாம் ஸத்தியமே'' என்று ஆகாயத்தில் உண்டான அசரீரி வாக்கியத்தைக்கேட்ட ஜயபாலன் அவ்வைச்யசிகாமணியின் ஸத்தியத்தைப் பற்றி புகழ்ந்தான். அவன் மூலமாய்த் தியாகராஜபக்தியை அடைந்த அவ்வரசன் பாழாய்க் கிடந்த அக்காட்டுக்கோயிலுக்கு ஜீர்ணோத்தாரணம் செய்துவைத்துத் திரிபீடிகா க்ஷேத்திரம் என்னும் பெயரையும் இட்டான். அதுமுதல் ஜயபால மகாராஜன் அந்தச் சத்தியவாதியின் மூர்த்தியை தினந்தோறும் முதலில் தரிசித்த பிறகே ராஜகாரியங்களை நடத்தலானான்'' என்று இவவிதமாய்ப் பார்வதி பாகன் தன் தொண்டன் தன்னை சாக்ஷியாகக் கூப்பிட்டழைத்த பொழுது சாக்ஷியமுரைத்த விவரத்தை ஸ்ரீஸூதர் சொல்லக்கேட்ட ரிஷிகள் எல்லோரும் ஈசனுடைய குணத்தைப்புகழ்ந்தார்கள்.



## 77. பொதுத்தெய்வமாய் நின்று பதமளித்த லீலை.

முன்பு ஒரு சமயத்தில் கௌதம மகரிஷியானவர் தீர்த்த யாத்திரை செய்துகொண்டு பூலோகத்தைப் பிரதக்ஷிணம் செய்துவருகையில் க்ஷேத்திரபுரத்தில் விளங்கும் கமலாலய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஜபம்செய்து பகவத் ஸ்வரூபத்தைத் தியான நிலைமையில் கண்டுகொண்டிருந்தார். மேருவின் அடிவாரத்திலும், இமயமலையிலும், கைலாஸ மலையிலும், மற்றுமுள்ள புண்ய க்ஷேத்திரங்களிலும் அநேக வருஷகாலம் தவம் புரிந்து பரமேச்வரனைத் தரிசித்த கௌதம மகரிஷி கமலாலயத்தின் கரையில் வந்து வீற்றிருக்கிறாரென்னும் விஷயத்தை அறிந்துகொண்டு ஸாங்கமாய் வேதங்களை யோதிய ஒரு வேதியன் முதலில் அம்மகரிஷியின் அருகில் வந்து தனக்குத் தத்வோபதேசம் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டான். அதற்கு மறுதினத்தில் அந்நகரத்தை ஆண்டுவந்த மகாராஜனும் தன் புதல்வனிடத்தில் ராஜ்யபாரத்தை ஒப்புவித்துவிட்டு ஈசுவர தத்வத்தை யறிந்துகொள்ள வேண்டுமென்னும் ஆசையினால் அந்தக் கௌதமரது பாதத்தில் பணிந்து தனக்கும் தத்வத்தை யுணர்த்த வேண்டுமென்று உரைத்தான். இப்படியே மூன்றாவது நாளில் மற்றொரு வேதியனும், நான்காவது நாளில் ஒரு வைச்யனும், ஐந்தாவது நாளில் மற்றொரு பிராமணனும், ஆறாவது நாளில் ஒரு சூத்ரனும், கௌதமருடைய ஆச்ரமத்துக்குச் சிஷ்யர்களாக வந்து சேர்ந்தார்கள். இப்படிப்பட்ட ஆறு சிஷ்யர்களும், விடியற்காலத்திலெழுந்திருந்து செய்யவேண்டிய கர்மானுஷ்டானங்களைச் செய்துவிட்டு தமது ஜாதிக்குத் தகுந்தபடி அம்மஹரிஷிக்கு உபசாரம் செய்துவருவார்கள். கௌதமரும் மத்தியான வேளையில் ஸ்நானம்செய்து நியமத்துடன் ஈச்வரனை உபாஸித்து பிக்ஷை அருந்தியபிறகு அந்த ஆறு சிஷ்யர்களையும் அருகில் வைத்துக்கொண்டு, ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தையும்,

தேகத்தின் இயல்பையும் இந்திரியங்களின் தத்துவத்தையும் முதலில் நன்றாய் உபதேசஞ்செய்தார். "அப்பிரதான இந்திரியங்களின் வேகத்தை அடக்கியபிறகு பிரதானமான இந்திரியத்தின் சக்தியினால் ஈசுவரரூபத்தையறிந்து கொள்ளலாம். உலகத்தில் நாம் செய்யும் ஸத்காரியங்கள் எல்லாம் ஈசுவரனை அடையும். நல்ல மார்க்கத்தில் செல்லும் ஸுபுத்தியினால் சாஸ்திர தத்துவங்களை யறிந்துகொண்டு சாதுக்களுடன் சேர்ந்து பிரம்ம ஸ்வரூபத்தை அறிந்துகொள்ளலாம். அதனால் அவர் நமக்கு நன்மையளிப்பார். நாம் செய்யும் பாபகாரியங்கள் ஈசனையடையாது. நம்மையே சேரும். அதற்குத் தகுந்த நரகம் முதலிய துன்பமும் நேரிடும். ஆதலால் நாம் நமது புத்தியைக்கொண்டு பாபகாரியங்களைத் தேடிக்கொள்ளலாகாது. புண்ணிய கர்மங்களையே செய்துவரவேண்டும். எப்பொழுதாவது பிரகிருதி ஸம்பந்தத்தினால் புத்திக்குத் தடுமாற்றம் ஏற்பட்டுத் தவறு செய்துவிட்டால் அதற்குத் தகுந்த பிராயச்சித்தங்களை நாம் செய்துகொள்வோமானால் ஈசுவரன் நம்மைக் கைவிடாமல் காப்பாற்றித் தன் நிலைமையை யளிப்பார். சாஸ்திர முறைப்படி யாகம் செய்தாலும், அவனுக்கு ஈசுவர ஸாக்ஷாத்காரமேற்படும். சிரத்தை முதலிய நற்குணங்களுடன் தானம் செய்தவனுக்கும் ஈசுவர ஸாக்ஷாத்காரமேற்படும். ஆஹிதாக்னியாயிருந்து விரதங்களையும், கர்மங்களையும், பிசகாமல் அனுஷ்டித்து வருகிறவனுக்கும் ஈசுவர தத்துவம் விளங்கும். கடினமான கர்மானுஷ்டானங்களைச் செய்ய சக்தியற்றவர்கள் புஷ்பங்களால் ஈசனை அர்ச்சித்து வரினும் அவனுக்கும் ஈசுவர சாக்ஷாத்காரமுண்டாகும். வேதப்பொருளையே நம்பியவனுக்கும் மனத்தில் தியானம் செய்பவனுக்கும் முக்தி கிடைக்கும்". என்றிவ்வாறு தத்வங்களை அவர்களுக்கு உபதேசித்துவிட்டு கௌதம மஹரிஷி தென்திசையை நோக்கிச்சென்றார்.

மஹரிஷியினிடத்தில் இவ்விதமாய் உபதேசங்களையடைந்த அந்தணரும், க்ஷத்திரியனும், வைசியனும், சூத்ரனும், தம் தம்

ஜாதியை மீறி நடக்காமல் சிலநாள்வரை வர்ணாச்சிரம தர்மங்களைச் செய்துகொண்டு இல்லறத்திலிருந்துவிட்டுப் பிறகு அவர்கள் கௌதம மகரிஷியினிடத்தில் பெற்ற உபதேசத்தை அனுஷ்டிக்க ஆரம்பித்தார்கள்.

முதல் சிஷ்யனாகிய அந்தணன் ஸாங்கவேதாத்தியாயியாயிருந்தபடியால் ஸங்கல்பம் செய்துகொண்டு பரமேச்வரனிடத்தில் தன் ஆத்மாவுக்கு ஐக்கியமுண்டாக வேண்டி ஒரு யாகத்தைச் சாங்கமாய்க் கமலாலயக் கரையில் செய்யத்தொடங்கினான்.

இரண்டாவது சிஷ்யனாகிய மகாராஜன் நானாகோத்திரத்திலுதித்த பிராமணர்களின் நாமதேயங்களைச் சொல்லிக்கொண்டே கோதானம், பூதானம், ஸ்வர்ணதானம், வஸ்திரதானம் முதலிய தானங்களைச் செய்துகொண்டு பரமேச்வர தரிசனம் கிடைக்கும்வரையில் தானம் செய்வதையே முக்கிய விரதமாக கைக்கொண்டான்.

மூன்றாவது சிஷ்யனான மற்றொரு வேதியன் புண்ணிய விரத க்ஷேத்திரமாகிய திருவாரூரின் கிழக்குப்பாகத்தில் ஒரு ஆசிரமமமைத்துக்கொண்டு ஆஜ்யம், ஹவிஸு, இத்மம் முதலான ஹோமத்திரவியங்களினால், ஒவ்வொன்றினாலும் ஆயிரத்தெட்டு ஆஹுதிசெய்து ஸ்வாஹாந்தமாய் முடித்துப் பஞ்சாக்ஷர தேவதா ஹோமமும் செய்துகொண்டு பரமேசன் ப்ரத்தியக்ஷமாகும் வரையில் இவ்வித ஹோமங்களையே விடாது செய்துவருவேனென்று ஸங்கல்பத்துடன் இருந்தான்.

நான்காவது சிஷ்யனாகிய வைச்யன் திருவாரூர் நகரத்தின் தெற்குப் பாகத்தில் ஒரு ஆச்ரமத்தை அமைத்துக்கொண்டு அதன் நடுவில் ஓர் உயர்ந்த மேடையின்மீது ஸ்ரீ தியாகராஜப் பிரதிகிருதியை பிரதிஷ்டைசெய்து காவேரி தீர்த்தத்தினாலும், கமலாலய தீர்த்தத்தினாலும் அபிஷேகம்செய்து பில்வம் முதலான புஷ்பங்களினால் அர்ச்சனைசெய்துகொண்டு பரமேசன்

பிரத்யக்ஷமாகும் வரையில் இவ்விதமாய் ஈச்வர மூர்த்தியை அர்ச்சிப்பேன்" என்று உறுதி செய்துகொண்டிருந்தான்.

ஐந்தாவது சிஷ்யனாகிய மற்றொரு வேதியன் திருவாரூரின் மேற்குத் திசையிலுள்ள ஒரு வில்வமரத்தினடியில் சென்று கிழக்கு முகமாய் நின்று கொண்டு தியாகராஜனுடைய கோபுரத்தைத் தர்சித்து ஒரு தடவை பூமியில் வீழ்ந்து அந்த வில்வமரத்தை நமஸ்கரித்துவிட்டு, "ஈசனே! உம்மையே நம்பினேன். நான் பெரும்பாபி. எனது பாபத்தைப்போக்கி உன்னுடன் ஐக்கியமாக்கிக் கொள்ளவேண்டும். உமது தத்துவத்தையறிந்து கொள்ள எனக்குச் சக்தியில்லை. வேதங்களுமறியாத உமது ஸ்வரூபத்தை யான் அறியமுடியுமா? உமது திருவடிகளையே சரணமாக அடைந்தேன். என்னைக் காப்பாற்றுவது உமது கடமை" என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தான்.

ஆறுவது சிஷ்யனாகிய சூத்ரன் அந்தத் திருவாரூரின் வட திசையிலுள்ள ஒரு ஆலமரத்தின் அடியில் நின்று கொண்டு, "பரமேச! தயாநிதே! நான் ஜாதியில் சூத்ரனாய்ப் பிறந்திருக்கிறேன். அதிலும் ஞானமற்ற மூடன். என்னைக் காப்பாற்றுவது உமது கடமை. உமது பாதத்தையே சரணமெனப் பற்றினேன்" என்று மனதில் ஈசனைத் தியானம் செய்து கொண்டிருந்தான்.

இவ்விதமாய் அந்தச் சிஷ்யர்கள் ஆறு பேரும் ஒவ்வொருவரும் தாம் தாம் செய்யும் கிரியையே தமக்கு நன்மையளிக்குமென்று நினைத்திருக்கையில் நாரதர் அவர்களின் ஆச்ரமங்களுக்கு முறையே வந்தார். ஒவ்வொருவருடைய ஆச்ரமத்துக்கும் அதிதியாய்ச் சென்று சற்று நேரம் அவர்களுடைய யோகக்ஷேமங்களை விசாரித்துவிட்டு, "ஓ கௌதம சிஷ்யா! நீர் செய்யும் நற்செய்கை உமது விருப்பம் போல் பயனை அளிக்கும். யாகம் செய்பவனுக்கும், தானம் செய்பவனுக்கும், ஹோமம் செய்பவனுக்கும், அர்ச்சனை செய்ப

வனுக்கும், சரணம் புகுந்தவனுக்கும், தியானம் செய்வோனுக்கும், இந்தத் தியாகராஜன் ஒரே காலத்தில் ஒவ்வொருவருக்கும் எதிரில் தோன்றிச் சமமான பயனை அளிக்கப் போகிருன். பக்தியினுல் ஹாரம், கிரீடம் இவைகளையளித்தவனுக்கும், ஒரு வில்வ தளத்தினுல் அர்ச்சனை செய்தவனுக்கும் பலன் ஒன்று தான். அதற்குக்காரணம் அவரவர் சக்தியும், ஞானமும், பக்தியுமேயாகும். வேதாந்தங்களால் துதிக்கப்பட்ட தியாகராஜர் சிவ ஸ்வரூபமாய்த் தியானம் செய்பவருக்கு சிவஸ்வரூபமாய்த் தோன்றுவார். விஷ்ணுஸ்வரூபமாய்த் தியானிப்பவருக்கு விஷ்ணு ஸ்வரூபமாய்த்தோன்றுவார். ஒரே காலத்தில் பலவிடங்களில் தோன்றுவார். வேதங்களின் ஸ்வர ரூபியாயும், தக்ஷயக்ஞ நாசகராயும், மூவுலகுக்குமாதாரமாயும், விசுத்த ஞானஸ்வரூபியாயுமுள்ள தியாகேசனே கௌதம சிஷ்யர்களாகிய உங்களுக்கு ஒரே காலத்தில் தன் ஸ்வரூபத்தைக் காண்பித்து ஐக்கியத்தையளிக்கப் போகிரு"ரென்று சொல்லிக் கொண்டிருக்கையில் பார்வதீ ஸஹிதனுன தியாகேசர் ஒரே காலத்தில் அவரவர்களின் எதிரில்தோன்றி அவர்களுக்குத் தமது பதத்தில் ஐக்கிய ஸம்பத்தை யளித்தார். ஆகையால் தியாகராஜ பதமானது ஸகல ஜாதியருக்கும் பொதுவானது. எங்கும் நிறைந்த ஞானனந்தப்பொருள். அவரது தத்துவத்தைத் திருமாலும் திசைமுகனும் தான் அறிவார்கள்.

"எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன்
அந்தமில் புகழ் ஆருரனெறி
சிந்தை யுள்ளஞ் சிரத்துளுந் தங்கவே". —அப்பர் தேவாரம்



## 78. மந்திரவாதியை மாய்த்து மன்னனைக்காத்த லீலை.

வேதியரின் வேத கோஷத்தையும், மாதர்களின் ஸங்கீதத் தொனியையும், தேவாலயத்தில் முழங்கும் பணவவாத்தியத்தின் ஒலியையும், முக்கிய லக்ஷணமாய் அடைந்து விளங்கும் திருவாரூர் நகரை தக்ஷிணபோஜன் என்னும் ஒரு பூபாலன் அரசு புரிகையில், அவனது ராஜ்யத்தில் எவ்விடத்தில் தேடியபோதிலும் திருடர்களையும், ஜீவஹிம்ஸை செய்பவர்களையும், வஞ்சகர்களையும், விடர்களையும், பதிதர்களையும், அஸத்தியவாதிகளையும், மூடர்களையும் கண்டவர் இருந்ததாய் மூன்றுகாலத்திலும் கேட்டதில்லை. கைலாஸபதியின் கருணையினால் இவ்வாறு மேன்மையுடன் அவ்வரசன் அரசாட்சி செய்யும்பொழுது அவனது செல்வச் செழிப்பைக் கண்டு பொறாமை கொண்ட ஓர் அந்நிய தேசத்திய மந்திரவாதி அவ்வரசனைப் பலவழிகளில் அழித்துவிட வேண்டும் என்று நினைத்து ஒரு கொடிய காட்டில் சென்று, அங்குள்ள செந்நாய், கரடி, புலி, குரங்கு, ஸர்ப்பம், காட்டு யானை முதலிய துஷ்ட ஜந்துக்களைத் தன் மந்திரப் பிரபாவத்தினால் அழகிய பசுக்களாகச் செய்து தானும் ஒரு இடையன் உருவத்தையெடுத்துக் கொண்டு, அவ்வரசன் ஸபையையடைந்து, "ஓ ராஜ சிகாமணியே! நான் வட தேசத்திலிருந்து இவ்வழகிய பசுக் கூட்டத்தை ஓட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். என்னிடம் இருக்கும் இப்பசுக்கள் எல்லாம் மிகவும் உத்தம ஜாதியில் பிறந்தவை. சில பசுக்கள் ஒரு வேளைக்கு ஒரு குடம் பால் கறக்கும். மற்றும் சில பசுக்கள் காலையில் இரண்டு குடம் பாலையும், மாலையில் மூன்று குடம் பாலையும் கொடுக்கும்; சில பசுக்கள் அளவற்ற பாலைத் தாரை தாரையாய்ப் பொழியும். இவைகளுடைய பாலின் சிறப்பைப்பற்றி நான் புகழ வேண்டியதில்லை. நீங்களே நேரில் கண்டு கொள்ளலாம். இவைகளுள் சில பசுக்கள் சரத் கால சந்திரிகை போல் வெண்மை நிறமுடையவைகள். சில பசுக்

கள் கோவைக்கனி போலும், குருவிந்தமணியின் ஒளிபோலும் சிவந்த நிறமுடையவைகள். சில பசுக்களுக்கு முத்துத் தாரை (பசுவின் நெற்றியிலுள்ள ஒரு குறி) நெற்றியில் விளங்குகின்றது. வாலிலும், கண்களிலும், உடம்பிலும், மயிரிலும், நிறத்திலும், வயதிலும், குளம்புகளிலும் இப்பசுக் களைப்போல் லக்ஷணம் உள்ளவைகளைப் பார்த்தவரே உல கில் சிலர்தான் இருக்கக்கூடும். இவ்வாநிரையை நான் ஒவ் வொன்றாய் விற்கமாட்டேன் என்று சொல்லிக் கொண்டே இந்த ராஜ ஸபையைக் குறித்து வந்தேன். இப்பசுக்களெல் லாம் ஒரே காலத்தில் ஆயிரம் குடம் பாலைப்பொழியும் இயல் புடையவைகள் இவைகளை எல்லாம் விலைக்கு வாங்கி இவை களின் பாலினால் ஈசனுக்கு அபிஷேகம் செய்து வைக்க வல் லவர் இவ்வுலகில் நீங்கள் ஒருவரே தான். ஆகையால் சீக்கிரமாய் இவைகளை வாங்கிக் கொள்ளும். நான் வெகு சீக்கிரமாய் என் தேசத்துக்குப்போகவேண்டும். காலதாமதம் செய்வதற்கு இது சமயமன்று. நீங்கள் இதை வாங்காவிடி னும் எனக்கு ஒரு குறைவும் இல்லை'' என்று மந்திரவாதி சொல் வதைக்கேட்டு அம்மகாராஜனும் மனமகிழ்ந்து தன் கண்களால் அவ்வாநிரையைக் கண்டு அவைகளைக் கையால் தடவிக் கொடுத்து விலைக்கு வாங்குவதாய் நிச்சயம் செய்துகொண்டு, "இப்பசுக்களுக்காக உனக்கு எவ்வளவு பொருள் வேண் டும்?" என்று பசுக்களின் மாயையையறியாத அம்மன்ன வன் கேட்டுக் கொண்டிருக்கையில் பக்த ரக்ஷணார்த்தமாய்க் கண்ணுறங்கா தேவதை என்று புகழப்பட்ட தியாகராஜர் ஒரு ஸந்நியாசி வேஷத்துடன் கையில் கமண்டலத்தை ஏந் திக்கொண்டு, "ஹரஹர பசுபதே! சூலத்தைக்கையிலேந்திய மகாபுருஷ! ஜகத்ரக்ஷக! துஷ்ட ஸம்ஹாரக!" என்று ஈசனு டைய நாமங்களைக் கீர்த்தனம் செய்துகொண்டு அத்தருணத் தில் சபைக்கு எதிரில் தோன்றினர்.

அப்பொழுது தக்ஷிணபோஜ மஹாராஜனும் அவர் வரு வதைக்கண்டு எதிர்சென்று அர்க்கியம் பாத்தியம் முதலியவை

களால் உபசரித்து ஆஸனத்தில் இருக்கச்செய்தான். விடாய் தீர்ந்தபிறகு அந்தச் சந்நியாஸியாகிய பரமேசன் அரசனுக்கு ஆசிகூறி, "ஓ பூபால! நீ இப்பசுக்களின் ஸ்வரூபத்தையறிந்து கொள்ளவில்லை. இவைகளெல்லாம் காட்டிலுள்ள கரடி, புலி முதலிய துஷ்ட மிருகங்களே. இவைகளைக் கொண்டு உமது மாளிகைகளையும், இந்தச் சிறந்த நகரையும் பாழாக்கி விட வேண்டுமென்று இந்த மாய மந்திரவாதி கோபால வேஷத்துடன் எதிரில் நிற்கிறான். இப்படிப்பட்ட கொடியவனையும், மாயப் பசுக்களையும் மாய்ப்பதற்காக ஒரு வலை கொடுக்கிறேன். அவ் வலையில் அநேக தும்புகளும் இருக்கும். அந்தத் தும்புகளில் அவனையே அப்பசுக்களைக் கட்டும்படி உத்திரவு செய்வீர். இதோ இவ்வலையைப் பெற்றுக்கொள்ளும்" என்று ஒரு வலையைக் கொடுத்தார்.

அம்மன்னவனும் ஆச்சர்யப்பட்டு "அகிலாண்டபதியாகிய தியாகேசனே என்னையும், எனது பிரஜைகளையும், இந்த நகரத்தையும் காப்பாற்றுகிறார் போலும். உமது தரிசனத்தால் கலங்கா நிலையைப் பெற்றேன். ஜன்மமும் பயனையடைந்த"தென்று துதி செய்துவிட்டு மந்திரிகள் மூலமாய் அம்மாயப்பசுக்களுக்கு அவன் விரும்பிய விலையைக்கொடுத்துவிட்டு, "எனது தொழுவத்தில் நீயே இந்தத்தும்பில் பசுக்களை முதலில் கட்டுவாய்" என்றுரைத்தான். பரமேசனுடைய மாயையை அறியாத அந்த இடையனும் அரசன் கையிலிருந்து வலையைத் தன் கையினால் வாங்கி வெகு சந்தோஷத்துடன் அப்பசுக்களைத் தொழுவத்தில் ஒவ்வொன்றாய்க் கட்டி முடித்துவிட்டு திரும்பும் சமயத்தில் மந்திரத்தின் பலம் குறைந்துவிடவே ஒரு மாயப்பசு மற்றொரு மாயப்பசுவின்மேல் கோபித்துப் பாய்ந்தது. அவைகள் வெவ்வேறு ஜாதியானபடியால் இவ்விதம் ஒன்றின்மேல் ஒன்று சினத்துடன் பாய்ந்து நகங்களாலும் பற்களாலும் கடித்துக் கொண்டு கர்ஜனையுடன் பெரும் போர் செய்து கொண்டே முடிவில் அவை யாவும் மரணத்தை அடைந்தன. மந்திர

பலம் அடங்கி மருண்டு நிற்கும் அந்த மந்திரவாதியையும் அரசன் காவலில் வைத்தான். அக்கொடிய மிருகங்கள் ஒன்றுக்கொன்று சீறிக் கொண்டு பயங்கரமாய் ஆரவாரம் செய்வதைக்கேட்டு பயமடைந்து நகரைவிட்டு ஓடும் சிலஜனங்களை மஹீபதியின் உரையினால் மந்திரிகள் தேற்றினார்கள். மறுநாட் காலையில் அவைகள் பிணமாய் இருப்பதைக் கண்டு இவ்வித அபாயத்திலிருந்து நம்மைக் காத்தருளிய தியாகராஜனே தெய்வம் என்று எல்லோரும் துதித்தார்கள்.

வஞ்சனையா ரார்பாடுஞ் சாராத மைந்தனைத்
துஞ்சிருளி லாடலுகந்தானைத் தன்றெண்டர்
நெஞ்சிருள் கூரும்பொழுது நீலாப் பாரித்
தஞ்சுடராய் நின்றானை நான் கண்ட தாரூரே. — அப்பர்



## 79. சித்ரபாநுவின் சந்தேகத்தை நீக்கிய லீலை.

முனிவர்களே! ராஜசிம்மன் என்றும், ராஜமார்த்தாண்டனென்றும் கீர்த்திபெற்ற சித்திரபாநுமகாராஜன் இளவரசைப்பெற்று மந்திரிமார்களினுதவியையும் ராஜ்ய நூல்களையும் துணையாக வைத்துக் கொண்டு அரசு புரிந்து வரும் நாளில் அவனது தந்தையாகிய ராஜகம்பீர மகாராஜன் மனதில் இவ்வண்ணம் ஆலோசனை செய்தான். "கைலாசபதியின் கருணையினால் இவ்வயதில் நமக்கு ஒரு ஸத்புத்திரன் உதித்தான். நமது விருப்பத்துக்கிருப்பிடமான இக்குழந்தை பாற்கடலில் உதித்த சந்திரன்போல் நாள்தோறும் வளர்ந்து வந்து பாலப்பிராயம் கழிவதன் முன்னமேயே தனுர்வேதம், ராஜதர்மம் முதலிய சிறந்த கல்விகளில் தேர்ச்சியை யடைந்தும் இப்பொழுது இளவரசைப் பெற்றும், பூமி தேவியை

முதல் காதலிபோல் பாவித்து வருகிறான். நமது மைந்தன் நடத்தி வரும் நீதி மார்க்கத்தைக் கண்ட அமைச்சர்களும் ஆச்சர்யத்தை அடைகிறார்கள். பிரஜைகளும் எவ்வித குறைவுமின்றி சுகமாய் வாழ்ந்து வருகிறார்கள். நமது தேசத்தில் காலமழையும், நியாயநிலைமையும், செல்வப்பெருக்கும், வேதப் பயிற்சியும் குறைவின்றி விளங்குகின்றன. வர்ணாச்ரமதர்மங்களும் நமது தேசத்தில் சற்றும் தாழ்வுபடாமல் வளர்ந்தோங்கி வருகின்றன. இவ்வித மேன்மைகளுக்கெல்லாம் காரணம் நமது மைந்தன் நடத்திவரும் நியாயமேயாகும். ஆதலால் நாம் இனி நமது புதல்வனைப் பற்றி கவலைப்பட வேண்டிய விஷயமொன்றுமில்லை. நமது சரீரம் மூப்பினால் மேன்மேலும் தளர்ச்சியடைவதற்கு முன்னமே ஈச்வரதரிசனம் செய்தால் அதுதான் நமது செல்கதிக்குத் துணையாகும். புண்ணிய தீர்த்தங்களில் நீராடி லிங்க ஸ்வரூபத்தைத் தரிசிப்பதே நமது ஆன்மாவுக்கு முக்கிய பிரயோஜனத்தை விளைவிக்கும். இவ்விதமாய் நாம் க்ஷேத்திராடனம் செய்வதினால் நமது குமாரனுக்குத் தானாகவே சிறந்த செல்வமுண்டாகும். ஜயலெக்ஷ்மியின் நோக்கும், மற்றுமுள்ள மங்களங்களுமுண்டாகும். க்ஷேத்திராடனம் செய்வதினாலே ஸ்வர்க்கத்திலிருக்கும் மூதாதைகளும் திருப்தியடைவார்கள். பல்லூழி நாட்களில் செய்த பாபங்களும் குன்றி பசுபதியின் ஸாயுஜ்யமுமுண்டாகுமென்று மஹரிஷிகள் கூறியதைக் கேட்டிருக்கிறோமல்லவா? ஆனகயால் நாம் இது முதல் திவ்ய க்ஷேத்ராடனம் செய்யப் புறப்படுவோ”மென்று சங்கல்பம் செய்து கொண்டு அம்மைந்தனுடனும், மந்திரிமாருடனும் சொல்லி விட்டுப் பிரயாணம் செய்யலானான். அத் தருணத்தில் சித்ரபானு மகாராஜனும் அவர்களின் பாதகமலங்களில் பணிந்து நிற்க அவர்களும் அவனுக்கு ஆசி கூறினர். அமைச்சர் முதலிய அனைவரும் அம்மன்னவனை யணைத்துக் கட்டிக்கொண்டு பலவாறு புகழ்ந்து கொண்டாடி யனுப்பினார்கள். அப்பொழுது சித்ரபானு மகாராஜன் தனது தாயும், தந்தையும் பூமியில் நடந்து செல்ல சக்தியற்றவர்களாயிருப்பதைக் கண்டு ஒரு

பல்லக்கையும், அந்தச் சமயத்துக்குத் தகுந்த சேனையையும் சிறந்த நவரத்னம் முதலிய திரவியங்களையும் அதைக் காப் பாற்றவல்ல வீரர்களையும் அவர்களுடன் பின் செல்லும்படி கட்டளையிட்டான்.

இவ்விதமாய் அந்த ராஜ தம்பதிகள் தன் தேசத்துக்கு ரத்தினம் போல் விளங்கும் மஹாகாளநாதனை முதலில் பணிந்து அவர் பாதாரவிந்தங்களில் புஷ்பங்களால் அர்ச் சனை செய்துவிட்டு அந்தச்சேனைகளுடன் கிழக்கு முகமாய்த் திரும்பி வெகுதூரம் சென்று விருபாக்ஷனையும், வீமலிங்க மூர்த்தியையும் நமஸ்கரித்துவிட்டு பம்பாஸரஸையடைந்தான். அந்தப் பம்பா ஸரஸின் ஜலத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் ஹம்ஸம், காரண்டம், சக்கிரவாகம் முதலிய ஜல பக்ஷிகளைக் கண்டு ஆனந்தமடைந்து அங்கிருந்து தெற்கு நோக்கி வரு கையில் "இவ்விடத்தில் ராமன் சீதாதேவியைத் தேட ஆரம் பித்தான். இவ்விடத்தில் ஜடாயு லங்கையைக் குறித்துச் செல்லும் தசமுகனைத் தகைந்து போர் புரிந்தான். ராமனுக் கும், ஸுக்ரீவனுக்கும் இவ்விடத்தில் ஸ்நேகமுண்டாயிற்று" என்று இவ்விதமாய் ஸ்தல விசேஷங்களை தன் தர்மபத்தி னிக்குக் காண்பித்துக்கொண்டே அவ்வரசன் ஸ்ரீகாளஹஸ்தி க்ஷேத்திரத்தையடைந்தான். அங்கு விளங்கும் காளஹஸ்தி நாதனையும் பணிந்து அங்குள்ள பிராமணர்களுக்கு விசேஷ தானங்களைச் செய்து விட்டுக் ஸ்ரீகாஞ்சீபுர நகர தேவதை யான ஸ்ரீ காமாக்ஷி தேவியையும், தருணேந்து மௌளியான ஏகாம்ர நாதனையும் பணிந்து போற்றி பலவித ரத்ன புஷ்பங்களால் அவர்களின் பாத பத்மங்களில் அர்ச்சனை செய்து ஒரு வருஷ காலம் வரையில் அங்குள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடியும், பஞ்சாக்ஷர மந்திரங்களால் ஜபம் செய்தும், ருத்ராக்ஷ மாலைகளை மார்பிலணிந்து கொண்டும், தூயமனதுடன் பரமேச்வரனைத் தரிசனம் செய்துகொண்டி ருந்தான். பிறகு அக்காஞ்சீ நகரத்தை விட்டுப் புறப்பட்டு அழகிய வனங்களும், சோலைகளும் சூழ்ந்த சிதம்பர க்ஷேத்

திரத்தின் ஸபையில் கோடி சூரியர்கள் ஓரிடத்தில் உதித்தாப் போல் விளங்கும் நடனமூர்த்தியைக் கண்டு கண்களில் ஆனந்தக்கண்ணீர் மல்கப் பணிந்து பலவிதமாய்த் துதிசெய்து ஒரு பக்ஷ காலம் வரையில் நியமத்துடன் அவ்விடத்தில் தங்கியிருந்தான். அந்த க்ஷேத்திரத்தை விட்டுப் புறப்பட்டு தக்ஷிண முகமாய்ச் செல்லுகையில் மலயமலையிலிருந்து வந்து லாவும் தென்றல் காற்றினல் அசைக்கப்பட்ட செடிகளும், கொடிகளும் நிறைந்த சோலை சூழ்ந்ததாயும், பிரம்ம நிஷ்டர் களும், ச்ரோத்ரியர்களும் ஓதுகின்ற நான்கு வேதங்களின் ஒலி நிறைந்ததாயும், மற்ருேரிடத்தில் யக்ஷ ஸத்வம், கந்தர்வ ஸத்வம் முதலிய சிறந்த ஸத்வகுணம் நிறைந்த ஜாதிக்குதிரை களின் நடமாட்டம் நிரம்பியதாயும், விந்தியம் பாரியாத்திரம் என்னும் பெரிய மலைகளுக்கு நிகரான யானைகளின் மணி யோசைகளும், வாத்தியங்களின் ஒலியும் நிறைந்ததாயும் விளங் கும் திருவாரூர்நகரம் கண்களுக்குப் புலப்படவே அம்மஹாராஜ னுக்கு அளவற்ற ஆனந்தம் உண்டாயிற்று. வெகு சீக்கிர மாய் அந்நகரில் பிரவேசித்து அங்குள்ள கமலாலயமென்னும் புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தியாகராஜனைத் தரிசனம் செய்யும்போது மனதில் நிகரற்ற பரமானந்தமுண் டாயிற்று. சரீரம் முழுவதிலும் மெய்ச்சிலிர்ப்பு ஏற்பட்டது. ஸ்ரீ தியாகராஜப் பிரபுவின் ஒப்பில்லா வடிவழகைக் கண்டு களித்துத் துதி செய்தான். ஆயிரக் கணக்கான ரத்னங் களால் பிரபுவின் பாத மலரைப் பூஜித்தான். சுரபிகளின் பாலைக் குடம் குடமாய்க்கொண்டுவந்து பசுபதி லிங்கத்துக்கு அபிஷேகம் செய்து வைத்து விசேஷத் திருவிழாக்களையும் சிறப்புடன் நடத்தி வைத்துக்கொண்டு, அந்தத் திருவாரூர் க்ஷேத்திரத்திலேயே தனது சரீரத்தை விடுவதற்குச் சங் கல்பம் செய்துகொண்டும் தன்னுடன் வந்த சேனைகளையும் வீரர்களையும் தனது குமாரனிடம் திருப்பிவிட்டான்.

இவ்வாறு ராஜ கம்பீரமகாராஜன் திருவாரூர் க்ஷேத்தி ரத்தில் தங்கியிருந்து தியாகராஜப் பிரபுவை நமஸ்கரிக்கும்

பொழுது அஞ்சலி செய்து கொண்டு, "ஓ தியாகப்பிரபுவே! இவ்வுலகில் என் வம்சம் நெடுநாள் வளர்ந்தோங்கும்படி எனது குமாரனுக்கு நல்லதொரு ஸந்தானத்தை யளிக்க வேண்டும். இதுவே யான் இம்மையில் வேண்டும் பயன். என் சரீரத்தின் முடிவில் தேவரீர் பாதார விந்தங்களில் என் ஆன்மாவுக்கு ஐக்கியமளிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தான். இவ்விதமாய் அம்மகாராஜன் வாழ்நாட்களைக்கழித்துக் கொண்டிருக்கையில் சித்ரபானு மகாராஜன் வேட்டையில் விருப்பமடைந்து அருகிலுள்ள காட்டில் சென்று துஷ்ட மிருகங்களை யழித்தும் தன் அரண்மனையிலுள்ள கன்னியர் மகிழும்படி விசித்திர பக்ஷிகளைப் பிடித்து வீரர் மூலமாய் அனுப்பியும், காட்டுப் புஷ்பங்களை மாலையாயணிந்தும் இவ்விதம் வேட்டையாடித் திரும்புகையில் அவ்வனத்தின் அதிஷ்டான தேவதை என்று சொல்லக்கூடிய ரூப ஸௌந்தரியம் நிறைந்த ஒரு சகோராக்ஷி இவ்வரசனுடைய முகசந்திரனைக் கண்டு காம பாணங்களுக்கிலக்காய் நின்றாள். அவளைக் கண்ட அம்மன்னவனிடத்திலும் மன்மத சேஷ்டைகள் பதிக்கப்பட்டது போலாயின. அப்பொழுது முனிவரின் வைராக்கியத்தையும் நீக்கவல்ல சந்திரோதயம் உண்டாயிற்று. மீனகேதனனுக்குப் பரவசனான சித்ரபானு மகாராஜனும் தனக்கு எதிரில் விளங்கும் அப்பெண்மணியின் காமக் கலவியிலமர்ந்திருந்து அன்றிரவை அவ்வனத்தில் கழித்து விட்டு மறுநாட் காலையில் தனதிருப்பிடமாகிய குந்தளநகரத்துக்கு வந்து முன்போல் ஸிம்மாஸனத்திலிருந்து ராஜ்யபாரத்தைத் தாங்கி ஒரு வருடகாலம் சென்ற பிறகு ஒரு நாள் அவ்வரசன் மந்திரி முதலியவர்களுடன் ஸபையில் வீற்றிருக்கையில் ஒரு கிளிமொழியாளையும், ஒரு சிறு குழந்தையையும் அழைத்துக் கொண்டு ஒரு வேடன் அவ்வரசனிடம் வந்து, "மகாராஜனே! இவள் உமது நாயகி. இக் குழந்தையும் இவளிடத்தில் ஜனித்த உமது புத்திரன். இவர்களை நீர் கைப்பற்றிக்கொள்வீர்" என்றுரைக்கையில் மகாராஜன் வியப்படைந்து, "ஓ வேடா!

எனக்கு இவள் காதலியு மன்று. இக் குழந்தையும் என் மைந்தனன்று. நீ யாரிடத்தில் வேண்டுமோ அவரிடத்தில் இவர்களைக்கொண்டு சேர்ப்பாய்'' என்றான். அதைக்கேட்ட வேடனும், "நீங்களே இப்பெண்ணின் பிராணநாதன். இது ஸத்தியம். நீங்கள் உபேக்ஷை செய்தால் கதியேது'' என்றுரைத்தும் அரசன் அவனையிகழ்ந்து துரத்துகையில் ஸத்ய மற்ற இவ்வுலகிலிருப்பதைக்காட்டிலும், கதியற்ற இவளையும் குழந்தையையும் மாய்த்துத் தானும் உயிர் துறப்பதே நல மென்று நினைத்து அப்பெண்ணைக் கொல்லத் துணிகையில் இவ்வேடனின் ஸத்யத்துக்கும் ராஜகம்பீரமகாராஜன் வேண்டு கோளுக்கும் மகிழ்ந்த தியாகேசன் ஆகாய வாணியாய் தோன்றி, "ஓ சித்ரபானு மகாராஜனே! இவள் வேடரின் மாது அல்ல. முன் ஜன்மத்தில் பாஞ்சால ராஜபுத்திரியாய் ஜனித்துச் சிவபக்தரின் சாபத்தினால் இவ்வேட ஜாதியில் தோன்றினாள். இவளையும் குழந்தையையும் அங்கீகரித்துக் கொண்டு நெடு நாள் வாழக் கடவீர்'' என்றுரைத்ததைக் கேட்ட சித்ரபாநுமகாராஜனும் வியப்படைந்து பரமேசனைப் போற்றி அவர்களுடன் சேர்ந்து வாழ்ந்தான்.



## 80. அப்பமளித்தவளுக்குப் பொருள் வழங்கிய லீலை.

அழுகைக் குரலும் யாசகர்களின் தொனியும் செவியில் புகாமல் சிறப்புடன் விளங்கும் திருவாரூர் நகரில் காகினீ என்னும் மாது ஒருத்தி இருந்தாள். அவளுடைய மைந்தனுக்கு முதல் வயது முடிவதற்குள் அவளது கண வன் சிவ பக்தியினால் சில பண்டாரங்களுடன் சேர்ந்து

புண்ணிய க்ஷேத்திரங்களையும், புண்ணிய நதிகளையும் தர்சித்துக் கொண்டே வடதிசையில் சென்று கேதாரம், காசி முதலிய திவ்விய ஸ்தலங்களில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வருஷகாலம் தங்கியிருந்து லிங்க ஸ்வரூப மூர்த்தியின் தரிசனத்தைப் பெற்றுக் கொண்டிருந்தார். காகினீ என்பவள் தன் குடும்பத்தைக் காப்பாற்ற சக்தியற்றவளாய் ஏக்கமடைந்தபொழுது, துன்பப்படும் சமயங்களில் அக்கம்பக்கத்தில் உள்ளவர்களில் சிலர் வஸ்திரமளித்தார்கள். மற்றும் சிலர் அவள்மீதும், அவள் குழந்தைமீதும் அன்புவைத்துப் பாலையும், அன்னத்தையும் கொடுத்தார்கள். சிலர் ஒரு வருஷகாலம் வரையில் அவ் விருவருக்கும் அன்னமிட்டுப் போஷித்து வந்தார்கள்.

இவ்விதமாய் மகாஜனங்களின் உதவியினால் காலத்தைக் கழித்து வருகையில் அம்மாது ஒரு நாள் ஈசனைத்தரிசித்து விட்டுத் தன் குடிசைக்குத் திரும்புகையில் "இவ்வண்ணம் நாமும், நமது புதல்வனும், தினந்தோறும் பிறருடைய அன்னத்தினாலேயே பசியை யாற்றி வருவது நலமன்று. அப்பத்தைச் சுட்டு விற்றாகிலும் அதனால் உண்டாகும் கொஞ்ச லாபத்தைக்கொண்டு, நமது குடும்பத்தைக்காப்பாற்றுவதே புகழுக்கு இடமாகும்" என்று ஆலோசனை செய்தாள். மறுநாள் காலையில் காகினீ மாது தனக்கு அது வரையில் அன்னமிட்டு ரக்ஷணை செய்து வந்தவர்களின் வீட்டையடைந்து அவர்களைப் பணிந்து, தனக்குத்தோன்றிய யோசனையை அவர்களிடம் சொல்லி அவர்களின் ஆசியையும், ஸகாயத்தையும் பெற்றுக் கொண்டாள்.

அதுமுதல் அம்மாது மாலை நேரத்தில் மிகவும் ருசியுள்ள அப்பங்களைச்சுட்டு ஒரு கூடையில் வைத்துக்கொண்டு தியாகராஜாவின் ஆலய கோபுர வாசலுக்கு வருவாள். அக்கூடையை கோபுரவாசலின் அருகில் இறக்கிவிட்டு இரண்டு கைகளையும் கூப்பி இறைவனைப் பணிந்து தன் கூடையிலிருந்து இரண்டு அப்பங்களை எடுத்து கோபுரவாசலில் பிரதி

மாரூபியாய் விளங்கும் சண்டமூர்த்திக்கும், பிரசண்டமூர்த்திக்கும் எதிரில் ஒரு கல்லில் முதல் காணிக்கையாக வைத்த பிறகு மற்ற அப்பங்களை விற்கலானாள். காப்பாரின்றி கதியற்றுக் கதறும் அவளது குடும்பத்தைத் தியாகராஜரவே காப்பாற்ற வேண்டுமென்று மனதில் எண்ணியவுடனே கோயிலுக்கு வரும் ஜனங்கள் பெரும்பாலும் அவளிடத்தில் அப்பத்தை வாங்க ஆரம்பித்தார்கள். அது மூலமாய் அவளுக்குக் குடும்பத்தைக்காப்பாற்றுவதற்குத்தகுந்த லாபம் கிடைத்தது. அன்று இரவில் தியாகராஜர் தன் பிரமத கணங்களான சண்டனையும், பிரசண்டனையும் கூப்பிட்டு, "ஓ கணங்களே! தினந்தோறும் மாலை நேரத்தில் காகினீ என்னும் உத்தமி அளிக்கும் அப்பங்களை நீங்கள் பக்தியுடன் புஜிக்கக்கடவீர்; அதனால் எனக்கு விசேஷ திருப்தி உண்டாகும்" என்று சொன்னார். ஒவ்வொரு இரவிலும் தியாகப்பிரபுவிற்கு ராத்திரி பூஜை முடிந்தவுடனே சண்ட மூர்த்தியும், பிரசண்ட மூர்த்தியும் மூன்று காலபலியுடன் அந்த அப்பங்களையும் புசித்து வந்தார்கள்.

காகினி மாதும் இப்படித் தினந்தோறும் ஈசனுக்காக இரண்டு அப்பங்களை யளித்துவிட்டு மற்றவைகளை விற்று ஜீவனம் செய்துவந்தாள். முதல்நாள் சண்டேசனுக்கு எதிரில் வைத்த அப்பம் மறுநாட் காலையில் காணமல் மறைந்துவிடவே "பூதகணங்களோ அல்லது தியாகேசனே நம்மீது கருணை கொண்டு, நாம் இட்ட அப்பத்தைப் புசித்து வருகிறார்கள். இதுவே நமது சுபத்துக்குக் காரணமாய் விளங்குகிறது" என்று மனக்களிப்புடன் ஒவ்வொரு நாளும் இவ்வாறு நடத்தி வந்தாள்.

இப்படியிருக்கையில் ஒருநாள் மாலை நேரத்தில் வழக்கம் போல் காகினீ மாதினால் அளிக்கப்பட்ட அப்பத்தை அன்று இரவில் சண்டப்பிரசண்ட மூர்த்திகள் உண்ணமல் மறந்து விட்டார்கள். மறுநாட் காலையில் அம்மாது வந்து பார்க்கையில் அவ்வப்பங்கள் அப்படியே இருக்கக்கண்டு, "நான் மிகவும்

பாபியாய்விட்டேன். நேற்று மாலையில் நான் பக்தியுடன் அளித்த அப்பத்தை ஏன் தேவர்கள் உண்ணவில்லை? இந்த தியாகேசனும் உண்ணாமல் போய்விட்டாரே! நான் ஏதோ ஒரு குற்றம் செய்து இருக்கத்தான் வேண்டும்; அதனால்தான் அவர்கள் உண்ணவில்லை'' என்று முதலில் எண்ணினாள். சற்றுநேரம் நன்கு ஆலோசனை செய்து நாம் எவ்வித குற்றமும் செய்யவில்லையே! தியாகேசனுடைய பாத கமலத்தையே நான் உற்ற துணையாய் நம்பியிருக்கின்றேனே. எனது பக்தியும், விசுவாசமும், ஆவலும் சற்றும் குறையவில்லையே! இப்படியிருக்க, ஈசன் நமது அப்பத்தை உண்ணாமல் இருப்பதற்குக் காரணம் புலப்படவில்லையே. இதனால் என் மனம் துடிக்கின்றதே; இது ஒரு அபசகுனம்போல் தோன்றுகின்றதே; காசி யாத்திரையாய் வெகுதூர தேசத்திற்குச் சென்று இருக்கும் என்னுடைய கணவனுக்கு எவ்வித துன்பம் நேரிடுமோ; பாபியாகிய என் மீது இன்றைக்கு ஈசன் கருணை வைக்கவில்லை போலும். இவ்வித அபசகுனத்தைக் கண்டு என் மனம் வருத்தமடைகின்றதே; நான் கொடும் பாபியாகிவிட்டபடியால் தான் ஈசன் இதை புசிக்கவில்லை. இவ்விதமாய் ஈசனுக்கு உதவாத என் பிராணனாலும், சரீரத்தினாலும் யாது பயன்? இப்பாபி உயிரை இப்பொழுதே மாய்த்துவிடுவதே நலமென்று உறுதி செய்து கொண்டு வெகு வேகமாய் ஓடி வந்து தன் வீட்டில் அடுப்பில் கொதித்துக் கொண்டிருக்கும் அப்பம் சுடும் வாணையிலுள்ள எண்ணெயைத் தன் வாயில் ஊற்றிக் கொள்வதற்காக முயலுகையில் அவளது பக்தி விசேஷத்தைக்கண்ட தியாகேசர் ஒரு பண்டார வேஷத்துடன் அவளருகில் சென்று, ''கொதிக்கும் எண்ணெயைக் குடிக்க வேண்டாம்'' என்று தடுத்து, ''ஓ காகினீ மாதே! நேற்று மாலை நேரத்தில் நீ அளித்த அப்பத்தை நமது சண்டப் பிரசண்டர்கள் புசிக்க மறந்து விட்டார்கள். உன்னிடத்தில் யாதொரு குற்றமும் இல்லை. உனது பக்தியைக் கண்டு மகிழ்வடைந்தேன். நீ பிராணனை மாய்க்காதே. இன்னும் சில தினங்களுக்குள் உன் கணவனும் உன்னிடம் வந்து

சேரப்போகிறான். உன் கணவன் உன்னுடனும் இப்பாலக னுடனும் சேர்ந்து சிறந்த செல்வத்துடன் இவ்வுலகில் நெடு நாள் வாழப்போகின்றான்" என்று சொல்லிவிட்டு மறைந்து விட்டார். "பண்டார வேஷத்துடன் வந்தவர் பரம்பொரு ளாகிய தியாகேசரே" என்று மனந்தெளிந்து ஈசனுடைய அருளினால் அவள் சிறப்புற்று விளங்கினள்.



## 81. குருவின் உபதேசத்துக்குக்கௌரவமளித்த லீலை.

ஸூதர் சொல்லுகிறார்:—கேளீர் மகரிஷிகளே! மற்றொரு சமயத்தில் தியாகராஜன் செய்த ஓர் அற்புத லீலை யைச்சொல்லுகிறேன். இந்த லீலையைக் கேட்பதினால் குரு வின் கடாக்ஷம் நன்றாய் உண்டாகும். ஆலமரத்தின் கீழ் தக்ஷிணாமூர்த்தி என்னும் பெயரால் விளங்கும் குருமூர்த்தி யின் அருளால் நற்கதியும் கிடைக்கும். வள்ளல்கள் நிறைந்த அந்த சோழ நாட்டில் கிழக்குத் திசையில் தியாகராஜன் விளங்குவதுபோல், மேற்குத் திசையில் சம்புநாதன் என்னும் பரமேசன் விளங்குகிறார்.

அவரது ஸந்நிதானமே ஸகல தபோவனங்களைக் காட்டி லும் சிறந்தது. ஆகையால் அவ்விடத்தில் சமீகர், வியாஸர் முதலிய தபோதனர்கள் குடிசைகளை யமைத்துக் கொண்டு நெடுநாள் வரையில் அங்கு யோகம் செய்து ஈசுவர ஸித்தி யைப்பெற்றார்கள். ஆகையால் அப்படிப்பட்ட அப்புண்ணிய தலத்தின் மகிமையை யறிந்து கொண்டு அந்நாள் முதல்

அநேக குருக்கள் சிஷ்யர்களுடன் வந்து அவ்விடத்தில் சாஸ்திரப் பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள். அப்படிப் பட்ட ஆசிரியர் மண்டலத்தில் யக்ஞஸ்வாமி என்னும் குருவானவர் தனது சிஷ்யரான சிவதேவன் என்பவருக்குச் சகல சாஸ்திரங்களையும் கற்பித்துவந்தார். அந்தச் சிவதேவன் என்பவர் எட்டாவது வயதில் உபநயனம் செய்விக்கப்பட்டவராய் அந்த யக்ஞஸ்வாமி குருவின் ஆச்ரமத்துக்கு வந்து நான்கு வேதங்களையும், அவைகளின் அங்கங்களையும் மற்றுமுள்ள நானுவித சாஸ்திரங்களை யெல்லாம் குருவின் அருளால் பெற்ருர். குருவின் உபதேசத்தைக் காட்டிலும், அதிகமாய் அறியவல்ல சூக்ஷ்ம புத்தியையுடைய அந்தச் சிவதேவனும் அக்குருவும் தினந்தோறும் கதிரவன் உதிக்கு முன்னமே ஈசுவர தியானத்துடன் எழுந்திருந்து காவிரியில் ஸ்நானம் செய்து, காயத்திரி ஜபம் செய்து விட்டுச் சம்பு நாதனைத் தரிசனம் செய்த பிறகு தமது பர்ணசாலைக்கு வந்து உணவு அருந்திய பிறகு மிகவும் மேதாவிகளாகிய சீடர்கள் கேட்கும் வினுக்களுக்கு அந்த குரு சாஸ்திர சம்மதமான பதிலை அளித்து வருவார்.

அக்குருவானவர் இவ்விதமாய்த் தினந்தோறும் தமது சிஷ்யர்களுக்குத் தத்துவங்களைக் கற்பித்துவந்தார். கொஞ்ச நாட்களில் ஹரியின் மஹிமையைப் பற்றியும், சில தினங்களில் பிரமன் மகிமையைப் பற்றியும், சில தினங்களில் பரமேசன் மகிமையைப்பற்றியும், சில தினங்களில் யாகத்தைப் பற்றியும், விரதத்தைப் பற்றியும் இவ்விதம் பல விதமாய் சாஸ்திர சர்ச்சைகளைச் செய்து கொண்டு வருகையில் ஒரு நாள் சிஷ்யனுன சிவதேவன் ஸகல சாஸ்திரங்களையும் கற்று ஒவ்வொரு வஸ்துக்களின் குணு குணங்களை நன்ருய் அறிந்திருப்பவன் காமத்தை ஜயித்து விடுவானென்றே தனக்குத் தோன்றுவதாகக் கூறுகையில் அதைக்கேட்ட குருவானவர் அந்தச் சிஷ்யனைப்பார்த்து, “ ஓ சிஷ்யரத்தினமே! நீ இவ்விதமாய் சொல்வது சாஸ்திரஸம்மதம் ஆகாது. ஏனெனில் ஸகல

சாஸ்திரங்களையும் கற்று ஒவ்வொரு வஸ்துக்களின் குணகுணங் களையும் நன்ருய் அறிந்து இருப்பவனும் காமத்தை ஜயிக்க முடியாது'' என்று சொல்லி, அதற்குத் திருஷ்டாந்தமாக அந்தக் குருவானவர் பலவிதமாய் பூர்வீகர்களின் சரித்திரத் தைக் கூறிய போதிலும், அவரது சிஷ்யன் குருவின் மொழி யை நம்பாமல் தான் கூறியது தான் சாஸ்திரப் பிரமாணம் ஆகுமென்று உரைத்தான்.

இவ்விதமாய்க் குருவின் அபிப்பிராயமும் சிஷ்யனின் அபிப்பிராயமும் நேர் விரோதமாக இருக்கையில் அவ்விருவருக் கும் தமது கருத்தைப் பற்றி மனதில் கொஞ்சம் ஆயாசம் உண்டாயிற்று, இவ்வாறு அவ்விருவருக்கும் மனம் கலங்கிய பிறகு அந்தச் சிஷ்யன் அக் கூட்டத்திலிருந்து வெளியில் எழுந்து சென்ருன். குருவும் தமது பர்ணசாலைக்குள் சென்ருர். இரண்டு மூன்று நாட்கள் சென்ற பிறகும் தமது சிஷ்யனை சிவதேவன் சாஸ்திர சம்பந்தமாய்ச் சர்ச்சை செய்வதற்குத் தன் னிடம் வரவே இல்லையே என்று குருவுக்கு மிகவும் மனக்குறை உண்டாயிற்று. சிஷ்யர்கள் அதிகமாக இருந்தபோதிலும் இந்தச் சிவதேவன் என்னும் நற்சிஷ்யன் மாத்திரம் சில நாளாய் வாராமையாலும், ஈசுவர குணத்தைப் பற்றிய சர்ச்சை யில்லா மலிருப்பதாலும் வருத்த மடைந்த மனதையுடையவராய் அக் குருவானவர் "நமது சிஷ்யனுக்கு யார் உபதேசம் செய்து மறு படியும் நம்மிடம் அனுப்பப் போகிருர்கள்? ஈசனே கதி. நாம் கற்ற கல்வியும் இனி பாரம் போல் தோன்றும்'' என்று பலவித மாய்த் துக்கப்பட்டார்.

அப்படிப்பட்ட குருவின் மீது கருணை செய்த தியாக ராஜன் அந்தச் சிஷ்யனுக்குத் தானே புத்தி கூறுவதாய் ஸங்கல் பம் செய்து, ஒரு நாள் மாலை நேரத்தில் "சிவதேவன் என்னும் சிஷ்யனுடைய ஆச்ரமத்தின் எதிரில் உலாவி வருவாயாக'' என்று ஒரு கந்தருவ மாதுக்கு உத்தரவு செய்தார். தியாக ராஜனின் கட்டளையைப் பெற்ற அந்தக் கந்தருவ மாது அவ்வண்ணமே அந்தச் சிஷ்யனது பர்ணசாலைக்கு நேராகச்

சென்றாள். அத்தருணத்தில் அந்தச் சிஷ்யன் அக்காலத்துக் குரிய காரியங்களை முடித்துவிட்டுத் தமது பர்ணசாலைக்குத் திரும்புகையில் பிரபுவின் ஏவலால் திடீரென்று ஒரு மேகம் கிளம்பி இடி மின்னலுடன் கொஞ்சம் மழை பெய்ய ஆரம்பித் தது. பயங்கரமான அந்த இடியையும், மின்னலையும், மழை யையும், கண்டு பயந்த அந்தக் கந்தருவமாது மன நடுக்கமுற்ற வளாய், "ஓ பிராமணோத்தம! இப்படிப் பட்ட பயங்கரமான சமயத்தில் வழி தப்பி வந்து பயமடைந்திருக்கும் நான் இன்றி ரவு தங்கி இருப்பதற்கு உமது இருப்பிடத்தில் கொஞ்சம் இட மளிக்கவேண்டும். உம்மை நான் சரணமாகப் பற்றினேன்" என்று சொன்னாள். துணைவன் அற்றவளாய் நடுங்கிய குர லுடன் மழைக்குப் பயந்து சரணமென்று சொல்லிக்கொண்டு வரும் அப்பெண்ணைக் கண்டவுடன் அந்தச் சிஷ்ய வேதிய னுக்குக் கருணை உண்டாயிற்று. அப்பெண்ணைப் பார்த்து "ஓ பெண்ணே! நீ பயப்பட வேண்டாம். உன்னை நான் காப்பாற்றுகிறேன்" என்று சொல்லி அழைத்துத் தனது பர்ண சாலையின் ஒரு கூடத்திலிருக்கும்படிச் செய்து, அவள் உண் ணும்படி சில கனிகளையும் அளித்து, "ஓ பெண்ணே! நீ பயப் படாமல் இந்த நித்திரை சாலையில் உறங்குவாயாக. சூரியன் உதித்தவுடன் நீ வேறு இடத்துக்குச் செல்லலாம். ஏனெனில் இந்த இடம் சிஷ்யர்களுக்கு ஏற்பட்டது. ஆகையால் நீ இவ் விடத்தில் அதிக நாள் தங்கியிருக்கக் கூடாது. நாளை உதயம் வரையில் நான் உன்னை எனது மகள் என்று நினைத்துக் காப்பாற்றுவேன். நீ மனக்கலக்க மற்றவளாய் இருப்பாய்" என்று தான் கற்ற சாஸ்திர ஞானத்தினால் முதலில் இவ்விதம் கூறினான். அந்தக் கந்தருவ மாதும் அவ்வண்ணமே பர்ண சாலையில் உறங்குகையில், சிஷ்யனும் அப்பர்ணசாலையின் மற் றொரு பாகத்தில் படுத்து உறங்கலானான்.

அப்பொழுது அந்தச் சிஷ்யனுடைய மனதில் மாலை நேரத் தில் வந்த கந்தர்வப் பெண்ணின் அழகிய முகமானது தோன்ற ஆரம்பித்தது. அதனால் அவனுடைய நித்திரை அகன்று

விட்டது. நெருப்பின் அருகில் உள்ள வெண்ணெ போல் கொஞ்சம் கொஞ்சமாக அந்தச் சிஷ்யனுக்குத் தத்துவ ஞானம் குன்றிவிட்டது. காமனின் கணைக்கு இலக்கானன், படுத்தான், எழுந்தான், அழுதான், தான் கற்ற சாஸ்திர ஞானத்தினல் சஞ்சலமடையும் தனது மனதை யடக்கிக் கொண்டான். பசு முதல் த்ரிமூர்த்திகள் வரை எல்லாரையும் வென்றவனுகிய பஞ்ச பாணனுடைய பாணங்களால் உண்டாகும் மனக்கொதிப்பை அடக்க முடியாமல் அவன் சற்று நேரம் இங்குமங்கும் உலாவினன், பெருமூச்சு விட்டான். அப்பெண்ணெ யாரென்று விசாரிப்போம் என்று அவள் அருகில் சென்றுன். ஸத்தியத்தை மீறத்துணியாமல் அவளெ விசாரிக்காமலே தனது இருப்பிடத்துக்கு வந்தான். அன்று இரவு முடிவதற்குள் அவனுக்கு வைராக்கியமும் பொறுமையும் அகன்று விட்டது. வெட்கமும் ஓடிவிட்டது. பயித்தியம் பிடித்தவன் போல் இங்குமங்கும் ஓடித் திரும்பிக் கதறி உளறி அலற்றிப் பிதற்றி அழுது சிரித்து இவ்விதமாய்க் காமனுக்குட்பட்டவனுய் துன்பப் படுகையில் கதிரவனும் கீழ்த்திசையில் உதித்தான். அப்பொழுது ஒரு அசரீரி உண்டாகி "ஓ சிஷ்ய ரத்தினமே! நீ சில தினங்களுக்கு முன் சாஸ்திரங்களேக் கற்றவன் காமனெ ஜயிப்பான் என்று சொன்னுயே. அவ்வித சாஸ்திரங்களேக் கற்று அறிந்த நீ ஏன் இவ்விதமாய் ஒரு பெண்ணுசையினல் பற்பல துன்பங்களே யனுபவிக்கிறுய்" என்று சொல்லுகையில் அப்பொழுதே ஞானேதயத்தை யடைந்து அந்தச் சிஷ்யன் பகவத் தியானம் செய்து கொண்டு குருவின் அருகில் சென்று பணிந்து "ஸ்வாமி! நான் அஞ்ஞானத்தினல் உமது மொழிக்கு விரோதமாய் மறு மொழி கூறி பாபத்தை யடைந்தேன். அவ்வித பாபம் நீங்கும்படி என்னிடத்தில் நீர் கருணெசெய்யவேண்டும். எனக்கு நேற்றைய இரவில் ஈசன் தண்டனெ அளித்தார்." என்று குருவைத் துதி செய்து முன்போல் அவரிடத்தில் தத்துவப் பயிற்சி செய்ய ஆரம்பித்தான்.



## 82. வைத்தியனுக்கு வியாதி விளைவித்த லீலை.

திருவாரூரில் ஸ்வரசேனன் என்னும் வைத்தியன் ஒருவன் இருந்தான். வைத்திய சாஸ்திரத்தில் சிறந்த ஞானத்தையடைந்தவரான அவனது தந்தை அவன் பாலனயிருக்கும் பொழுது பரகதியையடைந்து விட்டபடியால் அந்த ஸ்வரசேனன் என்பவனுக்கு வைத்திய சாஸ்திரத்தை கற்பிப்பார் ஒருவரும் இல்லை. அதனல் அவனுக்குத் தாது ஞானம், ரோகநிதானம், ரோகத்தின் இயல்பு, அவைகளுக்கு அளிக்க வேண்டிய மருந்து, அவைகளைச் செய்யும் முறை முதலிய வைத்திய சாஸ்திர ஞானம் கொஞ்சமும் கிடையாது. இப்படிப்பட்ட அவன் குடும்பத்துடன் ஜீவிப்பதற்கு உபாயமொன்றையும் அறியாமல் துக்கப்படுகையில் அவனது மனைவியானவள், "நாத! நீர் இன்று முதல் தியாகப்பிரபுவின் பாதகமலத்தில் பக்திசெய்வீராகில் உமக்கு வைத்திய ஞானமும் உண்டாகும். ஈசுவர பக்தியானது சகல விருப்பங்களையும் அளிக்கும் என்று சொல்லுவதை நான் பெரியோரிடமிருந்து பலதடவை கேட்டிருக்கிறேன்" என்று சொன்னள்.

அதைக்கேட்டு ஸ்வரசேனன் மறுநாள் விடியற்காலையில் கமலாலயத்தில் ஸ்நானம் செய்து விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்து கொண்டு பிரபுவை வந்தனம் செய்து துதித்துத் திரும்புகையில் ஒரு சிவபக்தர் அவனது வழியில் நின்று கொண்டு, "ஓ புண்ணிய சீல! உமது தந்தை இவ்வூரில் "பூலோக தந்வந்தரி" என்று கீர்த்தி பெற்றிருந்தாரே; அவரது புத்திரனகிய நீர் என் மீது விசுவாச மடைந்து எனது ஜ்வரத்தைத் தீர்க்கலாகாதா?" என்று சொன்னர். அதைக்கேட்ட அவ்வைத்திய குமாரன் ஜ்வரத்தினல் துன்பப்படும் அப்புருஷனைச் சிறந்த சிவபக்தர் என்று சில அடையாளங்களினல் அறிந்து கொண்டு அவரை அழைத்துக் கொண்டு தனது வீட்டுக்குச் சென்று ஒரு பாத்திரத்தில்

ஏதோ ஒரு மருந்தைப் போட்டுக் கலக்கி 'தியாகராசனே' நீயே துணை, என்று சொல்லிக் கொண்டே அச் சிவபக்தரின் வாயில் அம்மருந்தை ஊற்றினன். வைத்திய நூலை யறியாத அந்த ஸ்வரசேனன் ஈசனையே முழுமையிலும் நம்பி நாமத்தை உச்சரித்துக் கொண்டே அம்மருந்தை யளிக்கும் பொழுது ஈசனின் அருளால் அம்மருந்துக்குச் சிறந்த சக்தியுண்டா யிற்று. அதை உட்கொண்ட அந்த சிவபக்தரும் மறுநாள் காலையில் தணிந்த ஜ்வரமுடையவராய்ச் சரீர ஆரோக்கியத் தையடைந்து பூர்வபலத்தையும் பெற்று ஸ்நானம் செய்வதற் காக கமலப் பொய்கைக்குச் சென்றார்.

இவ்விதமாய் அந்த ஸ்வரசேனன் ஈசன் தொண்டரிட மிருந்து எவ்வித பிரதி பலனையும் எதிர்பாராமல் வைத்யம் செய்வது என்று சங்கல்பம் செய்து கொள்ளவே பரமேசன் அருளால் அவனது மனதில் வைத்திய சாஸ்திர ஞானமும் கொஞ்சம் கொஞ்சமாய்த் தோன்ற ஆரம்பித்தது. அது முதல் அவனைச் சிறந்த வைத்தியன் என்றே எல்லோரும் மதித்து வந்தார்கள். அது முதல் வாதரோகமுடையவரும், பித்த ரோகமுடையவரும், பசியற்றவர்களும், தாதுக்களின் கொதிப்பையடைந்தவர்களுமான நானாவித ரோகிகள் கூட்டம் கூட்டமாய்க் கூடி அந்த ஸ்வரசேனனிடமிருந்து ஔஷதங் களைப் பெற்று புசித்து வந்தபடியால் அவர்களுடைய ஸகல நோய்களும் தணிந்து வந்தன. அவர்கள் அளிக்கும் வெகு மதியைப் பெற்றுக் கொண்டு அவ் வைத்தியனும் சுகமாய் ஜீவனம் செய்து கொண்டிருக்கையில் அவன் வெகு நாள் வரையில் சிவ பக்தரின்மீது அன்பு பாராட்டி அவர்களின் வியாதிக்குத் தக்கவாறு மருந்து அளித்து வரும் நாளில், ஜனங்களினால் அளிக்கப்பட்ட தனத்தினால் அவனுக்குச் செல்வமும் நற்கீர்த்தியும் உண்டாயிற்று.

செல்வத்தினாலும், நற்கீர்த்தியினாலும் நாளடைவில் கர் வத்தையடைந்த அந்த வைத்தியன் சிவ பக்தருக்கு வைத் தியம் செய்வதைக் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைக்க ஆரம்

பித்தான். தியாகேசனைப் பணிவதற்காக வெகு தூரதேசத்திலிருந்து வந்த ஏழை பக்தர்கள் அநேகர் மழை காலத்திலும் பனிக் காலத்திலும் பலவித ரோகங்களால் துன்பப்படுவதைப் பார்த்திருந்தும் அவ்வைத்தியன் செல்வச் செருக்கினால் அவர்கள் மீது அன்பு செலுத்தாமலும், முன் போல தொண்டர்களிடமிருந்து எவ்வித பலனையும் அபேக்ஷிக்காமல் ஔஷதங்களை யளிக்காமல் இருந்தான். ஞானத்திலும், வயதிலும் முதிர்ந்த தொண்டர் அநேகர் பலவிதப் பிணியினால் வருந்துவதைக் கண்டு சற்றும் இரங்காமல் இருக்கும் அந்த வைத்தியனைத் தக்கவாறு தண்டித்து நல்ல புத்தியைக் கொடுக்கவேண்டும் என்று கருதிய தியாகராஜர் அவனது மனதில் ஒருவிதக்கொதிப்பு உண்டாகும்படி செய்தார். அப்பொழுது அவனுக்கு மனக்கொதிப்பு உண்டாகவே நித்திரைவருகிறதில்லை. உணவில் ஆசை இல்லாமல், உடம்பு முழுமையிலும் வெப்பம் கிளம்பிச் சரீரத்தை வாட்டி வருவதைக் கண்ட அவ்வைத்தியனுடைய மனைவி அவனை வணங்கி, "நாத! உமக்குத் திடீரென்று இவ்வித வியாதி உண்டாகி வருத்தப்படுகிறீர்களே; தியாகேசனது தொண்டர்களுக்கு நீர் இப்பொழுது சிலநாளாய் சிகிச்சை செய்யாதிருப்பதால் அவர்கள் மனம் வியாதியினால் கொதிப்பதால் உமது மனமும் இவ்வண்ணம் வியாதியினால் கொதிக்கும்படி பரமேசன் சங்கல்பம் செய்திருக்கிறார் போலும்" என்று உரைக்கவே அவ்வித நல் வார்த்தையைக் கேட்ட அவ்வைத்தியன் நன்மதியையடைந்து அப்பொழுதே வெளியில் சென்று வியாதியினால் துன்பத்தை யனுபவித்துக் கொண்டிருக்கும் சிவபக்தர்களைத் தேடிக் கண்டு பணிந்து அவர்களைத்தனது வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்து முன் போல் அன்புடன் அவர்களுக்கு ஔஷதங்களையளித்து வரலானான். அவ்வித நற் செய்கையினால் தொண்டர்களின் வியாதி நீங்கி அவர்களின் மனம் குளிரவே அவ் வைத்தியனுடைய மனமும் கொதிப்பை யிழந்து குளிர்ச்சி அடைந்தது. தொண்

டர்களுக்குச் செய்யும் இவ்வித நன்மையினல் உண்டாகும் சிறப்பை அவன் மூலமாய் அறிந்து கொண்ட சகல ஜனங்களும் அது முதல் ஈசுவரனிடத்தில் போலவே அவனது தொண்டர்களிடத்திலும் பக்தி செய்து ஆதரவுடன் உபசரித்து அவர்களின் அருளால் சிறந்த மேன்மையுடன் விளங்கினர்கள்.



## 83. பாக்கியத்தைத் தடுக்க முடியாதென்ற லீலே.

சிறந்த செல்வம் மல்கும் அத்திருவாரூரில் ஸோமகீர்த்தி யென்னும் மந்திரியானவன் ப்ரதி தினமும் தனது சக்கரவர்த்தியின் ஸபைக்குச் சென்று குல மந்திரியாகிய தன்னல் நடத்த வேண்டிய ராஜ்யகாரியங்களை யெல்லாம் நீதி முறை தவருமல் நடத்திவிட்டுச் சபையில் வீற்றிருந்து விளங்கும் மகரிஷிகளையும், வேதியர்களையும் ஞானத்தில் சிறந்தோர்களையும் பணிந்து விட்டு வெகு சந்தோஷத்துடனும், முகமலர்ச்சியுடனும், தனது மாளிகைக்குச் செல்வான். ஒரு நாள் அவ்விடத்தில் தனது குமாரனுக்குத் திடீரென்று புத்தி கலங்கி யிருப்பதாக அறிவிக்கப் பட்டவனய் அதைப் பற்றி கொஞ்சம் மனக் கிலேசத்தை அடைந்தான். வைத்தியத்தில் நிபுணர்களையும் உபாயத்தில் மிக்க வல்லமை யுள்ளவர்களையும் அழைத்து அவர்களைக் கொண்டு எவ்வித முயற்சி செய்த போதிலும் தனது குமாரனது புத்திக்குத் தெளிவு உண்டாகவே இல்லை. அதுமுதல் அம் மந்திரிக்கு மனதில் உள்ள சந்தோஷம் குன்றி விட்டது. ஒவ்வொரு நாளிலும் அவனது முகத்தில் ஒளி குறைந்தே

காணப்பட்டது. உலக வாழ்க்கையையே வெறுப்பவன் போல் விளங்கினான். தனது புத்திரனுடைய நிலைமையை நினைத்து நினைத்து முகவாட்டமடைந்த அந்தச் சோமகீர்த்தி யென்னும் மந்திரியானவன் ராஜ ஸபைக்கு வந்து வீற்றிருக்கையில் அவனது முகவொளி மழுங்கியதைக் கண்ட அச் சபையிலிருந்த ஒரு சோதிடன், "ஓ மந்திரிப்பிரபோ! நீர் ஏன் சில நாளாக முகவாட்டத்தை யடைந்திருக்கிறீர்" என்று கேட்கையில் அவ் வமைச்சன் அந்தக் கிரகவேதியிடம் தனது புத்திரன் விருத் தாந்தத்தைச் சொன்னான்.

அதைச் செவியுற்ற சோதிடன் அம்மந்திரி குமாரனுடைய ஜாதகத்தைப் பார்த்து நன்றாய் யோசித்து மனமகிழ்ச்சியுடன் ஆனந்தித்து அருகில் நெருங்கி "ஓ மந்திரி சார்வ பௌம! நீர் உமது குமாரனைப் பற்றி விசனப்பட வேண்டாம். இன்னும் ஆறு மாத காலம் வரையில் பௌம கிரகத்தின் பார்வையினால் உமது குமாரனுக்கு இவ்விதமாய் பல பிணிகள் உண்டாகும். ஆறு மாதம் முடிந்த பிறகு அவனுக்குச் சிறந்த ஞானமும் நற்கீர்த்தியும் அளவற்ற செல்வமும், உத்தமமான கன்னிகையின் பிராப்தியும் உண்டாகும். இவ்வளவு மேன்மை உமது குமாரனுக்கு உண்டாகப் போகிறது என்பதை நான் எனது ஞானத்தினால் நிச்சயமாய்க் கூறுவேன். இதற்காக நீர் மனவருத்த மடையக் கூடாது" என்று மொழிந்தான். அப்பொழுது அம் மந்திரி இவ்வாறு கூறும் சோதிட வேதியனுக்கு நமஸ்காரம் செய்து வெகுமதியையும் கொடுத்துக் கொஞ்சம் மனக்குறை தீர்ந்தவன் போல் விளங்கினான்.

பிறகு சில நாள் சென்றவுடன் அந்த மந்திரி குமாரனுக்கு மதியின் கலக்கம் அதிகமாகி விடவே பித்தன் என்றே பிறர் கூறுமாறு விகார சேஷ்டைகளைச் செய்ய ஆரம்பித்தான். வீதியில் ஓடிக்கொண்டும், குற்றமற்றவரைப் பழித்தும் அடித்துக்கொண்டும் தனது விருப்பம் போல் நடப்பவனாயும் இருக்கும் தனது மைந்தனைக் கண்ட அம்

மந்திரி மிகவும் கோதிப்புண்ட மனம் உடையவனாய் அவனை ஒரு சாலையில் அடைத்துக் கதவை மூடி காலங்களில் உணவை விரும்பினால் அளிக்கும்படி ஏற்பாடு செய்திருந் தான். தன்து மைந்தனுக்குச் சோதிடன் கூறிய நற்பலன் இனி ஒருநாளும் உண்டாக மாட்டாது என்றே மந்திரி நினைத்திருந்தான்.

நாளடைவில் தனது குமாரன் விஷயமான கஷ்டத்தையும் மனதில் வைக்கவேயில்லை. இவ்விதமாய் மந்திரியின் புத்தி யானது ராஜ்ய கார்யங்களில் இழுக்கப் பட்டிருக்கையில் ஆறு மாத காலமும் சென்றவுடனே அம்மந்திரி குமாரன் மீது சுபக் கிரகத்தின் பார்வை யுண்டாயிற்று. அதனால் அவன் முன்னி ருந்த மதிக் கலக்கம் போய் பிருஹஸ்பதிக்குச் சமமான கூர்மை யுள்ள புத்தியை அடைந்தான். தன்னை எதற்காக இவ்விதம் சிறையிலிட்டிருக்கிறார்களென்று யோசனை செய்தான். தான் யாருக்கும் எவ்வித குற்றமும் செய்யவில்லையே என்று மனதில் எண்ணினான். எனக்குத்தகுதியான உணவு அளியுங்கள் என்று கதறினான். நற் பேச்சினால் வேலைக்காரர்களைக் கூப்பிட்டு அழைத்த போதிலும் அம் மந்திரியின் மாளிகையில் உள்ள வேலைக்காரர்கள் அவனது பேச்சைப் பயித்தியத்தின் பேச்சு என்றே நினைத்து அவனது பசிக்கு ஆகாரம் அளிக்கவே யில்லை. தாகத்தைத்தணிக்க ஜலத்தையும் ஈயாமல் பயித்தியக் காரன் என்றே பேசாமல் இருந்தார்கள். பொறுக்க முடியாத பசியினாலும், தாகத்தினாலும், சிறையில் கட்டுண்டிருப்பதாலும் அம்மந்திரிகுமாரன் மிகவும் வாடிக்களைத்து சோர்வையடைந்து அச்சிறைச்சாலையின் ஒரு மூலையில் படுத்துறங்கிவிட்டான்.

அன்றிரவில் அம் மந்திரியின் மாளிகையிலுள்ள பொருள் களை எல்லாம் அபகரிக்க வேண்டும் என்னும் கருத்துடனே சில சோரர்கள் காட்டிலிருந்து சுரங்க வழியாய் அம் மந்தி ரியின் மாளிகைக்குட் பிரவேசிப்பதற்காகச் சுரங்கத்தைத் தோண்டிக் கொண்டு வந்தார்கள். அவர்கள் சுரங்கத்துக் காகப் பார்த்த குறியானது தவறி அம்மந்திரி குமாரன் சிறைக்

கூடத்துக்கு நேராய் வந்தது. அச்சோரர்கள் அன்றிரவில் நன்ருய் அச்சுரங்கத்தைத் தோண்டி வழியைத்திறந்து வைத்து விட்டு மறுநாள் இரவில் தடையில்லாமல் மாளிகையில் நுழைந்து பொருள்களைக் கவர்ந்து விடலாமென்று யோசித்துச் சென்ருர்கள்.

அன்றிரவு முடிந்தவுடன் நித்திரையை விட்டெழுந்த மந்திரி குமாரன் கண் விழித்துப் பார்க்கையில் தான் இருக்கும் சிறைச்சாலைக்கு நேராக ஒரு வழி இருப்பதைக் கண்டான். நற்புத்தியை அடைந்த அம்மந்திரி குமாரன் அப்பொழுது அச்சுரங்க வழியாய் வெளியில் வந்து காட்டை யடைந்து அங்குத் தோன்றிய வழியின் மூலமாய் கிராமங்களையும் நகரங்களையும் அடைந்து தனது பசியை நீக்கிக் கொண்டு பாண்டிய நாட்டின் தலைநகராகிய மதுராபுரியை யடைந்து அங்குள்ள வைகைக் கரையின் ஆச்ரமத்தில் விளங்கும் ஏமந்தக மகாமுனிவரைப் பணிந்து, அவரிடமிருந்து ராஜ நீதிகளை நன்ருய்க் கற்க ஆரம்பித்தான். அவனது முகக் குறிப்பையும், புத்தியின் கூர்மையையும், யுக்தியின் தோற்றத்தையும், பேச்சின் கம்பீரத் தன்மையையும், சரீரத்தின் இயல்பையும் கண்டு, இவன் ஒரு மந்திரி குமாரனுகவே இருக்க வேண்டுமென்று நிச்சயம் செய்து அவனது வம்சத்தையும் தகப்பன் பெருமையையும் அறிந்து கொண்டு அம்முனிவர் அக்குமாரன் மீது ஒப்பற்ற அன்பை வைத்து சகல ராஜ நீதிகளையும் கற்பித்துக் கொடுத்தார். அவனுக்குக் கல்வி முடியும் தருணத்தில் அப் பாண்டிய நாட்டின் அமைச்சனுடைய குமாரிக்கு விவாகம் செய்யக் கருதியதாயும், அம்மந்திரி கூறும் வினுக்களுக்கு விடையளிக்கும் மந்திரி மைந்தனையே அப்பெண் மணப்பதாயும் மணவோலை உலகில் பரவவே சகல மந்திரி குமாரர்களும் பாண்டி நாட்டுக்கு வந்து சேர்ந்தனர். மந்திரி மகளின் விவாக மண்டபத்தில் சகல மந்திரி மைந்தர்களும் விவாக தினத்தில் ஒன்று சேர்ந்து விளங்குகையில் அந்த ஏமந்தக முனிவர் தமது சீடனுன ஸ்ரீமந்தன்

என்னும் சோழ மந்திரி குமாரனை அழைத்துக் கொண்டு அவ் விவாக மண்டபத்தை அடைந்து வீற்றிருந்தார்.

அப்பாண்டிய தேசத்து மந்திரியானவன் அப்பொழுது ரத்தினபரணங்களினல் அலங்கரிக்கப்பட்ட தனது மகளை சபையில் அழைத்துக் கொண்டு வந்து அம் மந்திரி குமார மண்டலத்தைக் கண்டு வணக்கத்துடன் ராஜநீதி சம்பந்தமாயும், விவகார சம்பந்தமாயுமுள்ள சில வினுக்களைக் கூறினன். அம் மந்திரி குமாரர்கள் எல்லோரும் அவ்வினுக்களுக்குப் பதில் கூற முடியாமல் வெட்கித் தலை குனிந்தார்கள். அப்பொழுது தியாகேசனின் கருணையாலும், சுபக்கிரகப் பார்வையினலும், ஸத்குருவின் பயிற்சியாலும் மேன்மை பெற்ற அந்த தீமந்தகன் என்னும் மந்திரி குமாரன் அப்பாண்டிய நாட்டு மந்திரியின் வினவுக்கு யுக்தமான விடையளித்தான். அதனல் அவன் களித்துத் தனது மகளை அவனுக்கு விவாகம் செய்து கொடுக்கவே, அதைக் கண்டு பொருமை கொண்ட மற்ற தேசத்து மந்திரிமார்களும், அவரது குமாரர்களும் ஒன்று சேர்ந்து அம் மதுரை மந்திரியின் மீது அகால யுத்தம் செய்யத் தொடங்கினர்கள். அத் தருணத்தில் அந்த தீமந்தகன் தனது மாமன் மூலமாய் பாண்டியன் சேனையைத் திரட்டித்தானே அச் சேனைக்குத் தலைவனய் நின்று கடும்போர் செய்து அம்மந்திரிக் கூட்டங்களை ஓடச் செய்து முனிவரின் ஆசியையும், மாமனது செல்வத்தையும் பெற்றுக் கொண்டு ஜயலக்ஷ்மியை முதலில் அணைந்த பிறகு அப்பாண்டிய மந்திரியின் மகளைத் தழுவிக் கொண்டு தனது நகரமாகிய திருவாரூருக்குத் திரும்புகையில் தியாகராஜர் அவனது தகப்பனருக்கு ஆகாய வாணியின் மூலமாக் "ஓ மந்திரி! சிறையிலடைக்கப்பட்ட உனது குமாரன் நல்ல காலத்தினல் சிறந்த புத்தியை யடைந்து சுரங்க வழியினல் மதுரையை யடைந்து முனிவரிடம் நீதிகளைக் கற்று பாண்டிய மந்திரி மகளுடனும், ஜய லக்ஷ்மியுடனும் நமது நகருக்கு வருகிறன் பார். அவரவர் பாக்கியத்தைத் தடுக்க முடியாது என்பதற்கு உனது குமாரனே உதாரணம்" என்று உரைத்தார்.

## 84. கடலில் நடை கற்பித்த லீலை.

தியாகராஜருடைய இவ்வித ஆகாயவாணியைச் செவியுற்ற மந்திரி மிகவும் ஸந்தோஷத்தை அடைந்து தனது ராஜனுக்கு இவ்வித மேன்மையை யறிவித்துச் சிறந்த பரிவாரங்களுடன் தனது மகனைத் திருவாரூருக்கு வரவேற்று நகர வலம் வந்து அம்மகனையும் மருமகளையும் முதலில் தேவாலயத்துக்கு அழைத்துச் சென்று தியாகேசரைப் பணியச் செய்து அவரது கருணையைப் பெற்று இவ்விதமாய்ச் சிறப்புடன் கூடிய மகனுடன் வாழும் நாளில் திவோதாஸன் என்னும் வேதியர் ஒருவர் தியாகேசனுடைய திவ்ய சக்திகளையும், அற்புத குணங்களையும் திசைகள் தோறும் போற்றி வந்தார். வேதத்தில் சொல்லப்படும் ஈசனுடைய குணங்களையும், புராணங்களில் மகரிஷிகளால் கூறப்படும் அற்புத குணங்களையும் கேட்டுப் பல பக்தர்கள் ஆநந்தமடைந்தார்கள். பரமேசனைத் துதித்தார்கள். மற்றும் சிலர் அவ்வுமாபதிக்குத் தொண்டு செய்வதே பிறவிப்பயனாகும் என்று நினைத்தார்கள். இவ்விதமாய்த் திவோதாஸனால் உபதேசிக்கப்பட்டவைகளைக் கேட்டு பலர் நற்சகவாசத்தையும், நற்பயனையும், நற்கதியையுமடைந்து வந்தார்கள்.

இவ்விதம் இவ்வேதியர் ஒவ்வொரு நகரமாய்ச் சென்று அங்குள்ள தொண்டருக்குப் பரமேசன் பக்தியை ஊட்டிக் கொண்டு ராமேச்வரத்தை யடைந்தார். அந்த க்ஷேத்திரத்தில் விளங்கும் லிங்க மூர்த்தியிடம் பக்தியையும், க்ஷேத்திர மாகாத்மியத்தையும் ஜனங்களுக்கு உபதேசம் செய்து வருகையில் மக நக்ஷத்திர புண்ணிய காலம் நேரிட்டது. நற்பயனையடைவதற்காக எண்திசையிலுள்ள ஜனங்களெல்லோரும் திரள் திரளாய் ராமேச்வர க்ஷேத்திரத்துக்கு வரும்பொழுது அத்தொண்டர்களின் கூட்டத்தைக் கண்டு களித்த அவ்வேதியன் அப்புண்ணிய காலத்தின் சிறப்பையும் க்ஷேத்திர மகிமையையும்

பரமேச சக்தியின் வைபவத்தையும் அவர்களுக்கு உபதேசம் செய்து வருகையில் அக்கூட்டத்திலிருந்து ஒரு நாஸ்திகன் கிளம்பி, "ஓ வேதியரே! இக்கலியுகத்தில் பரமேசனுடைய மகிமையை நாம் எப்படிக் காண முடியும்? முன் யுகங்களாகிய கிருதயுகத்திலும், திரேதா யுகத்திலும், துவாபர யுகத்திலும், பரமேசன் அற்புத சக்தியுடன் விளங்கியிருப்பதாய்ச் சில ரிஷிகள் கூறியிருக்கிறார்கள். யார் அவரது சக்தியைக் கண்ணால் கண்டார்கள்? அவரவர் புண்ணிய பாபங்களை ஈசனின் கருணை மாற்றுமா? கலியுகத்தில் இவ்வுலகிலுள்ள ஜனங்கள் அவரவர் தமது தலைவிதியை அனுபவித்தே தீரவேண்டும்; இப்படியிருக்க நீர் பரமேசனுடைய குணங்களைப் பலவிதமாய்ச் சொன்னாலும், அதை நான் நம்பமாட்டேன். அனுமானம் முதலிய மற்றப்பிரமாணங்களைக்காட்டிலும் பிரத்தியக்ஷ பிரமாணமே சிறந்ததல்லவா? அவ்விதமான பிரத்தியக்ஷ பிரமாணத்தினால் அறிய முடியாத பரமேசனின் குண கீர்த்தனையினால் நமக்குப் பயன் யாது?" என்று உரைத்தான்.

அதைக் கேட்ட திவோதாஸன் என்னும் வேதியன் அந்த நாஸ்திகனை அருகில் கூப்பிட்டு, "அடா! நீ நன்றாய் குருகுலவாஸம் செய்து சாஸ்திரங்களைக் கற்றிருந்தால் இவ்விதம் சொல்லமாட்டாய். ஒவ்வொரு சமயத்திலும் நமது கண்கள் காணும்படி பரமேசன் செய்து வரும் அற்புத லீலைகளை நீ இதுவரை கண்டதில்லையா? பரமேசன் அருளினால் பிரம்ம லிபியும் மாறி மேன்மையடைந்திருப்பவர்களை நீ கேட்டதில்லையா? பரமேசனுடைய கருணையினால் ஜனங்களின் திரளான பாபங்களும் தீயில் பஞ்சு போல் அழிந்துவிட்டதையும் நீ அறியவில்லையா? பசுபதியின் பாத பக்தியினால் இப் பூமியிலுள்ள இடர்களை நீக்கிக் கொள்ளலாம். அடையக்கூடாத பொருளையும் அடையலாம். சிறந்த செல்வத்தைப்பெறலாம்; பகைவரை வெல்லலாம்; மந்திரங்களைச் சாதிக்கலாம்; யாகங்களை முடிக்கலாம்; பாபங்களையொழிக்கலாம். மேன்மையை அடையலாம்; பரமேச பக்தியுடைய

வன் எவ்வுலகிற்கும் போகலாம்? தியாகராஜாவின் பக்தி யைப்பெற்றே நாரதர், பிருஹஸ்பதி, இந்திரன் முதலிய தேவர்களும் நன்மையையடைந்தார்கள். ஈசுவர பக்தியில்லா மையினுல் பல்கோடி தானவர் மாண்டார்களல்லவா? பர மேசனிடத்தில் பக்தி வைத்தவனை அடித்தாலும், நிந்தித்தா லும், மிதித்தாலும், எதிர்த்தாலும் எக்காலத்திலும் அப்பக் தர்களுக்கு எவ்விதத் துன்பமும் நேரிடாது. ஈசுவர பக்தர் களிடத்தில் அபசாரம் செய்தவர்களுக்கே கெட்ட பலன் உண்டாகும். சிவ பக்தியுடையவர்கள் ரத்தின தீபங்கள் போல ஒளி மழுங்காதவர்கள். கடல் போல கலக்கமுடியாத வர்கள். இப்படிப்பட்ட சிவ பக்தர்களை எவ்விதத்திலும் துன்பப்படுத்தலாகாது. நாம் நினைக்கும் ஒவ்வொரு வஸ் துக்களிலும் கடவுள் நிறைந்து விளங்குகிருர். மலைகளும், கடல்களும், பூமியும், வானும், தீயும், தண்ணீரும், வானவ ரும், தானவரும், மானவரும், பற்பல கோடி ஜீவராசிளும் ஈசன் உருவேயன்றி வேறு இல்லை'' என்று இவ்விதமாய்ப் பர மேசன் குணங்களைப் போற்றுகையில் அந்த நாஸ்திகன் அந்தத் திவோதாஸரைப் பார்த்து, "ஓ அந்தணரே! நீர் சொல்லிய வாறு சிவபக்தர்களுக்கும் அவ்விதச் சிறப்பு இருப்பது உண் மையாகில் அருகிலுள்ள இக்கடலின் ஜலத்தின் மீது நீர் இப்பொழுது நடந்து செல்வீரா?" என்ருன். அதைக் கேட்ட அவ்வந்தணன் வெகு சந்தோஷத்துடன், "நான் கடலில் நடந்துசெல்கிறேன். ஈசன் இருப்பது உண்மையாகில் அவரது மகிமை விளங்கும். இக்காரியம் அவரது பாரமேயா கும்" என்று பரமேச பாதகமலத்தை நினைத்துக்கொண்டு அந் தத்திவோதாஸன் இராமேச்வரக்ஷேத்திரத்தின் அருகிலுள்ள கடலில் இறங்கி வடதிசையை நோக்கினுன். பரம்பொருளின் தத்துவத்தையே நம்பிய அவ் வேதியன் மாயையையுடைய ஜனங்களுக்கும் தனது மகிமையை வெளிக்காட்ட வேண்டு மென்று முயன்று அவ்விதம் கடலில் இறங்கி தியாகேசன் அருளால் அக் கடல் ஜலத்தின் மேல் அவர் நடந்து செல்லலானுர். அவ்விதமாய்த் தண்ணீரின் மேல் நடந்து

செல்லும் அவ்வந்தணரைக் கண்டு அக்நாஸ்திகன் பயந்து மயிர்க் கூச்சலேயடைந்து ஈசனது அற்புத சக்தியைப் பற்றி மகிழ்ந்து அது முதல் தானும் அவ்வந்தணருக்குச் சிறந்த தொண்டனுனன்.

வேந்துறு வேண்மழுவாட் படையான் மணி மிடற்றனரையின்
ஐந்தலே யாடரவ மசைத்தா னணி யாநூர்ப்
பைந்தளிர்க் கோன்றையந்தார்ப் பரமனடி பரவப் பாவம்
நைந்தறும் வந்தணேயும் நாடோறு நல்லனவே.

—சம்பந்தர் தேவாரம்



## 85. தண்ணீரைத் தீபமாக்கிய லீலே.

தியாகேச பக்தனுகிய திவோதாஸன் இவ்விதமாய் ஈசுவர மகிமையை அக்நாஸ்திகனும் கண்டு களிக்கும்படி செய்து அவனுக்குப் பக்திப் பாலூட்டி நன்மையையடையச் செய்தான், என்னும் கீர்த்தியானது உலகெங்கும் பரவியபொழுது காஞ்சி நகரத்திலிருந்த மாத்தியம மதத்தோனும் ஜைன மதத்தோனும் தமது பொய் உபதேசத்தினுல் உலகிலுள்ள சிவதத்துவங்களே யழித்துக்கொண்டே தென் திசை வந்துத் திருவாரூரை யடைந்து அங்குள்ள ஜனங்களுக்கு மோகத்தைத் தோற்று வித்து உலக தத்துவத்தை உணர்த்துங்கால், "தானுமில்லே; ப்ரமாணமுமில்லே; இப்பிறப்பைக் காட்டிலும் நமக்கு இனி வீடு ஏது? குணங்களும் தம்மிடமே விளங்குகின்றன" என்று உபதேசம் செய்து ஈசுவர தத்துவத்தை மறைத்து, வேதங்களேயும், மகரிஷிகளின் கருத்தையும், யாகத்தையும். தர்ம சாஸ்திர முறைப்படி அனுஷ்டானம் செய்து வரும் வேதியரின் மகிமைகளேயும், மறைத்தும், பழித்தும் வந்தார்கள். இவ்வித துர்ப் போதனேகளேக் கேளாமல் முன்னுள்ளோர் வழியை மீருமல் திருவாரூரில் உள்ள பக்தர்கள் அனேவரும்

தியாகேசனைப் பணிந்தும், துதித்தும் வந்தார்கள். அந்த மாத்தியம மதத்தோனும், ஜைனமதத்தோனும் சைவ மதத்தை பலவாறு பழித்துக் கொண்டே வாதத்திற்கு முன் நிற்க முடியாமல் திருட்டுத்தனமாய்ச் சிலருக்குத் தமது துர்ப் போதனையை உபதேசம் செய்து வந்தார்கள். காஷாயத்தைத் தரித்துக் கொண்டு கலியின் உருவமெனத் தோன்றும் அப் புறச்சமயப் பாபிகள் சிற்சில சமயங்களில் சோழ நாடு எங்கும் சென்று தமது துர்மதக் கோட்பாடுகளையே சிறந்ததென்று வெளியிட்டு விட்டு சில காலம் திருவாரூரிலேயே நிலைபெற் றிருந்தார்கள்.

இவர்கள் இவ்விதமாயிருக்கையில் பெண்ணையின் தென் கரையில் பஹுபத க்ஷேத்திரத்தில் பரமேசனுடைய அம்ச மாய் அவதரித்த நந்தீசன் என்னும் தொண்டர் ஒருவர் பாலப் பிராயத்திலேயே பரமேச குண தத்துவங்களை அறிந்து அவைகளில் ஈடுபட்டு "பசுபதிக்குத் தொண்டு செய்வதே சிறந்ததாகும்" என்று நினைத்துச் சோணசலம், கனகஸபை முதலிய திவ்விய ஸ்தலங்களில் விளங்கும் பரம் பொருளைப் பணிந்து கண்ணீர் மல்கத்துதி செய்து புஷ்பமாலையளித்தும் தீபமளித்தும் தொண்டருக்கு அமுது அளித்தும், ஈசுவர தத்துவத்தைப் பிறருக்கு உபதேசித்தும் புறச்சமயப் பாபி களால் அழிக்கப்படும் தர்ம வழியை நிலைநாட்டியும் தேசங்கள் தோறும் சஞ்சரித்து வந்தார்.

அம்மாத்தியம மதத்தோனும் ஜைநமதத்தோனும் திருவா ரூரில் இருக்கும் பொழுது நந்தீசன் என்னும் இந்த சிவபக்தர் அந்தச் செல்வத் திருவாரூருக்கு வந்து அப்புறச் சமயப் பாபி களின் உபதேசங்களை மாற்றி ஸத்திய மதமாகிய சிவ மதத்தின் பெருமைகளை உபதேசித்து வருகையில் ஒரு நாள் அச்சிவயோகி தியாகராஜாவின் ஆலயத்தில் லக்ஷம் விளக்குகள் இடுவதாய் ஸங்கற்பம் செய்து கொண்டு அதற்குரிய ஸாமக்கிரியைகளைத் தேடிவருவதைக்கண்ட அம்மாத்தியமன் வஞ்சனைசெய்யக்கருதி

அந்நகரில் உள்ள தைலங்களையெல்லாம் தாமே வாங்கி விட்டு அச்சிவ பக்தரின் தீபகைங்கர்யத்தை பங்கப்படுத்த முயன்றான். மாலை நேரம் நெருங்கிய பொழுது அந் நகரில் எவ்விடத்திலும் எண்ணை, திரி முதலிய தீப ஸாமக்கிரியைகள் கிடைக்காமையால் மனக் கலக்கமடைந்த அந்த நந்தீசர் தான் செய்துகொண்ட ஸங்கற்பத்தை எவ்விதத்திலாவது நிறைவேற்றிவிட வேண்டும் என்று தியாகராஜாவைத் தியானித்துக் கொண்டே ஒவ்வொரு வீடுதோறும் சென்று தைல யாசனை செய்து வந்தார். கொஞ்சம் குறைவாய் லக்ஷம் தீபங்களுக்கு வேண்டிய சாமான்கள் கிடைத்து விடவே கொஞ்சம் மனக் களிப்பை யடைந்த நந்தீசர் ஈசனை மேன்மேலும் துதிசெய்துகொண்டே கொஞ்சமேனும் குறைவில்லாமலே லக்ஷ தீப காரியத்தைச் செய்து முடிக்கக் கருதி குறைவாகிய தீபங்களுக்கும் தைலங்களைச் சம்பாதிக்க எண்ணி ஒருவன் வீட்டில் நுழைந்தார்.

அவவீட்டிலுள்ளவன் அம்மாத்தியம மதத்தானுடைய துர்ப்போதனையினால் மனம் மாறியிருப்பதையறியாத நந்தீசன் "நமது தியாகராஜனுக்கு நான் ஏற்றப்போகிற லக்ஷம் விளக்குகளில் இன்னும் பதினொரு விளக்குகளுக்கு வேண்டிய எண்ணையை நீ அளிப்பாயா? அளித்தால் நன்மையைப் பெறுவாய்" என்றார். அதைக்கேட்ட அந்தக் கிருஹபதியானவன் "ஓ சிவ பக்தரே! நீர் உமது பரமேசனுக்குப் பலவிதமாய் மகிமையைக் கூறுகிறீரே! அவ்வித மகிமையுள்ள சிவபிரானுக்கு இடுவதில் குறைவாயுள்ள அப்பதினொரு விளக்குகளுக்கும் தண்ணீரை ஊற்றி எரிக்கக் கூடாதா?" என்றுரைத்தான். அதைக்கேட்ட அவர் மனவருத்தமடைந்து இனி நான் ஒருவரிடத்திலும் தைலயாசனை செய்யமாட்டேன். ஈசனுக்குத்திவ்விய சக்தி இருப்பது உண்மையாகில் அப்பதினொரு விளக்குகளும் தைலவிளக்குகள்போல் ஆகட்டுமென்று உரைத்துக்கொண்டே திரும்பித் தேவாலயத்தை நாடி மற்றுமுள்ள பக்தர்களைக் கொண்டும், தானும் தியாகேசன்முன்பு லக்ஷக்கணக்குள்ள விளக்குகளை வைத்து பக்தியுடன் பக்தர் அளித்த தைலத்தை

அவைகளில் ஊற்றியபிறகு அந்த நந்தீசர் தனது கையினுல் அக்குறைவான பதினொரு விளக்குகளிலும் தண்ணீரை ஊற்றி எரிக்க ஆரம்பிக்கையில் ஈசனை நினைத்தார். அப்பொழுது பரமேசன் அம்மகானுடைய கருத்தின் மேன்மையைக் கண்டு களித்து தமது ஏகாதச ருத்ர மூர்த்திகளின் அம்சமாய் அவ் விளக்குகள் பதினொன்றும் எரியும்படி ஸங்கல்பம் செய்தார். அத்தருணத்தில் நெய் விளக்குகளைக் காட்டிலும் தைல விளக் குகளைக் காட்டிலும் அந்த ஜல விளக்குகள் பதினொன்றும் தியாகேசனுடைய எதிரில் அழகிய ஜ்வாலையுடன் எரிந்து விளங்குவதைக் கண்டவர்கள் எல்லோரும் மெய் சிலிர்த்துப் பரமேசனைத் துதித்தார்கள்.

ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னுரகத் தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற் படுத்தான்
ஆரூர் நறுமலர் நாதனடித் தொண்ட னம்பி நந்தி
நீராற் றிருவிளக் கிட்டமை நீணு டறியு மன்றே.—அப்பர் தேவாரம்.



## 86. பிராணனை இழந்தவனுக்குப் பிராணனை அளித்த லீலை.

கரை கடந்த பக்தியுடன் நந்தீசர் இட்ட தண்ணீர்த் தீபம் எரியக்கண்ட அந்நிய மதத்தினர்கள் அஞ்சினர், மனநடுக்க முற்றனர். இவ்விதமாய் இவ்வூரில் ஈசனுடைய திவ்யசக்தி விளங்குகையில் "தமது மதத்தின் கோட்பாடுகளை இனி யாரும் கேட்கமாட்டார்கள்" என்று அவர்கள் அந்நகரை விட்டு வெளியில் சென்றனர். அது முதல் அநேக ஜனங்கள் அவ்வித பொய் மதத்திலிருந்து நீங்கி சைவ மதத்தையடைந்து ஸத்திய

ஸ்வரூபியாயும், துணையற்றவனுயும், எல்லோருக்கும் துணைவனுயும், கர்ம பல போகங்களையளிப்பவனுயும், ரஜோகுண மாயைகளையும் தமோகுண மாயைகளையும் அழிப்பவனுயும் விளங்கும் பரமேசனைப் பணிந்து, காமம், கோபம், பகை முதலிய துர்க்குணங்கள் நீங்கியவர்களாய் ஜனங்கள் எல்லோரும் சிவ பக்தியுடன் சிறந்து விளங்கினுர்கள்.

ஒரு நாள் அத்திருவாரூரிலிருக்கும் செல்வத்தோன் என்னும் வைசியன் ஒருவன் தனது வியாபாரத்துக்கு வேண்டிய பொருள்களைச் சம்பாதிக்க வேண்டுமென்று அளவற்ற திரவியத்தை எடுத்துக்கொண்டு தேசங்கள் தோறும் சென்று உயர்ந்த பொருள்களை வாங்கிக்கொண்டு திரும்புகையில் மத்திய நாட்டின் மத்தியில் பெருகும் பெண்ணைக் கரையில் ஒரு கிராமத்தில் சிந்துவாரன் என்னும் தட்டான் ஒருவன் பெண்ணையாற்றின் கரைக்கு வந்தான். அந்நதியின் கரையில் அத் திருவாரூரிலிருந்து வந்த செல்வத்தோன் என்னும் வைச்யன் பெண்ணை நதியின் வெள்ளத்தினுல் தடுக்கப்பட்டவனுய் அந்த நதியைத் தாண்ட உபாயம் ஒன்றும் அறியாமல் தவித்துக் கொண்டிருக்கையில், சிந்துவாரன் என்னும் ஸ்வர்ணகாரன் அவ்வைசியனைக்கண்டு யாரென்று விசாரிக்கவே அவனுடைய விருத்தாந்தங்களை அவன் சொல்லக் கேட்ட பிறகு தட்டான் மூலமாய்க்கொண்டு வரப்பட்ட படகில் ஏறிக்கொண்டு அவ்விருவரும் அப்பெண்ணை நதியின் வெள்ளத்தைக் கடந்து திருவாரூர் க்ஷேத்திரத்துக்குச்சென்றுர்கள். நடுவழியில் அவ் வைசியன் அந்த புண்ணிய க்ஷேத்திரத்தின் மகிமையையும் தியாகராஜப் பரம்பொருளின் அற்புத லீலாசாரங்களையும் சொல்லுகையில் அதைக் கேட்டு அப்படிப்பட்ட அம் மூர்த்தியைத் தரிசிக்க வேண்டுமென்னும் பேராவலுடன் அந்த ஸ்வர்ணகாரனும் செல்வத்தோனுடன் விரைவாய்க் கமலையையடைந்து ஸ்நானம் செய்து, ஆருத்திரா தினமாகிய அப் புண்ணிய காலத்தில் ஈசனுடைய வடிவழகைக் கண்டு பணிந்து துதித்த அத்தட்டான் இந்தத் தியாகராஜாவின் திருமுடிக்

கேற்ப ஒரு கிரீடத்தைச் செய்து அளிப்பேனாகில் எனது ஜன்மம் பயன்படும் என்றுரைத்தான்.

அதைக் கேட்ட அந்தச் செல்வத்தோனும் இந்தத் தியாக ராஜாவின் திருமுடிக்கேற்ப கிரீடத்தைச் செய்வதற்காக சிறந்த ஸ்வர்ணத்தையும், விலையற்ற நவரத்தினங்களையும் தான் அளிப்பதாக உரைத்தான். அதைக்கேட்ட அந்தச் சுவர்ண காரன் தனது கைத் திறமையினால் அக் நவரத்தினங்களால் தேவ கிரீடம் போல் அற்புதகரமாய் ஒரு கிரீடத்தைச் செய்து முடிப்பதாய் வாக்களித்தான்.

இவ்விதமாய் இவ்விரண்டு பக்தர்களும் ஒருவருக்கொருவர் வாக்குத் தானம் செய்துகொண்டு திருவாதிரை புண்ணிய காலத்தில் ஈசனைத் தொழுது விட்டு அச் செல்வத்தோன் வீட்டுக்குச் சென்றார்கள். அந்த வைசியச் செல்வனால் அளிக் கப்பட்ட நவரத்தினங்களையும், சுவர்ணத்தையும் பெற்றுக் கொண்டு அந்தச் சிந்துவாரன் அந்த நிமிஷம் முதல் கிரீடவேலை செய்ய ஆரம்பித்தான். "சதுர்ப்பிரதி" என்னும் பெயரை யுடையதாயும், தேவர்களுக்கும் வியப்பை உண்டு பண்ணக் கூடியதாயுமுள்ள அந்த ரத்தின கிரீடத்தை வெகு அழகாய் செய்து முடித்து அந்தச் செல்வத்தோன் மூலமாய் தியாகே சனுக்குச் சிறந்த ஓர் உற்சவத்தைச் செய்து அவ்வுற்சவ தினத் தில் அந்த ரத்தின கிரீடத்தைத் தியாகராஜனது சிரஸில் சூட்டினார்கள்.

அக் கிரீடத்தில் பதித்து இருக்கும் நவரத்தினங்களின் காந்தியினால் தியாகேசனது முகம் துளிர் விட்டது போலும், கமலத்தை யடைந்த வண்டுகள் போலவும் வெகு அழகாய் விளங்கிற்று. அந்தக் கிரீடத்தின் சிறந்த வேலைகளையும், அது அமைந்து இருக்கும் முறையையும் கண்டு ஸகல ஜனங்களும் ஸந்தோஷத்தை யடைந்து அந்தக் கிரீடம் செய்வதற்குப் பொருள் அளித்த செல்வத்தோனையும், கிரீடத்தை வெகு அழகாய் செய்து முடித்த தட்டானையும் புகழ்ந்து போற்றி

னர்கள். இவ்விதமாய்ச் சிந்துவாரன் என்னும் சுவர்ணகாரன் தேவ கிரீடமெனும் அவ்வித கிரீடத்தைச் செய்து முடித்து பிரபுவுக்கு அளித்தான் என்னும் விஷயத்தைக் கேட்ட பாண்டிய மகாராஜனும், கேரள மகாராஜனும் "தமது நகரில் விளங்கும் பிரபுவுக்கும் இவ்வித சித்திர சகிதமான ரத்தின கிரீடம் ஒன்று செய்வாயா ?" என்று மந்திரிமார்கள் மூலமாய் அந்தச் சிந்துவாரனுக்கு அறிவித்தார்கள்.

அம்மந்திரிகள் கூறிய உரையைக் கேட்ட சிந்துவாரன் தியாகராஜப் பிரபுவுக்காக வேலை செய்த இந்தக் கையினால் மற்ற தெய்வத்துக்கும் மற்ற அரசர்களுக்கும், மற்ற தனவான்களுக்கும் நான் வேலை செய்யமாட்டேன். ஆகிலும் தான் உயிருடனிருந்து இவ்விதமாய்ப் பிறருக்கு வேலை செய்ய மாட்டேன் என்று உரைத்தால் விரோதம் நேரிடும். ஆகையினால் நான் இனி உயிருடன் இருக்கலாகாதென்று நிர்ணயம் செய்துகொண்டு அவ்விடத்தில் நின்று கொண்டிருந்தபடியே தனது கையில் பிடித்திருக்கும் ஒரு உளியினால் தனது மார்பைத்தானே பிளந்து கொண்டு, "தியாகராஜ! நான் உமது ஒருவருடைய திருமேனி வடிவழகுக்கே ஈடுபட்டும், உமது ஒருவருடைய பாதமே சரணெனப் பற்றியும், உம்மிடத்திலேயே பக்தி வைத்தும் இருப்பது உண்மையாகில் எனக்கு நற்கதியளிக்க வேண்டும்" என்று நினைத்துக் கொண்டே உயிரை விட்டான்.

அத்தருணத்தில் யமனும், யமபடர்களும் சேர்ந்து முறையிட்டு அலறிக்கொண்டு தியாகேசன் ஸன்னிதானத்தில் வந்து வணங்கி, ஓ பரம் பொருளே ! உமது பக்தனாகிய இந்தத் தட்டானுக்கு இன்னும் வயது முடியவில்லையே. வயது முடிவதற்குள் அவனது உயிர் என்னிடம் வருகிறதே ! இவன் செய்த பாபமெல்லாம் பக்தியினால் நாசத்தை யடைந்தன. இவனது உயிரைத் திருப்பியளிக்க வேண்டுமே ! என் செய்வோமென்று முறையிட்டார்கள், அப்பொழுது தியாகேசன் கருணை

கூர்ந்து ஆகாய வாணியாய், "ஓ சிந்துவார! நீ நமது பக்தரில் சிறந்தவன். நீ இவ்விதமாய் அகாலத்தில் உயிரை விடலாகாது. மறுபடியும் உனது உயிரைப் பெற்றுக் கொண்டு சில நாள் பூவுலகிலேயே இருந்து பூலோக சரீரத்தைக் கழித்து விட்டுப் பிறகு நமது பதவியை யடையலாம்" என்று உரைக்கையில் அந்தச் சிந்துவாரனுக்கு மறுபடியும் உயிர் வந்தது. இதைக் கண்ட மந்திரிமுதலியோர் வியப்படைந்தார்கள்.



## 87. தொண்டனுக்காகச் சிறையுண்ட லீலை.

சிந்துவாரன் என்னும் தட்டானானவன் தியாகராஜனுக்காக கிரீடம் செய்த தனது கையினல் மற்றவருக்குச் செய்ய மாட்டேன் என்று உறுதி கூறி உயிரை யிழந்தும், அந்தத் தியாகேசன் அருளினல் மறுபடியும் உயிர் பெற்று விளங்கு கிருன் என்னும் இவ்வித அற்புத விருத்தாந்தமானது அம் மந்திரிகள் மூலமாய் எண் திசைகளிலும் பரவிய பொழுது சகல ஜனங்களும் ஈசுவர பக்தியினல் விளங்கினவர்களாய் தந்தமது விருப்பங்களை அடைந்து வந்தார்கள்.

அத்தருணத்தில் சோணசலத்தில் நெடு நாள் வரையில் யோகம் செய்து ஸித்தஸமாதியைப்பெற்ற ருருகேசன் என்னும் ஒரு பிராமணேத்தமர் தென் திசையில் விளங்கும் திவ்விய க்ஷேத்திரங்களை யடைந்து அங்கங்கு விளங்கும் இலிங்க ஸ்வ ரூபிகளைத்தரிசித்து ஈசுவரதத்துவத்தைப் பக்தர்களுக்கு உபதேசித்துக் கொண்டு செல்லுகையில் ஈசுவர பக்தியை யடையாத சில துஷ்டர்கள் ஒன்று சேர்ந்து ஆலோசித்து அவ்வேதியனை எவ்விதத்திலாவது பங்கப் படுத்த வேண்டு மென்று நினைத்து அவரிடம் வந்து வணங்கி அவரது சிஷ்யர் போலவே அவரிடம் நிலைபெற்றிருந்தார்கள்,

அப்படியிருக்கையில் சிற்சில சமயங்களில் அவ்வேதியன் திரிபுரஸம்ஹார மூர்த்தி விஷயமாயும், மார்க்கண்டேய மூர்த்தி விஷயமாயும், காலகண்ட மூர்த்தி விஷயமாயும் சிறந்த வைபவங்களையும், தத்துவங்களையும் தமது உண்மையான பக்தருக்கு உபதேசித்து வரும் சமயத்தில் அந்தப் பொய்யான பக்தருக்கு மனம் நொந்து பெருமூச்சும் ஆயாஸமும் உண்டாகும். இவர்கள் இவ்விதமாய் அற்புத விபவங்களைக் கேட்டு ஆனந்தப் படாமல் இருக்கும் சிற்சில அடையாளங்களைக் கண்டு இப் பொய்யான சீடர்களின் இயல்பை அறிந்து கொண்டு அவ் வேதியன் ஸகல மாயைகளையும் அழிக்கவல்ல பரமேசனே துணையென்று நம்பிக் கொண்டு அவர்களைத் தம்மிடமிருந்து ஓட்ட முடியாமல் கிராமங்கள் தோறும் சென்று தத்துவோபதேசம் செய்து கொண்டே திருவாரூர் நகரத்துக்குச் சமீபமாய்ச் செல்லுகையில், அப்பொய்யான சிஷ்யப் பாபிகள் அவ்வேதியனை யழிக்கக்கருதி சமயத்தைத் தேடிக் கொண்டிருந்தமையால் திருவாரூருக்குச் செல்லும் வழியில் ஒரு காட்டில் சில திருடர்கள் அபகரித்த பொருளை வைத்திருக்கும் இடத்தைக் கண்டு பிடித்து அவர்களில் ஒருவன் அப் பொருளில் சிலவற்றை எடுத்துக் கொண்டே அவ் வேதியனது சிஷ்யக் கூட்டத்தில் சேர்ந்து வந்தான். இவ்விதமாய் அப் பொய்யான சிஷ்யரில் ஒருவன் திருடர்கள் வைத்திருந்த பொருள்களில் சிலவற்றை எடுத்துக் கொண்டு தம்முடன் வருவதை யறியாத அவ்வேதியன் ஆநந்தக் கண்ணீர் மல்கும்படி ஈசகுணங்களைப் பாடி எழுந்து துள்ளிக் கொண்டு தமது பக்த கூட்டத்துடன் திருவாரூரை யடைந்து, தியாகேசனை அந்த குருகேசன் பணிந்து ஜன்மப் பயனை யடைந்து விளங்குகையில் அப்பொய் சிஷ்யராகிய பாபிகளால் அவ்வேதியனே திருடன் என்று அறிவிக்கவே அப்பொருள்களை யிழந்தவன் அவ்வேதியன் அருகில் வந்து அவரது சிஷ்யர்களை ஒவ்வொருவராய்ச் சோதித்து வருகையில் அப்பாபிகளில் ஒருவனிடத்தில் சில பொருள்கள் இருக்கக் கண்டு அவ் விஷயத்தை குருவினிடத்தில் அறிவித்தார்கள்.

அதைக் கேட்ட அவ்வேதியன் திடுக்கிட்டு இதென்ன சம்பவம் என்று சிந்தித்து இருக்கையில் அப்பாபிகள் எல்லோரும், "இவ்வேதியனே ஞான திருஷ்டியினல் பொருள் களுள்ள இடத்தைக் கண்டு பிடித்து அப்பொருள்களை எங்களிடம் அளித்து இருக்கிருர். நாங்கள் எதையும் அறிய மாட்டோம்" என்று உரைத்தார்கள். இவ்வித வஞ்சனை மார்க்கங்களையறியாத அவ்வேதியன், "தியாகேசா! நீயே கதி. திடீரென்று குற்றமற்ற நம்மீது இவ்வித பழி வந்துவிட்டதே" என்று மனம் கலங்கி நிற்கையில் அப்பொருள் படைத்தவன் மன்னவனிடத்தில் இவ்வித அநியாயத்தை அறிவித்தான். மன்னவனுல் அழைக்கப்பட்ட அவ்வேதியரும் அவரது சிஷ்ய மண்டல முழுவதும் அரசன் எதிரில் நிற்கும் பொழுது அவர் களுடைய தோற்றத்தைக்கண்டு, "இவர்கள் இவ்விதத் தப்பு செய்வார்களா? அல்லவா?" என்று உண்மையை நிர்ணயிக்க சக்தியற்றவனுய் அம்மன்னவன் தனது குல தெய்வமாகிய தியாகப் பொருளையே நம்பி சாக்ஷியின் ஆதாரத்திஞல் அவ் வேதியனைச் சிறையிலிடுவதாய் தீர்மானம் சொல்லுகையில் சிறைச்சாலையதிகாரிகள் சிலர் ஓடிவந்து, "ஓ சோழ மன்ன வனே! நமது சிறைச் சாலையில் திடீரென்று இவ் வேதியன் உருவம் போன்ற மற்ருெருவ வேதியன் நிற்கிருனே; அவன் எவ்வித குற்றம் செய்தவன்; அவன் எவ்வளவு நாள் சிறையில் இருக்க வேண்டியவன்; அவனுடன் எவ்வித அதிகார வாசகமும் வரவில்லையே" என்று கேட்கையில் மன்னவன் முதலானவர் வியப்படைந்து சிறைச் சாலைக்குத் தாமே சென்று பார்த்து குற்றம் சாட்டப்பட்ட இவ் வேதியனுக்கும் சிறைச் சாலையில் தங்கியிருக்கும் அவ் வேதியனுக்கும் எவ்வித மாறுபாட்டையும் காணுதவர்களாய் அவ் வேதியனை விடுவித்து அப்பாபிகளைச் சிறையில் அடைத்தார்கள்.

பொள்ள லிவ்வுடலைப் பொரு ளென்று
பொருளுஞ் சுற்றமும் போகமு மாகி
மெள்ள நின்றவர் செய்வன எல்லாம்
வாராமே தவிர்க்கும் விதியானை

வள்ள லெந்தமக்கே துணை யென்று
நாளுளும் மமரர் தொழ தேத்தும்
அள்ளலங் கழனிப் பழனத் தணி
யாநூரானை மறக்கலு மாமே.

—சுந்தரமூர்த்தி தேவாரம்.



## 88. கடன்காரனைக் காத்த லீலை.

தொண்டருக்குத் துன்பம் நேரிட்டசமயங்களில் தியாகராஜன் இவ்விதமாய் அவர்களின் இடரை நீக்கி உலகைக் காத்து வருகிறாரென்னும் பெருமை வாய்ந்த ஞானக் கொழுந்துக்குத் தொண்டு செய்வதே சிறப்பென்று நினைத்து பத்மாக்ஷன் என்னும் சோழ ராஜனுடைய கோசக்காரன் ஒருவன் தினந் தோறும் தியாகேசனுக்கு அற்புதகரமாய்ச் சிறந்த அபிஷேகம் செய்து வைத்தல், ஒரு தினத்தில் முக்தாபரணங்களினால் அலங்கரித்தல், மற்றொரு தினத்தில் வைடூரிய ரத்தினாபரணங் களினால் அலங்கரித்தல், மற்றொரு தினத்தில் புஷ்பராக ரத்தினாபரணங்களால் அலங்கரித்தல், இம்மாதிரியாக மற்ற ரத்தினாபரணங்களினாலும் அலங்கரித்தல், மற்றோர் சமயம் வெண்பட்டுக்களினால் அலங்கரித்தல், செம்பட்டுக்களால் அலங் கரித்தல், புஷ்பங்களால் அலங்கரித்தல், சந்தனத்தால் அலங் கரித்தல் முதலான பற்பல அலங்காரங்களைச் செய்து வைத்துப் பிரபுவின் திருமேனி வடிவழகைக் கண்டு இமை கொட்டாக் கண்ணால் காணும் தேவத் தன்மையை யடைந்து, மற்றுமுள்ள பக்தர்களுக்கு ஈசுவரனுடைய கோலத்தையும், திருமேனி வடிவழகையும் கண்டு களிக்கச் செய்து பக்தியையும் ஆனந் தத்தையும் அடைந்து கொண்டிருந்தான்.

இவ்விதம் ஈசன் விஷயமாய் அந்தப் பத்மாக்ஷன் என்னும் கோசாதிகாரி நாளடைவில் சோழ ராஜ்யச் சக்கிரவர்த்தியின் பொக்கிஷச் சாலையிலிருந்து லக்ஷக்கணக்கான திரவியங்களை எடுத்துச் செலவு செய்து விடவே ஒரு நாள் மந்திரி முதலானவர்கள் தமது திரவியச் சாலையில் அளவற்ற பொருள்கள் குறைந்திருப்பதை அரசனிடம் அறிவித்தார்கள். மகாராஜனால் விசாரிக்கப் பட்ட அந்தப் பத்மாக்ஷன் அரசனுடைய உத்தரவு இல்லாமல் இருக்கும் பொழுது தானே அவ்வளவு திரவியங்களையும் தியாகராஜாவினுடைய திருமேனிக்குச் சிறப்பாகச் செலவு செய்து விட்டதாய் ஒப்புக்கொண்டு அவ்வளவு திரவியங்களையும், சில மாதங்களில் கொடுத்து விடுவதாய் வாக்களித்தான்.

அதைக் கேட்ட அம்மன்னவனும் மந்திரிமாரும் "அப்படியே செய்வாய்" என்று அனுப்பிவிட்டார்கள். கருணை கூர்ந்து அவர்களால் விடுவிக்கப்பட்ட பத்மாக்ஷன் அதிகாரத்திலிருந்து விலகி அந்தத் திருவாரூரிலுள்ள ஒவ்வொரு புண்ணியவானுடைய வீட்டிலும் சென்று தனது கடன் நீங்குவதற்காக பொருளை யாசிக்கலானான். அப்பொழுது அவ்வண்ணமாய் வந்த அந்தப்பத்மாக்ஷனைக்கண்ட அந்நகரத்தார் மனம் நொந்து தியாகராஜப் பரம்பொருள் விஷயமாய் இவன் லக்ஷக்கணக்காய் செலவிட்ட பொருள்களை எவ்விதத்தில் மறுபடியும் சம்பாதித்து மன்னனுக்கு அளிக்கப்போகிறானென்று விசனமுற்று தம்மால் கொடுக்கக் கூடிய திரவியங்களை அன்புடனும், பக்தியுடனும் அளிக்கத் தொடங்கினார்கள்.

அந்தச் சோழநாட்டிலுள்ள பாலர்முதல் கிழவர் வரையில் ஸகல ஜாதியரும் அப்புண்ணிய சீலனைக் கடனிலிருந்து நீக்க வேண்டுமென்று ஆறு மாத காலம் வரையில் முயற்சி செய்து திரவியங்களை அளித்து வந்தார்கள். அப்பொழுதும் அவன் கொடுக்க வேண்டிய கடனில் நான்கில் ஒரு பங்கும் பூர்த்தியடையாமல் இருந்ததைக் கண்டு ஜனங்கள் எல்லோரும் திகிலே

யடைந்து விசனத்துடன் ஈசனைத் துதி செய்யத் தொடங்கினார்கள். இவ்விதமாய் பரோபகாரத்துக்காக முயற்சி செய்யும் அச்சோழ நாட்டு ஜனங்களின் மீது கருணை செலுத்திய தியாகேசர் கடன்காரனாகிய பத்மாக்ஷனுடைய சொப்பனத்தில் ஒரு நாள் தோன்றி, "ஓ பக்த! நீ சோழ ராஜனிடமுள்ள திரவியங்களை எனது மேனியின் சிறப்புக்காக செலவு செய்ததைப்பற்றி நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். இவ்வழியால் உனக்கு நேரிட்ட கடனைத் தீர்க்க வேண்டுமென்று நீ முயற்சி செய்வதைக் காட்டிலும், உன்னிடத்தில் அன்பு வைத்த மகானுபாவர்களின் தோத்திரமானது என்னைக் கண்ணுறங்கா வண்ணம் எழுப்புகிறது. ஆகையால் நீ நாளைக் காலையில் சூரியன் உதிக்கு முன்னமே நமது காவிரி யாற்றின் நாரதக் கட்டத்தினருகில் இருக்கும் திரவியப் புதையலை எடுத்துவந்து உனது அரசனுக்கு அளித்து விட்டு கடனிலிருந்து நீங்கி நமது பக்தியினால் சிறந்தோங்கி வாழக் கடவாய்" என்று உரைத்தார்.

அதைக் கேட்ட அந்த பக்தனும் கண் விழித்து ஈசன் தனது கனவில் உரைத்ததைப் பற்றி நினைத்து நினைத்து ஆச்சரியப்பட்டு விடியற் காலத்தில் அவ்வண்ணமே காவிரிக் கரையையடைந்து தேடிப்பார்க்கையில் அங்குள்ள புதையலைக் கண்டு களித்து அவைகளையெல்லாம் எடுத்து வந்து அரசனுக்குக்கொடுத்து தனது கடன் நீங்கியதாகச் சொல்லுவாய் என்றுரைத்தான். அதைக் கேட்ட அம்மன்னவன் வியப்படைந்து அவனை வெகு சிறப்புடன் கொண்டாடி வணங்கி, "நீ ஈசுவர விஷயமாய் செலவிட்டபடியால் நான் உன்னை முன்னமே கடன் இல்லாதவனாகச் செய்துவிட்டேன். ஆகையால் ஈசன் அளித்த இந்தத் திரவியங்களையெல்லாம் நீயே எடுத்துக்கொள்" என்று மொழிந்தான். அதற்கு அந்த கோசக்காரன் சம்மதிக்காமல் "அப்பொருள்களை நீரே பெற்றுக் கொள்ளவேண்டு"மென்று கூறினான். இவ்விதமாய் அவ்விருவர்களும் தந்தமது பிடிவாதத்தைக்கைவிடாமல் பேசிக் கொண்டிருக்கையில் ஈசனுடைய

ஆகாயவாணியினலவர்கள் இருவரும் ஆனந்தமடைந்து அப் பொருள்களை ஏழையாயுள்ள பக்தருக்குச் செலவு செய்வதற் காக ஏற்படுத்திக் கொண்டு சிறந்த தியாகராஜ பக்தியுடன் விளங்கினர்கள்.



## 89. குருபத்தினியின் குற்றத்தை வெளியிட்ட லீலை.

அர்ச்சுனவனத்திலிருக்கும் ஸதாசிவன் என்னும் பெயருடைய ஒரு குருவானவர் தமது சிஷ்யர்களுக்குப் பாலப்பிராயம் முதல் வேதம் லக்ஷணம் இவைகளைக் கற்பிப்பதுடன் ஈசுவர மகிமையையும் உபதேசித்துக் கொண்டு வரும் நாளில் திருவா ரூர் திருப்பதிக்கு வியாஸமாமுனிவர் வந்திருப்பதாய் அறிந்து அவரைப் பணிந்து அவரிடமிருந்து பாரதப் பொருளின் பான்மையை யறிந்து கொள்ளலாமென்று நினைத்துத் தமது சிஷ்யர்களில் ஒருவனுகிய தீக்ஷணபுத்தி என்பவனைத் தனது மாளிகைக்குக் காவலாக ஏற்படுத்தி விட்டு மற்ற சிஷ்யர் களுடன் புண்ய புரத்திற்குச் சென்றூர். குருவின் கட்டளை யைச் சிரஸில் ஏற்றுக்கொண்டு தீக்ஷணபுத்தி யென்னும் சிஷ்யன் தனது குருவின் மாளிகையிலுள்ள மான், பசு, கிளி முதலிய ஜீவ ஜந்துக்களையும், குருவின் மகளையும், குருவின் மனைவியையும் தாய் போலும், சகோதரி போலும் மக்கள் போலும் நினைத்துப் பாதுகாத்து வந்தான். அப்பொழுது ஸதாசிவ குருவானவர் வெளியூருக்குச் சென்றிருக்கிறரென் னும் விஷயத்தை யறிந்துகொண்ட ஒரு துஷ்டன் ஒரு பெண் போல் வேஷத்தை யணிந்து கொண்டு அக் குருபத்தினியின்

அருகில் வந்து உறவு உடையவன் போல் பல விஷயங்களைப் பேசிக் கொண்டு இரண்டு மூன்று நாள் வரையில் அக்குருவின் மாளிகையில் தங்கியிருந்து, போகும் சமயத்தில் "அந்தத்தீக்ஷண புத்தி என்னும் சிஷ்யன் உன் மகள் மீது மையல் கொண்டிருப்பதுபோல் காணப்படுகிறான்" என்று பொய்யுரைத்து விட்டு வெளியில் சென்றான்.

அந்தத் துஷ்டன் இவ்விதமாய்ப் பெண் உருவத்தை யணிந்து குற்றமற்ற சிஷ்யன் மீது பொய்யுரைத்ததை யறியாத அக்குரு பத்தினியானவள் அதுமுதல் அந்தச் சிஷ்யன் மீது கடுஞ்சினம் கொண்டு அவன் முகத்தைப் பாராமலும், அவனுக்கு எவ்வித வேலையை யளிக்காமலும், அவனால் செய்யப்பட்ட எவ்வித காரியங்களையும் ஏற்றுக் கொள்ளாமலும், அவனைப் பலவாறு நிந்தித்தும், குருவின் மீது பலவாறு கோபித்தும், உண்ணாமலும், உறங்காமலும் காலத்தை வீணாகக் கழித்துக் கொண்டு வெகு துக்கத்துடன் முகம் வாடி குரு வரும் வழியையும், காலத்தையும் எதிர்பார்த்திருந்தாள்.

இவ்விதமாய் குரு பத்தினியானவள் எவ்வித காரணமுமில்லாமல் தன்னிடத்தில் கடுஞ்சினம் கொண்டிருப்பதைக் கண்ட அந்தச் சிஷ்யன் இரண்டு மூன்று நாள் வரையில் பொறுத்துக் கொண்டிருந்தான். குரு பத்தினியின் பாதாரவிந்தத்தில் வீழ்ந்து பணிந்து "நான் எவ்விதக் குற்றத்தையும் மனதினாலும் செய்யவில்லையே; இதற்குக் குருவின் பாதமே ஸாக்ஷி. அவ்விதம் நான் ஏதாவது குற்றம் செய்திருந்த போதிலும், பொறுத்தருள வேண்டும்" என்று வணக்கமாய்க் கேட்டுக் கொண்டான். இவ்விதம் பிரார்த்தித்தும் அக்குரு பத்தினியானவள் தனக்கு உண்டாகிய கோபத்தை யடக்காமல் மேன்மேலும் பலவாறு சிஷ்யனையும் குருவையும் நிந்தனை செய்தாள். இதைக் கண்ட அந்தச் சிஷ்யன் மன நடுக்கத்தை யடைந்துவிசனமுற்று, "நான் குருவினிடத்தில் வைத்திருக்கும் பக்தி உண்மையாயின், நான் ஓதிய வேதங்கள் ஸத்தியமாய் இருக்குமாயின், அவ்வேதங்களுக்குப் பொருளாய் நிற்கும்

தியாகேசன் பக்தரக்ஷகராய் விளங்குவது உண்மையாயின், மனுஷ்யர் செய்யும் ஒவ்வொரு பாப புண்ணிய காரியங்களுக்கும் பஞ்சபூதங்களும் சூரியனும் சந்திரனும் ஸாக்ஷியாயிருப்பது உண்மையாயின் எனது ஸத்திய நிலைமை வெளியாக வேண்டும். இன்னும் இரண்டு முகூர்த்த நேரத்துக்குள் எனது ஸத்திய நிலைமை வெளியாகாவிடில் குருவின் மூர்த்தியையும், தியாகராஜாவின் பாத கமலத்தையும் நினைத்துக் கொண்டே அக்னி குண்டத்தில் வீழ்ந்து இறப்பதே நலம்'' என்று நினைத்து மனம் நொந்து வாடிநின்று வேண்டிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது திருவாரூரிலிருக்கும் அந்தச் சதாசிவ குருவுக்குத் திடீரென்று சரீரம் நடுக்கமுற்றது. பெருமூச்சும் மனக்கொதிப்பும் ஆயாசமும் உடம்பில் வெப்பமும் உண்டாயிற்று. வியாஸ முனிவர் உபதேசிக்கும் தத்துவங்களும் மனதில் படியாமல் போகும்போது இவ்விதத் தோற்றத்துக்குக் காரணம் யாது என்று அக்குரு ஈசனை நினைத்து மனம் வாடுகையில், தியாகராசன் அசரீரி வாக்கினால் ''ஓ குரு சிரேஷ்டரே! உமது ஆச்ரம மாளிகையில் ஒரு துஷ்டனுடைய கலகப் பேச்சினால் உமது தர்ம களத்திரம் குற்றமற்ற சிஷ்யன் மீது சினங்கொண்டு அவனைப் பழித்தாள். அதனால்அவன் மனத் துயரத்தை யடைந்திருக்கிறான். ஸதாசாரமுடையவர்களாயும், ஈசுவர பக்தி யுடையவர்களாயும், ஸாதுக்களாயுமுள்ளவர்களின் மனம் வாடுமாயின் அப்பொழுதே எனக்கும் மனம் வாடி உடம்பு வெதிர் வெதிர்த்துத் தாபமுண்டாகிறது. இப்படியிருக்க உமக்குச் சொல்ல வேண்டுமா'' என்று கூறிவிட்டு, அச் சிஷ்யனிருக்கும் இடத்திலும் அசரீரியாய் ''ஓ பக்த! நீ குற்றமற்றவன். துரிதப்பட்டுப் பழிக்கு அஞ்சி உன் உயிரை மாய்க்காதே. சற்று நேரத்திற்குள் உன் சமீபத்தில் உனது குரு தோன்றப்போகிறார். அப்பொழுது உனதுமேன்மை விளங்கப் போகிறது'' என்று உரைத்து விட்டுத்தியாகேசர் ஸுகாஸனத்தில் வீற்றிருந்து விளங்கினார்.

வியாஸ முனிவரிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பிய ஸதாசிவ குருவும் தனது ஆச்ரமத்திற்கு வந்து ஸத்சிஷ்யனை ஆசீர்வதித்து அவனது மேன்மையைப் பற்றிப் புகழ்ந்து, கலகத்தைக் கேட்டுக் கொண்டு பழி கூறிய தனது மனைவியை யிகழ்ந்து ஸ்திரீ ஜனங்களுக்குரிய துஷ்டத்தன்மையைத் தமது சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து ஈசுவர பக்தியின் மேன்மையையும், ஸம்ஸாரத்திலுள்ள இகழ்ச்சிகளையும் எடுத்துக் கூறி ஈசனைத் துதி செய்து கொண்டே காலத்தைக் கழித்து வந்தார்.



## 90. தொண்டனுக்காக வெளியில் ஓடிய லீலை.

குற்றமற்றவனும், பக்தனுமுள்ள அந்தச் சூக்ஷ்ம புத்தி என்னும் சிஷ்யன் மீது கலகப் பேச்சினால் அந்த குரு பத்தினியானவள் மாறாக நினைத்த குற்றத்தைத்தியாகராஜன் இவ்விதமாய் ஆகாய வாணி மூலம் வெளியிட்ட அதிசயத்தைக் கேட்ட ஸகல தொண்டர்களும் ஆச்சரியமடைந்து அது முதல் தர்ம வழியை மீறாமலும், பிறர் மீது பழி சொல்லாமலும், பிறர் மாதை மனதினாலும் விரும்பாமலும், பஞ்ச பூத பிராணிகளெல்லாவற்றையும் ஸமமாக நினைத்து உலக முழுமையும் ஈசனது அம்சமே யாகுமென்னும் சிறந்த சிந்தையுள்ளவர்களாய்த் தியாகராஜ பக்தியினால் எவ்வித இடருமின்றி வாழ்ந்துவந்தார்கள். அந்நாளில் சார்வாக மதத்தின் குருவும், பிரபாகர மதத்தோனும் தமது ஆயிரம் சீடர்களுடன் திருவாரூருக்கு வந்து சிவமதத்தைப் பலவாறு பழித்து "தம்முடன் சாஸ்திர வாதம் செய்வதற்குத் தக்கவரிருந்தால்

வாருங்கள். எங்களுடன் வாது செய்வீர்கள்; நான்கு சாஸ்திரங்களின் பிரமாணங்களாலும், யுக்திகளாலும் எங்களுடன் வாது புரிவீர்கள். இந்த வாதத்தில் நாங்கள் ஜயத்தை யடைந்தால் இன்று முதல் இத் திருவாரூரிலுள்ள ஸகல ஜனங்களையும் எங்கள் மதஸ்தர்களுடன் சேர்த்து விடுவோம். இத் திருவாரூரிலுள்ள தியாகராஜ மூர்த்தியையும் அழித்து, எங்கள் தெய்வத்தை நிலை நாட்டுவோம்" என்று இவ்விதமாய் முரசடித்துக் கொண்டு அத் திருவாரூரிலிருக்கும் சோழ நாட்டரசனையும் மயக்கி தமது கருத்துக்கு இணங்கச் செய்து வலுவில் வாதப் போர் செய்யத் தொடங்கினார்கள்.

அந்த அற்பப் புறச் சமயத்தாரின் வாயை யடக்கவல்லவர்களாயும், ஸகல சாஸ்திரங்களின் எல்லையை யறிந்தவர்களாயுமுள்ள பண்டிதர்கள் அத் தருணத்தில் அச்சோழ நாட்டிலிருந்து காசி நகரத்துக்குப் போயிருந்தபடியால் அவ்விஷயத்தை யறிந்த அவ்வாதியர்களுக்குக் கர்வம் இன்னும் அதிகமாயிற்று. அவர்களின் வாதக்கொழுப்பைத் தம்மால் இயன்ற வரையில் அழிக்கக் கருதிய சில வித்துவான்கள் அநேக நூல்களையெடுத்துக்கொண்டு வந்து அவர்களை எதிர்த்து இருபத்தொரு நாள் வரையில் வாதம் செய்து வந்தார்கள். கடைசி நாட்களில் அந்த எதிர்வாதிகள் சோழநாட்டுப் பண்டிதர்கள் கூறும் பிரமாண வசனங்களின் மீது துஷ்ட யுக்திகளைக் கூறி அவைகளைக் கண்டித்துப் பலவாறு சிவமதத்தைத் தூஷித்து வருவதைக் கண்டு அவர்கள் சற்றுப் பயந்து ஈசனைத் துதி செய்தார்கள். அவர்களில் சிலர் காசிக்குச் சென்றிருக்கும் அச் சிறந்த வித்வான்களை வெகு சீக்கிரமாய் புண்ணியபுரத்துக்கு அழைத்து வாருங்கள் என்று குதிரை வீரர்களை அனுப்பினார்கள்.

இவ்விதமாய்ச் சகல பக்தர்களுக்கும் மனக் கலக்கத்தை யுண்டுபண்ணக்கூடியதாய் வெகு ஆடம்பரங்களுடன் அப்புறச் சமய வாதிகள் நாள் தோறும் துர்யுக்திகளைக் கூறி தத்துவ ஞானமுள்ள பண்டிதர்களின் வாதத்தை வலுவில் அடக்க

ஆரம்பித்த பொழுது, 'காசியிலிருக்கும் வித்வான்கள் வரவில்லையே' என்று புண்ணியபுரத்துத் தொண்டர் எல்லோரும் பயந்து நடுங்கிப் பெருமூச்சு விட்டு அலறிக் கொண்டிருக்கையில், அந்நகரிலுள்ள திருடிநாதன் என்னும் வேதியன் ஒருவன் இவ்விஷயத்தை யறிந்துகொண்டு கமலப் பொய்கையில் ஸங்கல்பத்துடன் ஸ்நானம்செய்து விபூதி ருத்திராக்ஷங்களை யணிந்து கொண்டும், சிரஸில் அஞ்ஜலியை வைத்துக் கொண்டும், பொற்கோயிலுக்குள் சென்று தியாகராஜனைப்பல தடவை பணிந்து, அவரது எதிரில் நின்று கொண்டு "ஓ பரம் பொருளே! வேதத்தின் பயனே! நஞ்சுண்டவனே! வெண்மணி முத்தே! ஆதி காலத்தில் இந்நகருக்கும் இத்தேசத்துக்கும் இவ்வுலகுக்கும் உமக்கும் உமது மகிமைகளுக்கும் அஸுர ராக்ஷஸர்களால் இடையூறுகள் நேரிட்டபொழுது நீரே அவ்விடர்களை நீக்கி உலகைக் காத்தளித்தீரல்லவா? அப்படிப்பட்ட உம்மையும் உமது தொண்டர்களையுமழித்து இந்நகரைப் பாழாக்குவதற்காகப்பாபிகள் சிலர் துர்வாதம் செய்ய வந்திருக்கிறார்கள். இவர்களின் வாதக் கொழுப்பை யடக்கவல்ல வித்வான்கள் காசியிலிருந்து இவ்விடம் வருவதற்கு முன்னமே இப்பாபிகள் உமது கோயிலுள் வலுவில் நுழைந்து உமது பெயரை யழித்து எங்களையும் மாற்றி விடுவார்கள் போல் தோன்றுகிறது. ஆகையால் ஈசனே! நான் உமது திருவடியில் வைத்திருக்கும் பக்தி உண்மையாயின் நீர் இவ்வாலயத்தை விட்டு விட்டு இப்பொழுதே என்னுடனே வரவேண்டும். இச் சமயத்தில் இப்பாபிகள் இருக்கும் இடத்திலேயே இருக்கக் கூடாது" என்று வேண்டுகையில், அவ்வீசனும் 'அப்படியே வருகிறேன் தொண்டனே!' என்று அசரீரியினால் அவனுக்கு உரைத்து விட்டு அத் திருவாரூரிலிருந்து வெளியில் செல்லும் அவ்வந்தணனுடன் தானுமொரு வேதியனுருவத்துடன் தோன்றி தியாகராஜர் வெளிச் சென்றார். சற்று நேரத்துக்குள் தேவாலயத்துக்குள்ளிருக்கும் தியாகராஜ மூர்த்தி காணமலிருப்பதைப் பற்றி ஜனங்கள் எல்லோரும் திகைத்து வருத்தமுற்று இவ்விஷயத்தை யரசனிடம் அறிவித்தார்கள்.

அதைக்கேட்டப் புறச்சமயரும் அவ்வரசனும் திகைத்து நின்று பக்தனுடனே வெளியில் தியாகராசர் போய்விட்டார் என்பதை யறிந்து கொண்டார்கள். அவ்வாதியர் எல்லோரும் அப்பொழுது பெருமூச்சுவிட்டு மதியிழந்து யுக்தி தோன்றாமல் இத்தெய்வமே ஸத்தியமான தெய்வமென்று மனதில் நினைத்துக்கொண்டு மறுநாள் உதய காலத்துக்குள் அந்நாட்டை விட்டு விட்டு வெளியில் ஓடி விட்டனர்.

மருவலர்தம் புரமூன்று மெரிசெய்தான் காண்
வஞ்சகர் பாலணுகாத மைந்தன் தான் காண்
அருவரையை யெடுத்தவன்றன் சிரங்கள் பத்து
மைந் நான்கு தோளு நெரித் தலறவன்று
திருவிரலா லடர்த்தவன் காண் டிருவாரூரிற்
றிருமூலட் டானத்தெஞ் செல்வன் றனே. —திருத்தாண்டகம்.



## 91. ராஜதர்மத்தை வெளியிட்ட லீலை.

மறைநான்கு முரைத்தானை—ஆரூர் புண்ணியனை
சிறை மீட்டானை எம்மையாள்வானை—ஆதரிப்போமே.

சார்வாகமதத்தோனும் பிரபாகர மதத்தோனும் 'தியாகராஜ ரிவ்விதமாய்ப் பக்தனுடன் வெளியில் சென்றார்' என்னும் விஷயத்தை யறிந்து கொண்டு பயந்து ஓடி விட்டனர் என்பதை மறுநாட் காலையில் அம்மன்னவன் அறிந்து கொண்டு, அவர்கள் தனது புத்தியை மயங்கச் செய்ததைப் பற்றி அவர்களை இகழ்ந்தும், பரமேசனையும் அப்பக்தனையும் புகழ்ந்தும், ஈசுவர மகிமையைத் தனது தேசத்தில் ஸ்திரமாய் நிலைநாட்டுகையில், காசியிலிருந்து திரும்பிய அவ்வித்வத் சிரேஷ்டர்கள்

திருவாரூரில் நடந்த அவ்வாச்சரியங்களைக் கேட்டு பரமானந்த மடைந்து தியாகராஜனை நேரில் பணிந்து துதி செய்து மாய வாதிகளின் கொழுப்பைப் போக்க வல்ல சிஷ்யர்களாகிய திவ்விய க்ஷேத்திரங்களில் பரதத்துவமாகிய வித்தை விதைக்கவே தியாகராஜ கருணையென்னும் ஜலத்தினால் அப் பயிர்ச் செழிப்புடன் வளர்ந்து வந்தது. இவ்விதமாய்ச் சிறந்த ஈசுவர பக்தியுடன் ஜனங்கள் எல்லாரும் வெகு நாள் வரையில் எவ்விதத் துன்பமுமின்றி வாழ்ந்து வருகையில் அத்திருவாரூரின் அரசனும், மந்திரியும் மிகவும் கிழவர்களாயிருந்தபடியால் அவர்கள் தமது சிறு புதல்வனைச் சிம்மாஸனத்தில் வீற்றிருக்கச் செய்து விட்டு அவ்வூரிலுள்ள சிறந்த வேதியர்களிடத்தில் பூபாரத்தை வைத்து விட்டு பரமேசன் பாதகமலத்தை ஸ்மரித்துக்கொண்டு பரகதியையடைந்தார்கள். பூர்வராஜனை யிழந்த பூமகளும் அந்த ராஜ மைந்தன் மீது வெகு அன்புடன் விளங்கலானாள்.

ஸபையோர்களாகிய அந்தணரும் பகை மன்னரின் எதிர்ப்பு நேராவண்ணம் ராஜ நீதி முறை தவறாமல் அரசை நடத்திக் கொண்டு அந்த ராஜ குமாரனுக்கும், மந்திரி குமாரனுக்கும் க்ஷத்திரிய வித்யைகளைக் கற்பித்து வந்தார்கள். அவ்விதப் பிராம்மணர்களாலும் அறிய முடியாத சில சூக்ஷ்மமான ராஜதர்மங்களைத் தாமே அந்த ராஜ குமாரனுக்கு உபதேசிக்க வேண்டுமென்று நினைத்த தியாகராஜர் ஒரு நாள் ஒரு வேதியன் உருவாய்த் தோன்றி அச்சபையில் நின்று பின் வருமாறு சில ராஜ நீதி முறைகளை யுரைத்தார். "நிலை பெற்ற மனத்துடன் கேளாய் ராஜ குமாரனே! மந்திரி மைந்தனே! ராஜாங்கமாகிய விருக்ஷத்துக்கு மந்திரி வேர் போன்றவன். நியாயங்களே இலையாகும். அரசன் கிளையாவான்; ஜனங்கள் புஷ்பமாவார்கள்; இவர்கள் செய்த புண்ணியமே கனியாகும். இவ்விதமாய் விளங்கக்கூடிய ராஜாங்க விருக்ஷத்துக்குக் கல்பவிருக்ஷமும் நிகரல்ல. நான்கு வித புருஷார்த்தங்களையும் அடைவதில் முயற்சி செய்து வா

வேண்டும். சிறந்த ராஜநீதியைக் கைப்பற்றிக்கொண்டு பகைவரை அடக்கி வரவேண்டும். அது போலவே ஸாதுக்களையும் ரக்ஷித்து வரவேண்டும். காலத்துக்கு அரசன் காரணமாவான். ரஜோகுணத்தையும், தமோகுணத்தையும் அழித்துச் சத்துவ குணத்திலேயே நிலைபெற்றிருக்க வேண்டும். ராஜநீதியை முறைப்படி நடத்தி வரும் அரசனுக்கு வானவரும் உதவி செய்வார்கள். தனது க்ஷத்திரிய தர்மத்தை விடாமல் ஜனங்களை மக்கள் போல் அன்புடன் காப்பாற்றிக் கொண்டும், யாகங்களைச் செய்து கொண்டும், பகைவரை வென்றும், தானங்களைச் செய்து கொண்டும், பொறுமையுடையவனாயும், போகங்களில் பற்றற்றவனாயும், கோபத்தையும், லோபத்தையும், மோகத்தையும், கர்வத்தையும் ஒழித்தவனாயும், வேதியர்களையும், தேவர்களையும் தமது குலதெய்வமாக எண்ணினவனாயுமிருக்கும் மன்னவனைப் பார்மகளும், பூமகளும், நாமகளும், ஜயமகளும் விருப்பத்துடன் வந்து அணுகுவார்கள். அரசன் தயையற்றவனாய் இருக்கக்கூடாது. ஸத்தியத்தை மீறலாகாது. பிராணிகளைக்காரணமின்றி ஹிம்ஸைசெய்யலாகாது; வஞ்சனை செய்யக்கூடாது; மனதினாலும், வாக்கினாலும் பிரகிருதிகளுக்கு விரோதம் செய்யலாகாது; சூரனாயும் பாபகாரியங்களைச் செய்யாதவனாயும், நற்றுணையையுடையவனாயும், மந்திரிகளையும், சாஸ்திரங்களையும், வேதியரின் உபதேசங்களையும் நேத்திரமாகக் கொண்ட பூபாலனே ருத்திர மூர்த்தியாய் மேதினியின் நலத்தைப் பெருக்க வல்லவன். உரிய காலத்திலேயே எவ்விதக் காரியங்களையும் செய்ய வேண்டும்.

அரசன், மந்திரி, சிநேகிதர், செல்வம், சேனை, கோட்டை, தேசமென்னும் இவ்வேழுமே ராஜ்யாங்கம் எனப்படும். இவ்வித அங்கங்களுக்கும் பிரஜைகள் செய்யும் நற்காரியங்களுக்கும், கெட்ட காரியங்களுக்கும், நன்மைக்கும், தீமைக்கும் அரசன் ஒருவனே காரணமாகிறபடியால் அரசன் தனது சரீரத்தை முதலில் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். பஞ்சேந்திரியங்களையும் ஜயிக்க வேண்டும், ஸாஹஸ காரியங்களைச்

செய்யக்கூடாது. கோசச்சாலையைக் காப்பாற்றி வரவேண்டும். காரியத்தில் வல்லமை யுள்ளவர்களையும், பொறுமை யுள்ளவர்களையும், கலங்காத மனமுடையவர்களையும், மகான்களையும் ராஜ்ய காரியங்களில் நியமிக்க வேண்டும்; நான்கு வர்ணத்தாரையும், நான்கு ஆச்ரமத்தாரையும், தமது தர்மத்தை மீறி நடவாவண்ணம் பாதுகாத்து வர வேண்டும்; நாஸ்திகத் தன்மையை நீக்கவேண்டும்; எழுத்து வேலைக்காரர்களையும், கணக்கிடுபவர்களையும், கோசத்தைக்காத்து வருகிறவர்களையும், நல்வார்த்தையினால் மேன்மைப்படுத்தி வரவேண்டும். தன் தர்மத்தையும், குல தர்மத்தையும், தேசத்தையும் ரக்ஷித்து வரவேண்டும். தினந்தோறும் சாஸ்திர படனத்தினால் புத்திக்குத்தெளிவையளித்து வரவேண்டும்; வேட்டையாடிச் சரீரத்துக்குப் பலத்தை அளித்து வரவேண்டும்; வேவுகாரர்களை ராஜ்யத்தில் வைக்க வேண்டும்; பகைவரின் படையெழுச்சி கிளம்பாமல் தடுத்து வரவேண்டும்: ஆசையினாலாவது, பயத்தினாலாவது எவ்வித இகழ்ச்சியை உண்டுபண்ணக்கூடிய தொழிலையும் செய்யக்கூடாது; ஜயசின்னங்களை உலகில் எங்கும் பரவச் செய்ய வேண்டும்; பிரஜைகளின் வியவகாரங்களை வெகு ஜாக்கிரதையுடன் கவனிக்க வேண்டும்; விலையற்ற நவரத்தினங்களையும், நற்சாதிப் புரவிகளையும், யானைகளையும், வீரர்களையும், ரதங்களையும், சேனாதிபதிகளையும் சம்பாதித்து மேன்மேலும் விருத்தி செய்ய வேண்டும்; தனுர்வித்தையில் நன்கு தேர்ச்சியடைந்து அஸ்திரங்களைப்பிரயோகிக்கும் விதத்தையும் காலத்தையும், தடுக்கும் முறையையும் அறிந்து யுத்த காலத்தில் பிரயோகிப்பதுடன் தன்னையும், தன் சேனையையும், தனது ராஜ்யத்தையும் நன்றாய் காப்பாற்றிக் கொண்டு ஜயத்தையடைய வேண்டும். சரணமடைந்தவர்களைக் காப்பாற்ற வேண்டும். எப்பொழுதும் எவ்விதத்திலும் பயமற்றவனாய் இருக்க வேண்டும். நீதி மார்க்கத்தின் முறைகளுக்கே பயத்தையடைய வேண்டும். இப்படிப்பட்ட அரசனுக்கே ஸகல செல்வமும் உண்டாகும். இவ்வித ராஜாக்களையே பூமியும் விரும்பும்'' என்று இவ்விதமாய் உரைத்து விட்டுத்திடீரென்று

அவ்வேதியர் ஸபையிலிருந்து மறைந்து விட்டதைக் கண்ட வேதியர் முதலியவர்கள் இவ்வண்ணம் சிறந்த ராஜ நீதிகளை மொழிந்தவர் வேதியன் உருவங் கொண்ட தியாகேசனுகவே இருக்க வேண்டுமென்று ஊகித்து அவ்வரசகுமாரனுக்கு ஆசி கூறி தர்ம நூல்களையும், நீதி நூல்களையும் கற்பித்து உலகில் எவ்விதக் குறைவும் நேரிடாவண்ணம் அவ்வேதியர்கள் பாது காத்து வந்தார்கள்.



## 92. மூன்று துன்பங்களையும் தடுத்த லீலை.

ஸூதர் சொல்லுகிறுர்-கேளீர் நைமிச வாசிகளே! இவ்வித மாய்த் தியாகராசன் பிராமண உருவத்துடன் ராஜஸபையில் தோன்றி அந்த ராஜகுமாரனுக்கும் மந்திரி குமாரனுக்கும் ராஜ நீதியை உபதேசித்ததைக் கேட்டு எல்லோரும் ஆனந்த மடைந்தார்கள். புத்திமான்களான அவர்களும் அதன்படி நடந்துவந்தார்கள். அந்த ராஜகுமாரனும் இளவரசனுய் பூர்வ ராஜாக்களின் ஸிம்மாஸனத்திலேறி வெண்குடையின் கீழ் உலகைப் பாலிக்கத் தொடங்குகையில், பாலசோழனென்னும் அந்த ராஜகுமாரனுக்குத் தியாகராஜனின் கருணையினுல் நினைத்த காரியங்கள் எல்லாம் நிறைவேறி வந்தன. ஸாமந்த மன்னவரின் கப்பம் அவனது கோசசாலையை நிரப்பி வந்தது. நான்கு வர்ணத்தாரும் தமது குலதர்மத்தைத் தவருமல் அனுஷ்டித்து வந்தார்கள். அவனது தேசத்தில் மங்களமே எங்கும் குடி கொண்டிருந்தது. இவ்விதமாய், ஒப்பற்ற மேன்மையுடன் அந்தப் பாலசோழன் இளம் வயது முதல் அரசாண்டு நற்கீர்த்தி பெற்று விளங்குவதைக் கண்டு

பொருமை கொண்ட பாண்டிய நாட்டரசனும், கேரள நாட்டரசனும் அச் சோழ நாட்டரச குமாரன் மீது பகை கொண்டு எவ்விதத்திலாவது அவனை மாய்த்துவிட வேண்டுமென்று நினைத்துத் தமது தேசத்திலுள்ள ஒரு வஞ்சகனைக் கூப்பிட்டு அவனது விருப்பங்களைப் பூர்த்தி செய்து அவன் மூலமாய்ச் சோழ ராஜகுமாரனை வதைக்கும்படி ஏற்பாடு செய்து அவனை யனுப்பினர்கள். இவ்விதமாய் வஞ்சக பூபதிகளாலேவப்பட்ட அவ் வஞ்சகன் ஓர் அழகிய புஷ்ப மாலையை வியப்புள்ளதாய்க் கட்டி அதைக் கையிலெடுத்துக்கொண்டு சோழ ராஜஸபையை யடைந்து "ஓ மகாராஜனே! இந்த விசித்திரமான புஷ்ப மாலையை யான் உமக்கும் மந்திரி குமாரனுக்கும் அளித்து அதனல் உங்களைச் சந்தோஷிக்கச் செய்து உங்களிடமிருந்து வெகுமதியை யடையலாம் என்று இந்தச் சபைக்கு வந்தேன்" என்று சொல்லிக் கொண்டே அம்மாலையை அரசன் எதிரில் வைத்து வணங்கி நின்றான். அத்தருணத்தில் அந்த ராஜ குமாரன் தினந்தோறுமீசனைத் தனது மனதில் ஸ்மரித்துத் துதி செய்த பிறகே ஸிம்மாஸனத்தில் ஏறி வீற்றிருப்பது போலவே அன்றும் அவ்விதமே வீற்றிருக்கையில் அவ்வஞ்சகனல் கொண்டுவரப்பட்ட அம் மாலையின் ஸ்வரூபத்தை யாரும் அறியவேயில்லை. அம்மாலை கட்டியிருக்கும் அழகைக் கண்டு அதை அணிந்து கொள்ள வேண்டுமென்று அவ் விளவரசன் விருப்பம் கொள்ளும்போது அத்தருணத்தில் தியாகராசன் ஒரு ஆகாய வாணியையேவி "ஓ மன்னவனே! இம் மாலையை நீ அணிய வேண்டாம். இதைக் கொண்டு வந்தளித்தவன் கழுத்திலேயே கட்டுவீர்" என்றுரைக்கையில் இவ்வித அசரீரி வாக்கைக் கேட்டவுடன் அவ்வஞ்சகன் பயந்து நடுக்கத்தை யடைந்து ஒன்றும் பேசாமல் சபையிலிருந்து வெகு வேகமாய் ஓட ஆரம்பித்தான். அசரீரிவாக்கு உண்டானதையும் அதைக் கேட்டு அவ்வஞ்சகன் ஓடுவதையும் கண்ட மந்திரி பிரதானிகள் வீரர்களை ஏவி அவ்வஞ்சகனைப் பிடித்து வந்து அச்சபையிலேயே நிற்கச் செய்து ஆகாயவாணி உரைத்தது போலவே அம் மாலையை அவனது கழுத்தில் கட்டினர்கள். அரசனை மாய்க்க

வேண்டுமென்று கட்டப்பட்ட அம் மாலைக்குள் புஷ்பங்களால் மறைக்கப்பட்டுச் சில கூர்மையான பாணங்கள் வைக்கப்பட்டிருந்தன. இவ்வித மாலையானது யாருடைய கழுத்தில் படிந்தாலும் படிந்தவுடனே அக் கூர்மையான பாணங்கள் கழுத்திலேயே திடீரென்று பாய்வதற்கு வழியையும் அவ்வஞ்சகன் அமைத்திருந்தான். ஆகையால் இப்படிப்பட்ட விசித்திர புஷ்ப மாலையை அரசன் கட்டளையினால் வீரர்கள் அவனது கழுத்தில் கட்டியவுடனே அதற்குள் புதைத்திருந்த அம்பினால் கழுத்து அறுக்கப்பட்டவனாய் அவ்விடத்திலேயே அவ் வஞ்சகன் மாண்டான். அதைக் கண்ட சபையோரெல்லோரும் வியப்படைந்து தியாகராசனே இந்தப் பாலசோழனை இவ்விடரிலிருந்து காப்பாற்றியபடியால் அவரே இடர் தீர்க்கும் தெய்வம். அவரே சோழராஜகுலத்தைக் காக்கும் மருந்து. அவரே உலகுக்குப் பிதாவென்று பலவாறு துதி செய்து பால சோழனுக்கு ஆசி கூறி கர்ப்பூர ஆரத்தியெடுத்து மங்களங்களை யடைவித்தார்கள்.

இவ்விதமாய்ச் சோழ ராஜசபைக்குச் சென்ற வஞ்சகன் மாண்டுவிடவே அவன் வெகுநாள் வரையில் திரும்பி வராமையைக் கண்டும், இவ்விதமாய் ஈசன் ஏவிய அசரீரியினுரையால் பலவந்தமாகத் தன் கழுத்திலேயே மாலை அணிவிக்கப் பெற்று மாண்டான் என்பதைக் கேட்டும் கோபத்தை யடைந்த பாண்டிய மன்னன் மற்றொரு வஞ்சகனை ஏவினான். அவ்வஞ்சகனும் சில துணைவருடன் சோழ மண்டலத்தை யடைந்து அந்தப்பால சோழ மகாராஜன் வேட்டைக்குச் செல்லுமிடத்தை யறிந்துகொண்டு அவ்விடம் சென்று மறைந்திருந்தான். ஒரு நாள் வேட்டையாடிவிட்டு அவ்வரசன் மிகக்களைப்புடன் திரும்புகையில் அந்த இரண்டாவது வஞ்சகன் விடம் கலந்திருக்கும் ஒரு மாம்பழத்தை ஒரு துணைவனிடம் கொடுத்து வாடி வரும் மன்னவனுக்கு அளிப்பாய் என்று ஏவி விட்டுத்தான் ஒரு மரத்தினடியில் மறைந்திருந்தான்.

அவ்வண்ணமே அக்கனியை வாங்கிக்கொண்டு அத்துணைவனும், அவ்வரசனுடைய அருகில் நெருங்கி, "ஓ மன்னவனே!

இக்கனியை'' என்று பாதி யுரைக்கையிலேயே மனம் மாறி யவனுய்த் திடீரென்று அக்கனியைப் பூமியில் போட்டு விட்டு "ஓ பூமகேந்திரனே! உனது வடிவழகையும், உனது சரீரப் பான்மையையும், உனது ராஜ தேஜஸ்ஸையும் கண்டு நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். உன்னை மாய்ப்பதற்காகச் சில வஞ்சகர் என்னை ஏவி விஷம் கலந்த இக்கனியை அளிக்கச் செய்தார்கள். நானும் மதி மயங்கி இக் கனியை எடுத்துக் கொண்டு உமதருகில் வந்து உம்மைக்கண்டவுடனே என் மனம் மாறுபட்டது. நான் உம்மை மாய்ப்பதற்காக எண்ணிய பாபத்தை நீரே போக்க வேண்டும். உமது பாதமே துணை'' என்று அரசனது பாதத்தில் வீழ்ந்து வணங்கினுன். அதைக் கண்ட அம்மகாராஜனும் வியப்பையடைந்து அவனைப்புண்ணி யபுரிக்கு அழைத்து வந்து கமலப்பொய்கையில் நீராடச்செய்து தியாகராஜனைப் பணியச் செய்து அவனது பாபத்தை நீக்கி அது முதல் அவனையே அம்மன்னவன் உயிர்த் துணைவனுக ஏற்படுத்திக் கொண்டான்.

இவ்விதமாய் விஷக்கனியளிக்கச் சென்றவன் மாறியதைக் கண்ட அவ்வஞ்சகன் சிலநாள் சென்றவுடன் மற்றொரு துணை வனைக்கூப்பிட்டு அவனது விருப்பங்களை அளித்து பசியால் சினங்கொண்ட ஸர்ப்பத்தை அம்மன்னவன் நித்திரை சாலை யில் விடும்படி ஏவினுன். நடு இரவில் ஸகல ஜீவராசிகளும் நித்திரையைத் தழுவியிருக்கும் சமயத்தில் மறைந்திருந்த அவ்வஞ்சகனுல் ஏவப்பட்ட அச்சர்ப்பமானது பசியினுலும், விடாயினுலும், சீறிக் கொண்டு வந்து அவ்வரசன் அருகில் சென்றது. அவ்விடத்தில் அத்தருணத்தில் ஒருவருமில்லை. கனி கொண்டு வந்த அவ்வுயிர்த் தோழனும் ஜலமோசனத்துக் காக அவ்விடத்தைவிட்டு வெளியில் சென்றிருந்தான். அப் படிப்பட்ட தருணத்தில் பள்ளியில் நித்திரா தேவியுடன் களித் திருக்கும் அச்சோழ மன்னவனை மாய்ப்பது போல் சீறி வந்த அந்தச் சர்ப்பமானது அவனது வடிவழகைக் கண்டும் அவன் கழுத்தில் அணிந்திருக்கும் ருத்திராக்ஷ மாலை வடங்களைக்

கண்டும் பிரமை யடைந்து பரமேசன் கருணையினுல் மாறிய மனமுடையதாய்க் கொண்டு அவனது சென்னியின் அருகில் சென்று தனது அழகிய படத்தை யெடுத்து குடையாகப் பிடித்து நின்றது. சற்று நேரத்துக்குள் அவ்வுயிர்த் துணைவன் திரும்பி வந்து பார்க்கும் வரையில் அந்தச் சர்ப்பம் படமெடுத்து அம்மன்னவன் மௌலிக்குக் குடை பிடித் திருந்தது. பிறகு திடீரென்று ஓடி மறைந்துவிட்டது. மறு நாட்காலையில் இவ்வித அதிசயத்தை அவ்வுயிர்த் துணைவன் மூலமாய் அறிந்து கொண்டவர் அனைவரும் ஈசனைப் பணிந்து நீரே தெய்வமெனத் துதித்தார்கள்.



## 93. உயிர் விடத் துணிந்தோனுக்கு எதிர் நின்ற லீலை.

ஒரு சமயம் குண்டவேதி யென்னும் சூத்திர னொருவன் பைந்தவ முனிவரின் உபதேசத்தைப் பெற்றுக் கொண்டு தினந்தோறும் விடியற் காலத்தில் ஈசனைத் தியானித்துக் கொண்டே யெழுந்து கமலாலயத்தில் ஸ்நானம் செய்து விபூதியை அங்கங்களில் அணிந்து பூமியையும், ஈசனையும், சூரியனையும், எண்திசைகளையும், தேனுவையும், வேதியரை யும், தமது குருவையும், மாதாவையும், பிதாவையும், பரமேச் வரபக்தர்களையும், நமஸ்கரித்துத் தியாகராஜாவின் தேவாலயத் தைப் பிரதக்ஷிணம் செய்து கைலாஸ வாஸியின் நாமங்களை மனனம் செய்து வந்தான். இவ்வண்ணம் அநேக வருடகாலம் வரையில் நடந்து வருகையில், "தனது சூத்ர ஜன்மத்தில் செய்துவரும் நற்காரியங்களால் அடுத்த ஜன்மத்தில் நற்குலத் திலுதித்து அஜ்ஜன்மத்தில் செய்யும் நற்காரியங்களால் அடுத்த

ஜன்மத்தில் பிராம்மணனாய் ஜனித்து அஜ்ஜன்மத்தில் செய்யும் நற்காரியங்களால் ஈசனை அடைய முடியுமே தவிர இந்த சூத்ர ஜன்மத்துடன் பரமேசன் ஐக்கியம் கிடைக்காது" என்று சிலர் சொல்லக் கேட்டு அந்தச் சூத்ரன் சிந்திக்கலானான். "ஓ பரமேச! நான் பூர்வ ஜன்மங்களில் செய்த பாபத்திரளால் இந்தச் சூத்ர ஜன்மத்தை யடைந்திருக்கிறேன். இதை யொழிப்பது என்றால் நான் இன்னும் அளவற்ற ஜன்மமெடுக்க வேண்டும். அப்படி எடுத்தாலும் எனது பாபம் நீங்காது. எனது இந்த அற்ப சரீரமும் நீங்காது போலும். நான் என் செய்வேன். தினந்தோறும் மனதினாலும், வாக்கினாலும், கருமத்தினாலும் செய்து வரும் பாப ராசிகளினால் எனக்கு அஞ்ஞானமே வளருகிறது. எனது மனம் உமது பாதத்தில் நிலை நின்ற பக்திக் கோலை யூன்றி நிலைக்கவில்லையே; என் செய்வேன்; நீயே கதி; உமது பாதத்தையே நம்பினேன். தாயும் நீ; தந்தையும் நீ, உறவும் நீ, செல்வமும் நீ, மக்களும் நீ, இன்பமும் நீ, இடர் கடியும் மருந்தும் நீ, அமுதும் நீ, வானும் நீ, வான் சுடரும் நீ, அலைந்து திரியும் என் மனதுக்கு நீயே நிலையையளிக்க வேண்டும். நான் வேதங்களைக் கேட்கவும் அதிகாரத்தை அடையவில்லை. தொண்டு செய்யும் சூத்திர யோனியிற் பிறந்திருக்கிறேன். வேதமோதும் பிராமணர்க்கே நீ தெய்வமென்று கூறுகிறார்களே! நீ எனக்குக் கதியளிக்க மாட்டாயா? இம்மா ஞாலத்தில் நீச ஜாதியைக் காப்பது உமது கீர்த்திக்குப் பெருமையல்லவா? அங்கஹீன மடைந்த மக்களைத் தந்தை உபேக்ஷிப்பானோ; எனது பேதமையைத் தீர்த்து எனக்கு நன்மையளிக்கவேண்டும். உமது பாதபக்தியே எனது ஜன்மப் பயன்" என்று இவ்வாறு நெடு நாளாய் ஈசனை வேண்டிக் கொண்டிருக்கையில் அந்தப் பக்தனுக்குத் தியாக ராஜன் நெடுநாள்வரையில் கனவிலும் தோற்றவில்லை. ஆகாய வாணியினாலும் தைரியம் கூறவில்லை. நற்குருக்களை யனுப்பித்து தத்வோபதேசமும் செய்து வைக்கவில்லை. அதனால் அந்தக்குண்டவேதி சூத்ரனுக்கு மனம் வெடித்தாற் போலாயிற்று. நாம் இது வரையில் ஈசனையே பணிந்து வந்தாலும்,

இந்த நீச ஜன்மமே பரமேச தர்சனத்தைத் தடுப்பது போல் காணப்படுகிறது. இப்பாபி ஜன்மத்தை யொழித்து மறு ஜன்மத்தையாவது அடைவோமென்று நினைத்துத் துக்கத்துடன் உயிரை விடுவதாகச் சங்கல்பமும் செய்து கொண்டு கண்களை மூடிக்கொண்டான். இனி இப்பாபி சரீரம் வளரும்படி உணவையும் அளிக்கிறதில்லை யென்று உணவைத் துறந்தான். தாகத்தையும், பசியையும் அடக்கிக் கொண்டான். மனதில் தியாகராஜ மூர்த்தியை அமைத்துக் கொண்டான். தமது ஐம்புலன்களும் உலகத் தோற்றில் பற்றுதலையடையா வண்ணம் அவைகளைத் தியானத்துக்குத் திருப்பி விட்டான்; மெய் மறந்தான்.

இவ்விதமாய்க் குண்டவேதி என்னும் சூத்ரன் தனது பாப ஜன்மத்தை யழிக்கக் கருதி உயிரை விடத் துணிகையில் தயாளநிதியாகிய தியாகேசர் அப்பொழுது அவனெதிரில் ஒரு முனிவர் போல் தோன்றி, "ஓ புண்ணியவானே! நீ சற்றுக் கண்களைத் திறப்பாய். எனது உபதேசத்தைக் கேள்! பரமேசனால் அனுப்பப்பட்ட நான் ஒரு குருமூர்த்தி" என்று உரைத்தார். இதைக் கேட்ட அவன் தனது ஞானக் கண்ணால் அம்முனிவர் சிவபிரானே தானென்பதை அறிந்து கொண்டு சர்ம சக்ஷுஸ்ஸைப் பிறகு திறந்து நேரில் அவரைக் கண்டு பணிந்து வலஞ் செய்து துதித்துக் களித்துக் கூத்தாடினான். அப்பொழுது அம்முனிவர், "ஓ பக்த! ஸகல ஜீவராசிகளுக்கும் காவலனாகிய பரமேசன் படைத்த இவ்வுலகில் இந்த மனுஷ்ய சரீரத்தினால் எவ்வித நன்மையும், தீமையும் உண்டாகாது: சரீரமானது பூமியில் உண்டாகி பூமியுடனே லயத்தை யடையும். எவ்வித நன்மைக்கும், தீமைக்கும் ஆன்மாவே காரணமாகும். அவ்வித ஆன்மாவின் கருவிகளாகிய பஞ்ச இந்திரியங்களால் நற்காரியங்களைச் செய்து கொண்டு தர்ம மார்க்கத்தைக் கடவாமல் இருந்தால் இக்கலியுகத்திலும் எளிதில் பரமேசனுடைய ஐக்கியச் செல்வம் கிடைக்கும். தேவர்கள், ரிஷிகள், யதிகள், பிராம்மணர், க்ஷத்திரியர்,

வைச்யர், சூத்திரர், சண்டாளர், ஹீன ஜாதியர், பசு மிருகம் என்னும் ஜாதியினால் வேறுபட்ட ஸகல ஜீவராசிகளையும் ஈசன் ஸமமாகவே நினைக்கிறார். அவரவர் கர்மங்களுக்குத் தக்க பயனையும் அளிக்கிறார். ஆதி யுகங்களாகிய கிருத யுகத்திலும், திரேதா யுகத்திலும், த்வாபர யுகத்திலும் வெகு கடின தவங்களைச் செய்து அடைந்த நற்பதவியை இக்கலியுகத்தில் ஒருவன் எந்த ஜாதியில் ஜனித்தபோதிலும், ஈசனுடைய நாம கீர்த்தனங்களினாலேயே அடைகின்றானே; இவ்விதக் கருணை யாருக்குண்டாகும்? தேவர்களுக்குத் தெய்வமாயும், ரிஷிகளுக்குத் தவப்பயனாயும், வேதியர்களுக்கு நற்கிரியைகளாயும், க்ஷத்திரியர்களுக்கு அஸ்திர ராஜனாயும், வைசியருக்கு வியாபாரக் கடவுளாயும், சூத்ரர்களுக்கு எளிதான தெய்வமாகியும், பேசும் பொருளாயும், பேசாப் பொருளாயும், பஞ்ச பூதங்களாயுமிருக்கும் பரம் பொருளே இத்திருவாரூரில் தெய்வமாய் விளங்குகின்றார். ஆதலால் இப்படிப்பட்டத் தியாகராஜ பரம் பொருளிடத்தில் பக்தியையுடையவர் எவ்வித ஜாதியில் பிறந்தாரெனினும் அவர்களுக்கு மறுஜன்மமே கிடையாது. அந்த ஜன்மத்தின் முடிவிலீசனுடைய ஸாலோக்கிய ஸாயுஜ்யத்தையடைந்து விளங்குவார்கள். நீ இந்த ஜன்மத்தை யழிக்காதே. இதுவே பக்தி நிறைந்த சிறந்த சரீரம்'' என்றுரைத்துவிட்டு மறைந்து விட்டார்.

இவ்வண்ணம் கூறிய முனிவர் திடீரென்று மறைந்துவிட்டதை யறிந்த அந்தப் பக்தன் மனம் தேறுதலை யடைந்து நெடு நாள் விளங்கினான். இவ்விதமாய் ஈசன் மொழிந்த ஆகமப்பொருளின் தத்துவத்தை அவன் மூலமாய் நீசஜாதியில் ஜனித்தவரெல்லோரும் கேட்டு நற்கதியை யடைந்தார்கள். அது முதல் கலியுகத்தில் தோன்றிய மானிட சரீரத்தை இகழ்பவர்களும் மானிட சரீரமே சிறந்ததென்று அறிந்து அஜ்ஜன்மத்துக்குத் தக்கவாறு தர்ம வழியில் நின்று நற்காரியங்களைச் செய்யத் தொடங்கி கலியின் கொடுமையை வென்று விளங்கினார்கள்.

ஆடுவாய் நீ நட்ட மளவிற் றன்று
  வலியடுவா ரரு மறையோ ரறிந்தே னுன்னைப்
பாடுவார் தும் புருவு நார தாதி
  பரவுவா ரமரர்களு மமரர் கோனும்
தேடுவார் திருமாலு நான்முகனுந்
  தீண்டுவாள் மலைமகளுங் கங்கை யாளும்
கூடுமே நாயடியேன் செய்குற் றேவல்
  குறை யுண்டே திருவாரூர் குடிகொண்டீர்க்கே.

—திருத்தாண்டகம்.



## 94. குருடனுய்த் தோன்றி மன்னவனைக் காத்த லீலை.

சூரிய சோழ மஹாராஜன் ஒரு ஸமயத்தில் காசியாத்திரை யாய்ச் செல்லும்போது ஒவ்வொரு தேசத்திலும், ஒவ்வொரு நகரத்திலும், ஒவ்வொரு கிராமத்திலும் எவ்வித அற்புத வஸ்துக்களிருக்கின்றன? யார் யார் எங்கெந்த சாஸ்திரங்களிலும், பாஷைகளிலும் சிறந்த ஞானம் படைத்தவர்கள்? யாருக்கு எவ்வித மனக்குறை? என்றிவ்விதமாய் விசாரித்துக் கொண்டே அங்கங்கு யாசகர்களுக்கும் கற்றவர்களுக்கும் அற்புத திரவியங்களை அளிப்பவர்களுக்கும் அம்மஹாராஜன் அளவற்ற திரவியங்களைக் கொடுத்து அவர்கள் மனம் மகிழும்படி கௌரவஞ் செய்துகொண்டே வடதிசையை நோக்கிச் செல்லுகையில், நர்மதா நதியின் கரையில் ஒருநாள் தண்டு விட்டிறங்கினுன். அம்மஹாராஜனுடன் காசிக்குச் சென்றுகொண்டிருக்கும் வேதியர் கூட்டத்தார் அந்நதியில் புண்ய ஸ்நாநம் செய்து ஜபங்களை முடித்தபிறகு பரமேச நாமங்களைக்

கம்பீரமாய்ச் சொல்லி ஈசனைத் துதி செய்தார்கள். அப்படிப் பட்ட வேதியர்களின் துதி சத்தத்தைக் கேட்டு அக்நதியின் கரையில் ஒரு புதரில் நெடுநாளாய் யோகம் செய்துகொண்டிருந்த ஒரு யோகியானவர் எழுந்து வந்து, " ஓ பக்தர்களே! நீங்கள் எவ்விடத்திலிருந்து வந்திருக்கிறீர்கள்? நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து இவ்விடத்திலிருக்கும் சிவலிங்க மூர்த்திகளை எடுத்துக் கொண்டு போய் அம்மூர்த்திகளுக்குப் பூஜை நடக்கும்படி ஏற்பாடு செய்வீராகில் உங்களுக்கு நற்கதி யுண்டாகும். உங்களைப் போன்றவர்கள் யார் இவ்விடத்துக்கு வரப்போகிறார்களென்று நான் வெகு காலமாய் எதிர்பார்த்துக் கொண்டே ஈசுவரத்தியான யோகம் செய்துகொண்டிருந்தேன். உங்களது தர்சனத்தினால் எனது மனோரதம் நிறைவேறியதாக எண்ணுகிறேன்" என்றுரைத்தார்.

இதைக்கேட்ட அவ்வேதியர்கள் அந்தயோகியின் அருகில் சென்று, " எங்குச் சிவலிங்க மூர்த்திகளிருக்கின்றன? காண்பிப்பீராக" வென்று மொழியும்போது அந்த யோகி, "பிராம்மணோத்தமர்களே! அதோ பாருங்கள். வெகு தூரத்தில் புலப்படும் அந்த வேடச்சேரியிலுள்ள சில துஷ்ட கிராதர்கள் அநேக லிங்க ஸ்வரூபிகளை அடக்கி வைத்துக் கொண்டு கொடுக்க மாட்டோமென்று வெகு நாளாய்ப் பாழாக்கி வருகிறார்கள். நீங்களாவது உங்கள் மன்னவன் மூலமாய் அம்மூர்த்திகளை மீட்பீர்கள்" என்றார். அவ்வேதியர்களெல்லோரும் அப்போது அவ்வதிசயத்தை அந்தச் சூரிய சோழ மகாராஜனுக் கறிவித்து அவனுடன் அவ்வேடச் சேரிக்குச் சென்று அங்குள்ளவர்களைக் கூப்பிட்டு, " அந்த லிங்க மூர்த்திகளைக் கொடுப்பீர்கள்" என்று கேட்டார்கள். இவ்விதமாய்ச் சிறந்த அந்தணர்க் கூட்டத்துடன் வந்த சோழ நாட்டு மகாராஜனைக் கண்டு அச்சேரியிலிருப்பவர்கள் வணங்கி, " ஓ மன்னவனே! ஆதி காலம் தொடங்கி சிற்சில பாபிகளாலும், ராக்ஷஸர்களாலும், அசுரர்களாலும் பலவிடங்களிலிருந்து அபகரிக்கப்பட்டு வந்த லிங்க மூர்த்திகளையும், உத்ஸவ பேரங்

களையும், சைன பேரங்களையும் மற்றுமுள்ள துர் மத பேரங்களையும், இவ்வேடச் சேரியிலுள்ள எங்கள் மூதாதைகள் சேர்த்து வைத்திருக்கிறார்கள். அவ்வித மூர்த்திகள் எங்களிடத்தில் ஆயிரக்கணக்காயிருக்கின்றன. அவைகளை உங்களிடம் கொடுப்பதற்கு ஒரு தடையுண்டு. அஃதென்னவெனில், பிறவிக் குருடரா யிருப்பவர் ஒருவர் அம்மூர்த்திகளை எடுத்து, "இது இந்த மதத்தோருடைய தெய்வம், இது இந்த மதத்தினருடைய தெய்வம்" என்று பகுப்பாராகில் நாங்கள் உங்கள் மதத் தெய்வங்களை உங்களிடமே ஒப்புவிக்கிறோம். இதுவே எங்கள் மூதாதைகளின் கருத்து. இதற்கு இணையாவிடில் எங்களிடமிருந்து இம் மூர்த்திகளை யாராலும் அடைய முடியாது" என்று மொழிந்தார்கள். அதைக் கேட்ட அம் மகாராஜன் நல்வார்த்தைகள் எவ்வளவோ சொல்லியும் அவர்களைத் திருப்ப முடியவில்லை. தனத்தினாலும் திருப்ப முடியவில்லை. யுத்தம் செய்வதாகில் அம் மூர்த்திகளை அவர்கள் அழித்து விட்டுப் பிறகு போரில் மாய்ந்தாலும் நமக்கு யாது பய"னென்று இவ்விதமாய் யோசித்துத் திசை திசையாய்ச் சென்று ஒரு பிறவிக் குருடனைத் தேடி வாருங்கள் என்று தூதர்களை யனுப்பினான். அவர்களெல்லோரும் சில நாள் சென்ற பிறகு திரும்பிவந்து, "பூபாலனே! பிறவிக்குருடராய் இருப்பவர்கள் சிலரிருக்கிறார்கள. ஆனால் அவர்கள் அவ்விதமான பேரங்களின் பேதத்தை யறிய மாட்டார்களா"மென்றுரைத்தார்கள். அதைக்கேட்ட சூரியசோழ மகாராஜன் தனது குலதெய்வமாகிய தியாகராஜனை மனதில் நினைத்து, "ஈச! உமது அம்சமாகிய லிங்க மூர்த்திகளும், பேர மூர்த்திகளும் வெகு நாளாய் இவ்வேடச் சேரியில் பூஜையின்றி அடைக்கப் பட்டிருக்கின்றனவே! இவைகளை நான் மீட்பதற்கு செய்த உபாயங்கள் யாதும் அவர்களின் மனதைத் திருப்பவில்லையே. பிறவிக் குருடனே வந்து அம்மூர்த்திகளை எடுத்துப் பெயரைச் சொல்லி பகுக்க வேண்டுமாம். இவ்வித நிர்ப்பந்தத்தை அவர்கள் வைத்திருக்கிறார்களே. இதற்கு இவ்வேதியரும் யாமும் என் செய்வோம். தியாகேசனே! நீயே சரண். உமது

மூர்த்திகளின் பூஜையை நீரே நடத்தி வைத்துக் கொள்ள வேண்டும்'' என்று இவ்விதமாய் அஞ்சலி செய்து கொண்டு பரமேசனைத் துதிக்கும் போது தயாஸாகரனுகிய தியாகராஜர் அந்தச் சமயத்தில் ஒரு குருடனுய்த் தோன்றி தனது கையில் பிடித்திருக்கும் கோலை மற்றொருவன் பற்றிக் கொண்டு வழி காட்டியாய் முன் செல்ல இவ்விதமாய் இருவரராய்த் தோன்றி வந்தார்கள். அவர்கள் தன்னிடம் நெருங்கி வந்ததைக் கண்ட அம்மகாராஜன் அவரை யாரென்று விசாரித்து உண்ண கனி களையளித்து தண்ணீரைக் கொடுத்து அவ்வந்தகருடைய விடாயை ஆற்றிய பிறகு அவரை அழைத்துக் கொண்டு அவ் வேடச் சேரிக்குச் சென்றுன். அக்குருடனுடைய திருமேனி யின் ஒளியையும், முகமகிழ்ச்சியையும் கண்டவர்களெல்லோ ரும் மெய் சிலிர்த்து ஒன்று கூடி தமது சேரியின் தெரு மத்தி யில் புதையல் போட்டு வைத்திருக்கும் ஆயிரக்கணக்கான மூர்த்திகளை ஒவ்வொன்ருய் எடுத்து அவ்வந்தகர் கையில் கொடுக்க ஆரம்பித்தார்கள். அவ்வந்தக வந்தணக்கிழவனும் அம்மூர்த்திகளைத் தனது கையினுல் தொட்டு அடையாளம் பார்ப்பவர்போல் நடித்து, இது சந்திரசேகரமூர்த்தி—இது பசு பதிமூர்த்தி—இது கங்காளமூர்த்தி —இது நடனமூர்த்தி—இது ஹரிஹரமூர்த்தி—இது லிங்கோத்பவமூர்த்தி—இது திரிபுர ஹரமூர்த்தி—இது பத்மராக லிங்கமூர்த்தி —இது மாணிக்க லிங்க மூர்த்தி— இது வைடூரிய லிங்க மூர்த்தி—இது முத்து லிங்க மூர்த்தி—இது ஸ்படிக லிங்க மூர்த்தி—இது அர்த்த நாரீச்வர மூர்த்தி-- இது வேதத்தையும், வேத கர்மங்களையும் பழித்த ஜைந மூர்த்தி—இது ஹேரம்ப மூர்த்தி—இது குமார மூர்த்தி—இது ஜகத் வஞ்சகனுகிய மாயா மதத்தோன் தெய்வ மூர்த்தி என்று இவ்விதமாய் ஒவ்வொன்றின் பெயர்களையும், அடையாளங்களையும் கண்ணுல் கண்டவன் போல் காட்டிக் கொண்டு வருவதைக் கண்டவர்கள் எல்லோரும் வியப்படைந்து இவ்வந்தகவந்தணன் நிஜமாகவே பார்வதிநேசனே; புரந்தரனே! அருந்தவத்தானே; என்றஞ்சினவர்களாய் அஞ்சலி செய்து பணிந்தார்கள். அப்பிறவிக் குருடரால் இகழப்பட்ட ஜைந

தெய்வங்களெல்லாம் பொய்யான தெய்வமென்று நினைத்து அச்சிவ லிங்க மூர்த்திகளின் மஹிமையையும், அச்சோழ ராஜனுடைய பிரதான நகரமாகிய திருவாரூரில் விளங்கும் தியாகேசனுடைய மஹிமையையும் கேட்டு அவ்வேடச் சேரியிலுள்ளவர்கள் வெகுநாளாய் பூமியில் சுரங்கத்தில் அடைக்கப்பட்டு பூஜை யில்லாமலிருந்த அம்மூர்த்திகளுக்கு அபிஷேகம் செய்து வைக்கும்படி சிலர் பசுவின் பால் குடங்களையும், சிலர் நறு நெய்க் குடங்களையும், சிலர் சிறந்த மலைத்தேன் குடங்களையும், சிலர் தயிர்க் குடங்களையும், சிலர் மதுரமான பழக்கூடைகளையும், சிலர் வாசனையுள்ள சந்தனங்களையும், சிலர் அகில் கட்டைகளையும், சிலர் புஷ்பச் செண்டுகளையும் அவ்வரசனுக்கெதிரில் வைத்துப் பணிந்து நின்று, "பூபாலனே! நீர் இவ்விடம் வந்தபடியால் எங்களுக்கு அஞ்ஞானம் நீங்கியது. சிறந்த சிவலிங்க மூர்த்திகளின் தரிசனமும் கிடைத்தது. சிவ பக்தியையும் அடைந்தோம். பிறவிக்குருடராகிய இவ்வந்தணர் சுட்டிக் காட்டிய இம்மூர்த்திகளே எங்கள் குல தெய்வம்" என்று போற்றினார்கள். அவ்வரசனும் அளவற்ற சந்தோஷத்துடன் அம்மூர்த்திகளைப் பெற்றுக் கொண்டு தனது தண்டுக்குத்திரும்புகையில் அப்பிறவிக் குருடனுய்த் தோன்றிய தியாகராஜரும் கோல் காட்டியும் மறைந்து விட்டார்கள்.



## 95. அன்னமளித்தவன் பழியை நீக்கிய லீலை.

ஆகமீ என்னும் வேதியன் ஒருவன் மிகவும் மகிமை வாய்ந்திருந்த தியாகராஜமூர்த்தியைத் தரிசிக்கவேண்டுமென்று நினைத்துத் தன் தர்ம பத்தினியினால் கொடுக்கப்பட்ட ஆகாரத்தை எடுத்துக் கொண்டு கமலாலய நகருக்குச் செல்லுகையில், நடு வழியில் வெய்யிலின் தாபத்தினால் நடந்து செல்ல முடியாமல் களைப்பை யடைந்து அப் பிராமணன் அம்மார்க்கத்திற்கு சமீபத்திலிருக்கும் ஒரு குளத்தை யடைந்து தண்ணீர்

குடித்து அங்குள்ள ஒரு மரத்தடியில் சற்று நேரம் நித்திரை செய்தான். அத் தருணத்தில் அவ்வேதியன் கொண்டுவந்த உணவு மூட்டையில் அம் மரத்தின் நுசியுள்ள கிளையைப் பற்களால் கடித்த ஒரு ஸர்ப்பத்தின் வாயிலிருந்து ஒரு சொட்டு விஷத்துளி வீழ்ந்தது.

தனது உணவு மூட்டையில் விஷம் கலந்ததை யறியாத அவ்வேதியன் சற்று நேரம் கழிந்த பிறகு நித்திரை நீங்கி கண் விழித்துப் பார்க்கையில், தனக்கு எதிரில் ஒரு சிறிய குமாரன் பசியினால் அழுது கொண்டிருக்கக் கண்டான். அக் குமாரனைக் கண்டு தயை கொண்ட அவ் வந்தணன் எதிரில் நின்றுகொண்டிருக்கும் அவனது தாயின் அனுமதியின் பேரில் அக் குமாரனுக்குத் தனது உணவில் ஒரு பாகத்தைக் கொடுத்தான். அக் குமாரனும் அவனது தாயும் காட்டில் வஸிப்பவர்களானபடியால் எவ்வித உணவுகளையும் பரீக்ஷை செய்த பிறகே உண்பது வழக்கம். அவர்கள் வழக்கம் போல் அப்பொழுது வேதியன் அளித்த உணவை அருகிலிருந்த ஒரு கிளிக்கு அளித்தார்கள். ஸர்ப்பத்தின் விஷ சம்பந்தமடைந்த அக் கூழ்க்கொட்டையை (குழக்கட்டை) அக் கிளி அருந்திய வுடனே மயங்கித் தலைசுற்றி இறந்து விட்டது.

அதைக் கண்ட வேதியனும் அக் குமாரனும் அவனது தாயும் வியப்படைந்து நிற்கையில், அவளது உறவினர்களாகிய சில வேடர்கள் அங்கு வந்து, விஷயத்தை யறிந்து கொண்டு, உணவில் விஷத்தைக் கலந்து கொண்டு வந்து வனத்திலுள்ளவர்களை மாய்க்க முயன்ற உன்னை நாங்களே மாய்த்து விடுகிறோமென்று கூறிக் கொண்டே அவ்வேதியன் மீது பாய்ந்தனர். வேதியனும் பயந்து நடுநடுங்கி பரமேச! தியாகேச! நான் எவ்வித குற்றத்தையும் செய்யவில்லையே யென்று கதறினான். அவனுடைய கூக்குரலைக்கேட்டு வேட்டைக்காக அந்த வனத்துக்கு வந்த சோழ பூபாலன் அவ்வேடர்களைத் தடுத்து, "அப்பிராமணனை நீங்கள் வெகுண்டு கொல்லாதீர்கள்; நான் விசாரணை செய்கிறேன்" என்று அவர்களுக்கு நல்ல வார்த்தை கூறி

அவ்வந்தணன் முதலான எல்லோரையும் தனது நகரத்துக் கழைத்துக் கொண்டுபோய் விசாரிக்கையில், குற்றமற்ற அவ் வேதியன் தான் அளித்த உணவுக்குத் தியாகேசனே ஸாக்ஷி யென்று புலம்புகையில், சில முகூர்த்தத்துக்கு முன் விஷ ஸம்பந்தமுள்ள உணவை புசித்து உயிரை யிழந்த அக்கிளி யானது ஒரு கந்தர்வ ரூபத்துடன் ஆகாயத்தில் தோன்றி அச்சோழ ராஜனுடைய சபையின் முன் வந்து "ஓ மகாராச னே! குற்றமற்ற இவ் வந்தணனை நீர் தண்டிக்க வேண்டாம். மதங்க மகரிஷியின் சாபத்தினால் கிளியின் ஜன்மத்தை யடைந் திருந்த நான் ஈசுவர ஸங்கல்பத்தினால் வேதியன் உணவில் ஸர்ப்பவிஷ ஸம்பந்தமுண்டாகவே அதை நான் புசித்து எனது சாப சரீரத்தை விட்டு இவ்வித திவ்விய சரீரத்துடன் இத் தியாகராஜனைப் பணிந்து விட்டு எனது லோகத்துக்கு நான் செல்லுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே மறைந்து விட் டது. இவ்வதிசயத்தைக் கேட்டவர்கள் அனைவரும் ஆனந்த மடைந்து ஈசனைத் துதித்தார்கள். அவ்வந்தணரும் ஈச்வர தர்சனத்தைப் பெற்றுப் பழி நீங்கியவராய் ஈச்வர பக்தியுடன் நெடுநாள் வாழ்ந்து வந்தார்.



## 96. நாகத்தினால் நன்மையளித்த லீலை.

புண்ணியசீலர்கள் நிறைந்த தில்லைநகரில் ஞானவொளியென் னும் வேதியர் ஒருவர் இருந்தார். அவர் தக்க வயதில் உபநயனமென்னும் ஸம்ஸ்காரத்தையடைந்தவுடன் வேதங்களை ஸாங்கமாய் ஓதி சாஸ்திரப் பயிற்சியையும் பெற்று குருவினிட மிருந்து விடைபெற்றுக் கொண்டு இல்லற தர்மத்தையடைந்து ரிஷிக் கடமையையும், தேவர் கடமையையும், மூதாதைக் கடமையையும் முடித்துவிட்டு விளங்கும் நாளில் அவருக்குச் சகிக்கமுடியாத வறுமைத்தளம் அதிகமாயிற்று.

அவரது நற்குணங்களையும், கல்வியின் மேன்மையையும் கண்டு ஸாதுக்கள் தினந்தோறும் அவரது வீட்டுக்கு வந்து அவரிடமிருந்து சாஸ்திர தத்துவங்களை யறிந்து கொண்டு ஸந்தேஹங்களை யொழித்து அவரது வீட்டில் போஜனம் செய்து தூயமனமுடையவர்களாய்த்தமது இருப்பிடத்திற்குச் சென்று கொண்டிருந்தார்கள். சில வேதியர்கள் ஒரு பக்ஷம் இரண்டு பக்ஷம் இரண்டு மாதம் ஆறு மாதம் வரையில் அவரது வீட்டிலேயே தங்கியிருந்து வித்தியாப்பியாஸம் செய்து வருவார்கள். சிலர் அதிதிகளாய் வருவார்கள். இவ்விதம் தன்னிடம் அதிதியாய் வந்தவர்களுக்கு அவர் நெடுநாள் வரையில் அமுது அளித்து வந்தார்.

ஒரு நாள் அவர் வறுமையின் கொடுமையினால் ஸம்ஸாரத்தில் வெறுப்படைந்து ஈசனைத் துதித்து, "பரமேச! லோக ரக்ஷக! உமது பாதங்களையே போற்றி வரும் நான் இவ்வுலகில் நல்வேதியருக்கும் அதிதிகளுக்கும் விருந்தளிப்பதற்கு வேண்டிய செல்வத்தையடையாமல் இவ்விதமாய்ச் சில சமயத்தில் ஏழ்மைத் தனத்தினால் முகத் தாழ்வை அடைகின்றேனே; இதை நீர் அறியவில்லையா? விலையற்றதாயும், நாசமற்றதாயும், மனிதனால் நினைக்க வொண்ணாததாயும், மூவரும் தேவரும் விரும்பக்கூடியதாயுமுள்ள அற்புதப் பதத்தை யளிக்கவல்ல நீர் இவ்வுலகிலுள்ள அற்பச் செல்வத்தை யாசிப்பவனுக்கு அதைக் கொடுக்கலாகாதா? ஞானிகள் இகழக்கூடிய இச் செல்வமில்லாதபடியால் எனக்கு அதிதி பூஜையும், அன்ன தானப்பயனும் கிடைக்காமல் போய் விடுகிறதே; யான் என் செய்வேன்? சிற்சில சமயங்களில் என்னிடத்தில் உமது தத்துவ விஷயமாய்ச் சந்தேகங்களை நீக்குவதற்காக வந்து கூடும் பக்தர்களுக்குப் போஜன மளிக்கக் கூடாமல் தாரித்திரியத்தையடைந்து என் பெண்டிரும் நானும் வெட்கத்தையும், வாட்டத்தையும் அடைகிறோமே; உமது பக்தர்களாகிய எங்களுக்கு இவ்விதக் கஷ்டம் நேரிடுவது உமது கம்பீர சிந்தைக்குத் தகுமா? நானே அநேக சமயங்களில் இவ்வுலகச்

செல்வத்தின் அற்ப ஸ்வரூபத்தை யறிந்து அதை விரும்பாமல் வைராக்கியத்தையே எனது களத்திரத்துக்கும் மக்களுக்கும் போதித்து வருகிறேன். அவர்களும் அவ்வுபதேசத்தை மீறு மல் உமது பாதபக்தியையே சிறந்த செல்வமாகநினைத்து இருக் கிருர்கள். ஆயினும் எனது வீட்டிற்கு வந்தவர்களுக்கு நான் போஜனமளிக்க முடியாமல் பின் வாங்கி லஜ்ஜை அடைந்த முகத்தை அவர்களுக்குக் காட்டி போவீர் என்று சொல்ல நா எழும்பாமலும், புசிப்பீர் என்று சொல்ல தைரியமில்லாமலும் நானும் எனது மனைவியும் எனது மக்களும் அனுபவித்து வரும் கஷ்டங்களுக்கு நீரே ஸாக்ஷியாய் விளங்கும்பொழுது யான் எனது வறுமையைப் பற்றி என் சொல்வேன்'' என்று இவ்வண்ணமாய்ப் புலம்பிக் கொண்டே காட்டிற்குச் சென்று அங்குள்ள கீரை வகைகளையாவது கொண்டு வந்து சமைத்து அதிதிகளுக்கு அளிக்கலாமென்று நினைத்துச் சமீபத்திலிருக் கும் காட்டிற்குச்சென்ருர். கண்ணீர் சொரிய, முகம் வியர்க்க, தளர்ந்த நடையுடன் துக்கத்தால் மனம் குன்றியவனுய் அவ் வேதியர் காட்டிற்குச் செல்லும் பொழுது அவரது கஷ்ட தசையைத் தீர்க்க வேண்டும் என்று நினைத்த தியாகராஜர் தனது ஆபரணமாகிய நாகராஜனை ஏவினர். பரம்பொருளால் ஏவப்பட்ட அந்த நாகபதியும் வெகு விரைவாய் ஓடி வந்து அவ்வந்தணர் வரும் வழியில் ஒரு வேதியனுய்த் தோன்றி, "ஓ வேத பாடக! விலையற்ற இம்மாணிக்கத்தை ஸத்பாத்திரத்தில் தானம் செய்ய வேண்டுமென்று நினைத்து இத்தேசமெங்கும் சுற்றிப் பார்த்தேன்; அவ்வித தானத்துக்குத் தகுந்தவர் நீர் ஒருவரே என்று அறிந்து உம்மைத் தேடி வந்தேன்; என் மீது கருணை செய்து இந்த மாணிக்கத்தைப் பெற்றுக் கொள் வீர்'' என்று கூறி பணிந்து நின்றுன்.

அந்தக் காலம் வரையில் எவ்வித தானத்தையும் வாங் காமலிருந்த அவ்வேதியர் அச்சமயத்தில் மிகுந்த தாரித்திரியத் தையடைந்து மனம் வாடியிருப்பதால், அதற்குச் சம்மதித்து அவ்வேதியனுடன் சென்று காவிரியில் நீராடி அவ்வந்தணனுல்

தானம் அளிக்கப்பட்ட அம்மாணிக்கத்தைப் பெற்றுக்கொண்டு தனது தில்லைநகருக்கு வந்து அம்மாணிக்கமணியின் அழகைத் தனது குடும்பத்தாருக்குக் காண்பித்து இவ்வித மணியை நாம் ஈசனுக்கு அளித்தால் நலமாகுமே; இதை ஈசுவர கைங்கரியத்தில் சேர்க்காமல் விலைக்கு விற்று அந்தத்திரவியத்தினுல் நமது வீட்டிற்கு வரும் அதிதிகளுக்கு அமுது அளிப்பதும் நல்மே; இவ்விரண்டு காரியங்களில் எதைச் செய்வோமென்று சந்தேகப் படுகையில் தியாகேசர் ஒரு குறி சொல்லும் குறவனுய் அவரது வீட்டிற்கு வந்து "ஓ வேதியரே! நீர் ஏன் மனக்கலக்கமடைகிறீர்? உமது மனதின் கருத்தை யான் அறிவேன். இன்று காலையில் நீர் அடைந்த விலையற்ற மாணிக்கத்தை விற்று, அதனுல் அதிதி பூஜை செய்து வருவதே ஈசனுடைய மனதுக்குச் சந்தோஷத்தை விளைவிக்கும். இவ்விதத் தத்துவ ஞானம் உமக்கு ஏன் ஞாபகத்துக்கு வரவில்லை?" என்று சொல்லி மறைந்து விட்டார்.



## 97. பாலனைவேண்டி பாக்கியமளித்த லீலை

ஞானவொளியென்னும் வேதியன் தனதுவீட்டின் இடைகழியின் அருகில் ஒருவன் வந்து அதிதிகளுக்கு அன்னமிடுவதே நலமென்று உரைத்து மறைந்த அதிசயத்தைக்கண்டு இதுவும் பரமேசன் அருள் என்றுநினைத்து அம்மாணிக்கத்தை அந்நகரிலுள்ள ஒரு வியாபாரியிடம் விலைக்கு விற்று அதன் மூலமாய்க் கிடைத்த திரவியத்தினுல் நெடுநாள் வரையில் தனது வீட்டில் வித்தியார்த்திகளாய் வந்தவர்களுக்கும் அதிதியாய் வந்தவர்களுக்கும் போஜனமளித்துச்செல்வத்தினுல் செருக்கை யடையாமல் ஈசுவர பக்தியையே ஆபரணமாய் அணிந்து கொண்டு வாழும் நாளில், அத் திருவாரூரில் வேதகன் என்னும் அந்தணர் ஒருவர் இருந்தார்.

அவர் தனது குருவின் உபதேசப்படி (1) ஈசுவர பக்தியி ஞலேயே நற்கதியடைய வேண்டும் (2) சிவபிரானுடைய தொண்டரிடத்தில் வைக்கும் பக்தியினுலேயே ஸகல பாபமும் நீங்கும் (3) ஈசுவரனுடைய மகிமையைச் சிரவணம் செய்வதி ஞலேயே ஸகல துன்பங்களும் நீங்கும் (4) சந்திரசேகர மூர்த்தியைப் பணிவதினுலேயே உண்மை ஞானம் உண்டாகும் (5) ஈசுவர கைங்கரியம் செய்வதினுலேயே செல்வம் வளரும். என்று பஞ்சாட்சர மகிமையை யறிந்துகொண்டு தம்மிடம் வருவோருக்கு வித்யாதானம், அன்னதானம், வஸ்திர தானம், ஸ்வர்ண தானம் முதலான தானங்களைச் செய்து கொண்டும், ஈசுவர பக்தியையும் மகிமையையும் பிறருக்கு உபதேசம் செய்து கொண்டும் வந்தார். இப்படிப்பட்ட மேன்மைவாய்ந்த அவ்வேதியருடைய நற்குணங்களைப் பற்றி ஸகல ஜனங்களும் புகழ்ந்தார்கள். அவரைச் சிலர் நற்குருவாகப் பற்றினுர்கள். சிலர் பிருஹஸ்பதியெனப் புகழ்ந்தார்கள். இப்படிப்பட்ட அவ் வேதியரின் மனக்கருத்தைப் பரீக்ஷிக்க வேணுமென்று கருதிய தியாகராஜர் ஒரு நாள் ஸந்நியாசி வேஷத்தைப் பூண்டு கொண்டு தண்டம் கமண்டலம் ஜப மாலை இவைகளினுலும் தனது ஒப்பற்ற ஒளியினுலும் பிராணிகளின் மனதில் ஒருவித நற் தோற்றத்தை யளித்துக் கொண்டு ஈசுவரநாம ஸங்கீர்த்தனத் துடன் புண்ணிய புரவீதிவழியாய் நடந்து சென்று அவ்வேதி யர் வாஸம் செய்யும் வீட்டினருகில் சென்று கொண்டிருந்தார் அவரது ஒளியையும் சந்நியாஸ வேஷத்தையும் கண்டு அந்த வேதியர் ஆச்சரியப்பட்டு "இவர்தெய்வத் தன்மை வாய்ந் தவர்போல் விளங்குகிருரே; இவரது பாதத்தில் நாம் பணிந்தா லும் நமக்கு நற்கதி கிடைக்கும்" என்று எண்ணி விரைவாய்ச் சென்று வீதியில் நின்று கொண்டிருக்கும் அந்தச் சந்நியாசி யின் பாதத்தில் வீழ்ந்து பணிந்து தனது வீட்டில் பிக்ஷை செய்யும்படி வேண்டினுர்.

ஆரம்பத்தில் அந்த யதியும் அதற்கிசைந்து, வணங்கி நிற் கும் அவ்வேதியனுக்கு ஆசிகூறி அவரால் அளிக்கப்பட்ட

அர்க்கியம் பாத்தியம் முதலியவைகளைப் பெற்றுக் கொண்டு அவரது வீட்டில் நுழைந்து ஆஸனத்தில் வீற்றிருந்து "ஓ அந்தணோத்தம! நீர் எனது விருப்பத்தைப் பூர்த்தி செய்து வைப்பீராகில் உமது வீட்டில் பிக்ஷையைப் புசிப்பேன். இல்லாவிடில் மற்றொருவரிடம் சென்றாவது என் மனக்கருத்தை நிறைவேற்றிக் கொள்ளப் போகிறேன்" என்று உரைத்தார். அதைக் கேட்ட வேதியன் "பரஸ்வரூபியே! உமக்கு எப்பொருள் வேண்டும்; அதைச் சொல்லும்" என்று சொன்னார். அப்பொழுது அச்சந்நியாஸியும் "ஓ வேதியரே! நான் பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு தடவை ஒரு மந்திரஜபத்தை நிறைவேற்றுவது வழக்கம. அவ்வித ஜபம் இப்பொழுது முடிந்துவிட்டது. முடிவில் இந்த மந்திரத்தின தேவதையாகிய உக்கிரபைரவி தேவதைக்கு ஒரு நரபலி யிடவேண்டும. அவ்வித நரன் நற்குலத்தில் உதித்த வேதியரின் மூத்த குமாரனாயும், பதினாறு வயதைத்தாண்டாதவனாயும், வேதங்களை ஸாங்கமாய் ஓதியவனாயும் இருக்கவேணடும். இவ்வித லக்ஷணமுள்ளவனாக உமது புத்திரன் ஒருவன் இருக்கிறானென்று அறிந்துகொண்டு உமது இல்லத்துக்கு வந்திருக்கிறேன்; நீர் எனது விருப்பத்தைப் பூர்த்தி செய்வீராகில் நான் உமது பிக்ஷையை அங்கீகரிப்பேன்" என்றார்.

அந்த யதி யுரைத்த சொல்லைக் கேட்ட வேதகன் என்னும் அவ் வேதியன் வெகு ஸந்தோஷத்துடன் அவரது பாதத்தில் வீழ்ந்து பணிந்து அஞ்சலி செய்து கொண்டு "நீர் விரும்பியது போலவே எனது மூத்த குமாரனை பைரவீ தேவதையின் நரபலிக்காகப் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று சொல்லி விட்டு அவ் வேதகன் தனது மூத்த குமாரனைக் கூப்பிட்டு இந்த விஷயத்தை அவனுக்கு அறிவித்தான். தந்தையினால் போதிக்கப் பட்ட விஷயத்தை யறிந்து கொண்ட அச் குமாரனும் "நான் நரபலியாய் நிற்பதைப் பற்றி வெகு சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு ஸ்நானம் செய்து விபூதியணிந்து சிவந்த புஷ்பமாலையைக் கழுத்தி

ல்ணிந்து கொண்டு தனது தாயையும் தந்தையையும் வலம் செய்து நின்றான். அப்பொழுது அவ்வந்தண தம்பதிகள் அவரைப் பணிந்து "எங்கள் புத்திரனை அழைத்துக் கொண்டு போய் உமது விருப்பம் போல் தேவதைக்குப் பலியிடுவீர்" என்று சொல்லும் பொழுது அச் சந்நியாசி அவர்களையும் அவர்களது புத்திரனையும் அழைத்துக் கொண்டு போய் அந் நகருக்கு வெளியிலிருக்கும் காளியின் ஆலயத்துக்குச் சென்று அத் தேவதையின் எதிரில் அக் குமாரனை நிற்கச் செய்து, அவ்வந்தணர் கையில் ஒரு வாளைக் கொடுத்து "இவ்வாளினால் உமது குமாரனுடைய சிரஸை வெட்டுவீராக" என்று உரைத்தார்.

அவ்வேதியன் அதற்கு இசைந்து தியாகராஜனுடைய பாத கமலத்தை மனதில் தியானம் செய்துகொண்டு அவ்வாளை வீசுகையில் அப்பொழுது பரமேசன் அந்தச் சந்நியாசி உருவத்தை மாற்றிவிட்டுப் பஞ்சமுகஸ்வரூபத்துடன் அவர்கள் எதிரில் தோன்றி "ஓ பக்தர்களே! உங்கள் மனக் கருத்தின் எல்லையைப் பரீக்ஷிப்பதற்காகவே நான் இவ்வண்ணம் தோன்றினேன். இப்பொழுது உங்களுடைய மேன்மை வெளிப்பட்டு விட்டது. இதனால் நான் மிகவும் சந்தோஷப் படுகிறேன். உங்களுடைய நற்கீர்த்தியானது உலகில் ஈசுவர பக்தி விளங்கும் வரையில் வாழக்கடவது. உங்களுக்கும் இப் புத்திரனுக்கும் இவ்வுலகில் அளவற்ற மேன்மையும் முடிவில் எனது ஐக்கியச் சிறப்பும் உண்டாகக் கடவது" என்று உரைத்துவிட்டு மறைந்து விட்டார். ஈசுவர தரிசனத்தைப் பெற்ற அவர்களும் ஆனந்த மடைந்து உலகில் நெடுநாள் சிறப்புடன் வாழ்ந்து விளங்கினார்கள்.



## 98. தீயிலிருந்து தொண்டரைக் காத்த லீலை.

மற்றொரு சமயத்தில் அச் சோழ நாட்டின் மத்தியிலிருக்கும் அர்ச்சுன க்ஷேத்திரத்தில் விளங்கும் விமலலிங்கஸ்வரூபிக்குச் சிறந்த அபிஷேகம் நிறைவேறப் போவதாகக் கேள்வியுற்ற பக்தர்கள் எண் திசைகளிலிருந்தும் கூட்டம் கூட்டமாய் வந்து கூடினார்கள். அவ்விதத் தொண்டர்களனைவருக்கும் அந் நகரில் தகுந்த வாஸஸ்தானமளித்தல் முதலிய உபசாரங்களெல்லாம் குறைவின்றி நடக்கும்படி சோழ மகாராசன் கட்டளையிட்டான். அவனது கட்டளையினால் சகலரும் எவ்விதக் குறைவுமின்றி களித்தவர்களாய்க் கூடிப் பூச நக்ஷத்திரத்தில் அந்த விமலேசனுக்குத் திவ்யாபிஷேகம் நடக்கப் போகிற சமயத்தை எதிர்பார்த்திருந்தார்கள்.

அவ்விதமே அந்தப்புண்ணிய சமயத்தில் பிராமணோத்தமர்களினால் கொண்டுவரப்பட்ட புண்ணிய தீர்த்தங்களினாலும் பஞ்சகவ்வியத்தினாலும் அபிஷேகம் செய்து வைக்கப்பட்ட பரமேசனைத் தொண்டர்கள் அனைவரும் கைகூப்பி வணங்கித் தேவாலயத்தையும் பிரதக்ஷிணம் செய்து விட்டுப் பக்தேசன் மடத்துக்கு வந்து வேதியர் எல்லோரும் உணவை யருந்திக் கொண்டிருக்கையில் திடீரென்று அந் நகரின் ஒரு பாகத்தில் தீப்பற்றிக் கொண்டது. ஒரு மாளிகையிலிருந்து மற்றொரு மாளிகைக்கு நெருப்பு ஜ்வாலைகள் பரவ ஆரம்பித்த பொழுது அந் நகரிலுள்ள ஸகல ஜீவராசிகளும் கூக்குரலிட்டு அழத் தொடங்கினார்கள். திடீரென்று பெருந் தீப்பற்றிக் கொண்டதற்குக் காரணம் யாது என்று சிலர் திகைத்து நின்றார்கள். சிலர் அத்தீயைத் தணிக்க முயற்சி செய்து முடியாமல் போகவே இந் நகரை விட்டு ஓடுங்கள் என்று பிரஜைகளுக்குக் கற்பித்தார்கள். பசுக்களும், கன்றுகளும், பாலர்களும், மாதர்களும், கிழவர்களும் அந்தப் பெருந்தீயின் ஜ்வாலையைக் கண்டு பயந்து அழுது கதறிக் கொண்டே உயிர்தப்பி ஓடத் தொடங்கினார்கள்.

இவ்விதமாய் அர்ஜுன நகருக்கு ஆபத்து நேரிட்டுச் சகல ஜீவராசிகளும் புலம்பும் பொழுது அந்த அபிஷேகச் சிறப்புங் காக அந்நகருக்குவந்திருந்த சோழராசன் அதைக்கண்டு பயந்து பரமேச! லோகங்களின் க்ஷேமத்தைக் கருதி அபிஷேகச் சிறப்பைச் செய்து வைத்தோமே; இப்பொழுதே இந் நகரம் தீயினால் எரிக்கப்பட்டு ஜீவராசிகள் படும் கஷ்டத்தைக் கண் களால் பார்க்கச் சகிக்க முடியவில்லையே; இவ்விடரைப் போக்க வேண்டுமென்று துதி செய்தான்.

அத்தருணத்தில் தியாகேசர் "ஓ பூபால! திடீரென்று இந் நகருக்குத் தீப்பற்றிய காரணம் விளங்கவில்லையா? பிராமணர்கள் உண்ணும் சமயத்தில் அவர்களுடன் ஒரு சூத்தி ரனும் சேர்ந்து இருக்கிறானே? அதையறியாமல் அச்சூத்திர னுடன் உட்கார்ந்து கொண்டு வேதியர்கள் உண்ணலாமா? இவ்விதத் தகாத காரியத்தை நடத்தும் சமயத்தை எதிர்பார்த் திருந்த கலி புருஷன் தீயினால் நகரையே அழிக்கிறான். இது போல பற்பல அநியாயங்கள் இவ்வுலகில் நடக்குமாயின் அதற் குத் தகுந்த கெட்டபலனைக் கலி வீரனே அளிக்க எதிர்பார்த்து இருக்கிறான். ஸகல பாபத்துக்கும் காரணமாகிய அரசனே இவைகளைப் பாதுகாத்து வரவேண்டும். இக்கலியுகத்தி லுள்ள ஜனங்கள் இவ்விதம் வர்ணாசிரம தர்மங்களை மீறி நடப்பாராகில், அப்பொழுது இவ்வண்ணமாய்த் தீயின் விபத்து, ஜலத்தினால் துன்பம், அகாலமழை, மழை பொழி யாமை, பலவித கெட்ட ரோகங்கள், அகாலமரணம், பொய் பேசுதல், பாபம் செய்யத் துணிதல், பிறரைக் கெடுத்தல், சோரம் முதலான பலவிததுன்பங்கள் உண்டாகிவிடும். இவ்வித துன்பத்தினால் ஜனங்கள் பொறுக்கக் கூடாத வருத்தத்தை யடைந்து தமது தர்மத்தை முற்றிலும் விட்டுப் பாபத்தைத் தேடி நரக வேதனைக்கு ஆளாகி நிற்பார்கள். அப்பொழுது என்னுடைய கருணையும் அவ்விதப்பாபிகளின்மீது செல்லாது. ஆகையினால் காலத்துக்கும் காலனாகிய பூபாலனே ஜனங்கள் தமது ஜாதித் தொழிலை மீறி நடவாவண்ணம் பாதுகாத்து வர

வேண்டும். இல்லாவிடில உலகில் அநியாயத்தை விளைவித்துப் பற்பல துன்பங்களை யளிக்கவல்ல கொடும் கலி வீரன் கண் விழித்து இருக்கிறான்" என்று இவ்விதமாய் ஆகாய வாணி மூலம் உரைத்தார்.

இவ்வித அசரீரி வாக்கைக் கேட்டு அந்தச் சோழமன்ன வனும் ஸாதுக்களும் வியப்படைந்து அவ்வேதியர் கூட்டத்தில் அமர்ந்து சாப்பிட்ட சூத்திரனைக் கண்டு பிடித்து அவனுக்குத் தகுந்த சிக்ஷை விதித்து அவ்வேதியர்களுக்கும் பிராயச்சித்தம் செய்து வைக்கையில் தியாகராஜனுடைய கருணையினால் அத் தீயானது கொஞ்சம் கொஞ்சமாய்த் தணிந்து விட்டது. எவ் வித ஜீவராசிகளுக்கும் துன்பம் நேரிடவில்லை. இவ்வித அற் புதத்தைக் கண்டவரெல்லோரும் ஆனந்தமடைந்து அவ்விடத் திலிருந்து அம் மகாராஜனுடன் புண்ணிய புரத்துக்கு வந்து தியாகேசனைப் பணிந்து துதித்தார்கள்.



## 99. ஏற்றத்திலேறியவனுக்கு உதவியாய் நின்ற லீலை.

இக்கலியுகத்தில் தத்தமக்குரிய ஜாதி தர்மத்தைமீறி நடப்பார் களாகில் அவர்களுக்கும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் அவர்களின் ஸம்பந்த முடையவர்களுக்கும் பலவித துன்பங்கள் நேரிடுமென்று இவ்விதமாய் தியாகேசர் உரைத்ததைக் கேட்டு ஜனங்கள் எல்லோரும் தர்மவழியிலமர்ந்து வாழ்ந்து வந்தார் கள். கொஞ்ச நாளில் சோழ மன்னனுடைய நியாய ஸ்தலத்துக்கு வழக்கைக் கோரி ஜனங்களே வருகிறதில்லை. அதனால் வியப்படைந்த அம் மன்னனும் தமது நாட்டிலுள்ள ஜனங்களின் நற்குணத்தைக் கண்டு இவ்வித மேன்மைக்கெல்

லாம் காரணம் தியாகேசனே என்று நினைத்து அவ்வீசனுக்கு பக்ஷ உத்ஸவம், மாஸ உத்ஸவம், வருஷோத்ஸவம் முதலியவை களை நடத்தி வந்தான்.

அத் தருணத்தில் ஒருநாள் தியாகேசனுக்கு தெப்பத் திருவிழா நடப்பதாய் அறிந்துகொண்ட தொண்டர்கள் கும்பல் கும்பலாய் நானு தேசங்களிலிருந்தும் ஆரூருக்குச் சென்று கொண்டிருந்தார்கள். அச் சமயத்தில் மத்திய தேசத்தில் மதியான் என்னும் வேளாளன் ஒருவன் தானியச் செல்வம் தனச் செல்வம் முதலியவைகளால் புகழ் அடைந்திருந்தான். அவனிடத்தில் வேலைசெய்யும் ஆட்கள் அதிகமாக இருந்தார் கள். அவர்களுள் யூகன் என்னும் வேலைக்காரன் ஒருவன் ஒரு நாள் வயலின் அருகில் வேலை செய்து கொண்டிருக்கும் போது அத் தெப்பத் திருவிழாவில் திருவாரூர் நாதனைப் பார்க்க வேண்டுமென்று ஆயிரக் கணக்கான ஜனங்கள் நான்கு திசை களிலிருந்தும் திருவாரூருக்குச் சென்று கொண்டிருப்பதை யறிந்து தனது யஜமானனிடத்தில் சென்று வணங்கி "நாத னே! இன்று திருவாரூர் நாதனைத் தெப்பத் திருவிழாவில் தரிசனம் செய்வதற்காகப் பக்தர்கள் செல்லுகிறார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்து சென்று ஈசனை அத் தருணத்தில் தர் சிக்க வேண்டுமென்று நினைக்கிறேன். ஆயினும் என்னுடைய சரீரம் உமக்கு அடிமையாகையால் இன்றைய தினம் ஆரூருக் குச் செல்ல உத்திரவு அளிக்க வேண்டும்" என்று உரைத்தான்.

அதைச் கேட்ட அந்த வேளாளன், "ஓ யூக! நீ செல்வது நற்காரியமே; ஆயினும் இப்பொழுது நமது பயிர் நிலத்துக் கும் தோட்டத்துக்கும் தண்ணீர் இறைத்துவிட்டு சமயம் நேரிட்டால் போகக் கடவாய்" என்று சொன்னான். அதைக் கேட்ட யூகன் ஜாதியில் சூத்திரனாயிருந்தாலும், பூர்வ ஜன்ம புண்ணியத்தினால் சிவபக்தி நிறைந்த மனமுடைய வனானபடியால் அவ்வித நிர்பந்த காரியத்திற்கும் இணங்கித் தன்னுடன் கூட வேலை செய்பவர்களிடம் சென்று அவர்களுக் கும் அவ்வித நன்மையைத் தெரிவித்து வெகு சுறுசுறுப்புடன்

வயலுக்கும் தோட்டத்துக்கும் தண்ணீர் இறைக்கும் வேலையில் அமர்ந்தான். அவ்வேலைக்காரருள் ஒருவன் தண்ணீர் இறைக்கும் கிணற்றில் இறங்கி ஏற்றச் சாலினால் தண்ணீரை எடுக்கலானான். அந்த யூகன் என்பவன் தண்ணீர் நிறைந்திருக்கும் அந்த ஏற்றச் சாலை வெளியில் தூக்குவதற்காக ஏற்றத்தின் மீது ஏறி மிதிக்கலானான்.

இவ்விதமாய் அவ்விருவர்களும் வெகு வேகமாய்த்தண்ணீர் இறைக்க ஆரம்பித்து வெகு நாழிகை வரையில் தோட்டத்துக்கும் வயலுக்கும் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார்கள். அத்தருணத்தில் அந்த யூகன் என்னும் ஈசுவரபக்தன் நிமிர்ந்து ஆகாயத்தை உற்றுப் பார்த்தான். அப்பொழுது சூரியன் மேற்குத் திக்கை நோக்கிச் செல்ல ஆரம்பித்தான். அதைக் கண்டு மனங்குழைந்த அவன் "ஓ லோக நாதனே! ஈச! நான் வெகு நாளாய் உமது தரிசனத்திற்காகச் சென்று கொண்டிருக்கும் புண்ணிய சீலர்களைக் கண்டும் அவர்கள் உமது விஷயமாய்ப் போற்றும் அற்புதத் துதிகளைக் கேட்டும் இருக்கிறேனே தவிர உமது பாதங்களைக் காணவேயில்லை. நான் இக்காலம் வரையில் வாழ்நாளை வீணாகக் கழித்து விட்டேன். இன்று உமது வடிவழகைத் தர்சிப்போம் என்று எண்ணினேன். அதற்கு இடையூறாக என் யஜமான் இத்தண்ணீர் இறைத்தலை ஏற்படுத்திவிட்டான்; இவ்வளவு நேரம்வரையில் வெகுவேகமாய் நீர் இறைத்தபோதிலும் என் யஜமானன் குறிப்பிட்ட அளவில் ஒரு பாகம் தான் நிறைவேறி யிருக்கிறது. மற்ற பாகத்துக்கு நீர் இறைப்பதற்குள் கதிரவன் மறைந்து விடுவான். பிறகு நாங்கள் எப்படி ஆரூருக்குச் செல்ல முடியும்? உலகப் பொருளின் அம்சமே! ஈச! இன்று உமது தர்சனம் எங்களுக்குக் கிடைக்கப் போகிறதில்லை யென்றே தோன்றுகிறது. எங்களுடைய பாபங்களை நாங்கள் பல ஜன்மங்களினாலும் நீக்க முடியாது. நாங்கள் பெரும் பாபிகள். இவ்வளவு புண்ணிய ஆத்மாக்கள் எல்லோரும் உமது தரிசனத்திற்காகப் போகிறார்களே; இந்தப் பாக்கியம் எங்களுக்குக் கிடைக்க வில்லையே.

நான் உமது மூர்த்தியை இதுவரை தர்சித்ததேயில்லை; உம்முடைய பாத பக்தியும் என் மனதில் நிற்கவில்லை. நான் நீச சாதியிற் பிறந்து பாபியாயிருக்கிறேனே'' என்று மனங் குழைந்து கண்ணீர் சொரிந்து குரல் தளர்ந்து விம்மி விம்மி அழுது கொண்டும், ஏற்றத்தின் வேலையை நடத்திக் கொண்டும், ''ஈச ! இப்பாபிக்கு அருள் புரியாயோ; நாத ! ஆரூர்ச் செல்வனே ! சிவஸ்வரூப !'' என்று அழுதுகொண்டிருப்பதை யறிந்த தயாநிதியாகிய தியாகராசர் அத் தருணத்தில் அத் தொண்டனின் மீது கருணைகாட்ட ஆரம்பித்தார். அப்பொழுது அவன் தாகத்தினுல் உண்டான விடாயைத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று ஏற்றத்திலிருந்து கீழிறங்கித் தண்ணீர் அருந்தி சற்று நேரம் களைத்து நின்றுன். அவன் ஏற்றத்திலிருந்து இறங்கி யிருந்த போதிலும் ஈசனுடைய அருளால் அந்த ஏற்றம் தானுகவே தண்ணீர் இறைக்க ஆரம்பித்தது.

மனிதர் இல்லாமலே ஏற்றத்தினுல் வெளியில் கிளப்பப்பட்ட ஜலப் பெருக்கினுல் தோட்டங்களும், தோட்டக் கால்களும், வயல்களும் நிமிஷ நேரத்துக்குள் நிறைந்து விட்டன. அதைக் கண்ட தொழிலாளர்களும் குடித்தனக் காரர்களும் அந்த ஏற்றத்தின் அருகில் வந்து கண்டு அந்த வியப்பை மதியானுக்கு அறிவித்தார்கள். அவனும் விரைவாய் ஓடிவந்து அதைக் கண்டு ஆச்சரியப்பட்டு அந்த யூகனைப் பார்த்து ''ஓ யூக ! நீ சிறந்த பக்தன் போல் தோன்றுகிருய். உன்னிடத்தில் ஈசன் கருணையில்லாவிட்டால் என்னுல் குறிப்பிட்ட நிலத்துக்கும் மற்றுமுள்ள நிலங்களுக்கும் இவ்வண்ணம் தண்ணீர் இறைக்க முடியாது. மனிதரில்லாமல் ஏற்றமும் நீரை வெளியில் இறைக்காது. ஆகையால் ஈசன் அருளைப் பெற்றுக் கொள்வதற்காக நீ இப்பொழுதே திருவாரூருக்குச் செல்வாய் என்று விடை கொடுத்தனுப்பிவிட்டு அவ் வேலைக்காரன் மீது ஈசன் வைத்த கருணையைப் பற்றி பலவாறு துதித்து மகிழ்ந்தான்.

ஒரு காலத் தோன்றாகி நின்றார் போலும்
ஊழிபல கண்டிருந்தார் போலும்
பெருகாமே வெள்ளந் தவிர்த்தார் போலும்
பிறப்பிடும்பை சாக்கா டொன்றில்லார் போலும்
உருகாதா ருள்ளத்து நில்லார் போலும்
உவப் பார்தம் மனத் தென்றும் நீங்கார் போலும்
அருகாக வந்தென்னை யஞ்சே லென்பார்
அணி யாரூர் திருமூலட் டானனாரே. —திருத்தாண்டகம்



## 100. வேதியனுக்கு வழிகாட்டிய லீலை.

விருதராஜர் என்னும் வேதியர் ஒருவர் காசி நகரத்திலிருந்து புறப்பட்டுத் திருவாரூருக்குச் சென்று கொண்டிருந்தார். அவர் ஏகாம்ர நாதருடைய பாதகமலத்தைச் சென்னியில் சூடிக் கொண்டு பாலிய வயது முதல் எவ்வித பாபங்களையும் செய்யாதவராய்ச் சிறந்த சிவ பக்தராய்த் தேவகாரியம் ரிஷிகாரியம் அதிதி காரியம் முதலான நற்காரியங்களைச் செய்து வருபவராய் இருந்தபடியால் அவ்வேதியன் எந்த தேசத்தில் எவ்விடத்தில் எந்நேரத்தில் சென்ற போதிலும் ஸகல ஜனங்களும் அவருக்கு விசேஷ மரியாதை செய்து அவரிடமிருந்து அநேக வித ஈசுவரதத்துவங்களை அறிந்து வந்தார்கள்.

இப்படிப்பட்ட விருதராஜன் என்னும் அவ்வேதியர் தேசத்திலுள்ளோர்களாலும் நகரங்களிலுள்ளோர்களாலும் கிராமங்களிலுள்ளோர்களாலும் மரியாதைசெய்யப்பெற்றவராய் அங்கங்குச் சிலநாள் தங்கியிருந்து அநேக கிராமங்களையும், நதிகளையும், காடுகளையும் தாண்டிக்கொண்டு திருவாரூருக்குச்

சென்றுகொண்டிருக்கையில் அவரது தர்மபத்தினிக்குக் காலில் பிணி உண்டாகி நடக்கச் சக்தியற்றவளாய் மெதுவாய் நடக்கலானாள்.

அவ்விதமாய் அவ்விருவர்களுடைய நடையானது மந்தமாகி விடவே சூரியன் மேற்குத் திசைக் கடலில் ஆழ்வதற்குள் அவர்கள் செல்லவேண்டிய வழியானது நீண்டுகொண்டே இருந்தது. அத்தருணத்தில் செவ்வானமும் வருணன் திசையில் விளங்கிற்று. சற்று நேரத்திற்குள் சூரிய பிம்பம் காணாமல் மறைந்துவிட்டது. ஆகாயத்தில் இருள் மூடியது. ஜனங்களின் கண்களுக்கு மேடு, பள்ளம் , மரம், மலை, வீடு திசை, வழி இவைகள் புலப்படவேயில்லை. அத்தருணத்தில் அவ்வேதியனும் அவரது மனைவியும் சென்றுகொண்டிருக்கையில் அக்காட்டிலுள்ள துஷ்ட மிருகங்களின் முறுமுறுப்புச் சத்தமும் அவைகளின் நடமாட்டவொலியும் அவர்கள் செவியில் புகுந்தன. அதனால் அளவற்ற பயத்தையடைந்த அவ்வந்தண தம்பதிகள் எதிரிலுள்ள கிராமத்துக்குச் செல்லும் வழியிலிருந்து விலகி வேறுவழியாய்ச்சென்று நடுக்காட்டுக்குள் நுழைந்து ஒரு யாமநேரம் வரையில் அலைந்து திரிந்து நேரான வழியை யடையாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில் அவ்வேதியன் மிகவும் மனக் குழப்பத்தை யடைந்து, "ஓ! பரம்பொருளே! புண்ணியபுர நாதனே! வேதாந்தச் சுடரே! யோகிகளின் ஞான தீபமே! மணி விளக்கே! ஆனந்த ரூபமே! உமது வடிவழகைத் தர்சிப்பதற்காக நாங்கள் வரும் வழியில் இவ்விதக் கஷ்டங்கள் நேரிட்டு வழியை விட்டுவிலகி இக்காட்டின்கண்ணே கண்ணில்லாக் குருடன்போல் உழலுகின்றோமே. இவ்வனத்திலுள்ள மிருகங்களின் வயிற்றில் நாங்கள் சேர்ந்துவிடினும், இந்த ஜன்மத்தில் உமது வடிவழகைக் காணுவிடினும் மறுஜன்மத்திலாவது உமது பாதத்தைக் காணும்படி அருள்புரிவீர்" என்று ஈசனைக் காணுக் குறையினால் மனங்குழைந்து வாடிப் புலம்பலுற்றார்.

ஸாதுக்களுக்கு நன்மையளிக்கும் திருவாரூர் நாதன் அவ்

வேதியரின் கஷ்டத்தைக் கண்டு மனமுருகி அப்பொழுதே ஒரு வில்லியின் உருவமெடுத்துக்கொண்டு அவர்கள் பக்கமாய்ச் சென்று " ஓ! வழிப்போக்கர்களே! நீங்கள் ஏன் இக்கொடிய காட்டில் இவ்வழியாய் வருகிறீர்கள். இவ்வழியைவிட்டு விட்டு நான் கூறும் வழியைப்பற்றுவீர்கள். இவ்விதவழியாய்ச் செல்லுவீர்களாகில் நீங்கள் இன்னும் ஒரு முகூர்த்த காலத்துக்குள் சிதம்பரப்பதியை யடைவீர்கள்" என்று மொழிந்து அவர்களை அழைத்துக்கொண்டு கொஞ்ச தூரம் வரையில் வழிகாட்டிய பிறகு மறைந்து விட்டார்.



## 101. தூயவனைப் பறக்கச் செய்த லீலை.

திருவாரூருக்குச் சமீபத்திலுள்ள தக்ஷிண புரத்தில் பாலப் பிராயம் முதல் பரிசுத்தமான கர்மங்களையே அனுஷ்டித்துக் கொண்டிருந்தபடியால் தூயவனென்று பெயர் பெற்ற ஓர் அந்தணர் இருந்தார். ஒரு நாள் அவருக்குக் கடுமையான நோய் உண்டாயிற்று. அவருடைய மக்களும் உறவினரும் அந்நோய் தணியும் வண்ணம் நல்ல ஔஷதங்களைக் கொடுத்துச் சிலநாள் வரையில் வீட்டிலேயே இருக்கும்படிச் சொன்னார்கள். அவ் வேதியர் தினந்தோறும் தியாகராஜனுடைய பாதசேவை செய்யாமல் உண்பதில்லை யென்னும் விரதத்தைக் கைப்பற்றி யிருந்தமையால் அந்நோயினால் வாடும் சமயத்திலும் ஆரூருக்குச் செல்ல ஆரம்பித்தார்.

அதைக் கண்ட அவர் மக்கள் தடுத்து அவரது பாதத்தில் பணிந்து, " தந்தையே! உங்களுக்கு நோய் கண்டிருக்கிற

தல்லவா? இத்தருணத்தில் நீங்கள் புண்ணிய புரத்துக்கு நடந்து செல்லத்தகுமா? நீர் நடந்து செல்வீராகில் மருந்துண் பதினுலுண்டாகும் பயனும் முறிந்து விடுமே; இன்னும் சில நாட்கள் வீட்டிலேயே தங்கியிருந்து வியாதி சொஸ்தமானதும் பின்பு திருவாரூருக்குச் செல்லலாம். அதுவரையில் ஈசனை மனதிலேயே தியானம் செய்து கொண்டிருப்பீர்கள்" என்ருர்கள். அவர்கள் சொன்னதைக் கேட்காமல் அத்தூயவன் என்பவர் திருவாரூருக்குப் புறப்பட்டார். அப்பொழுது அவருடைய மக்கள் அவரைத் தடுத்து வலுவில் ஒரு அறையிலடைத்துக் கதவை மூடி விட்டார்கள்.

இவ்விதமாய் அம்மக்கள் அவரைத் தடுத்து விடவே வெளியில் செல்ல முடியாத அத்தூயவன் என்பவர் அச்சாலைக்குள் அகப்பட்டுக் கொண்டு அன்றைய தினத்தில் ஈசனுக்கு நடக்கும் விசேஷ அபிஷேக விமரிசையையும், மூர்த்தியின் ஸேவையையும் மனதில் நினைத்துக் கொண்டு, "மோகத்தைத் தவிர்க்கும் பரம் பொருளே! உமையாள் பாகனே! பரஞ்ஜோதியே! சடை மேல் பிறையைத் தரித்து விளங்கும் தூயவனே! புண்ணிய புரத்திலுறையும் புண்ணியனே! தேவனே! அன்பர்க்கன்பனே! உமது பாத கமலத்தை யான் எவ்விதம் காண்பேன்? எனது மாயையை யழிக்கும் மறைப் பொருளே! உமது முடியினழகை யான் எப்பொழுது காண்பேன்?" என்று ஈசனுடைய குணங்களை இவ்விதமாய் நிமிஷந்தோறும் சொல்லிக் கொண்டே அத் தூயவன் என்னும் அந்தணர் அவ்வறைக்குள் பக்திப்பெருக்கினுல் துள்ளித் துள்ளி எழும்பினர். அவரது பக்தியின் மேன்மையைக் கண்ட தியாகேசர் அத்தருணத்தில் துள்ளி எழும்பிய அவரது சரீரம் ஆகாயத்தில் பறந்து செல்லும்படி நினைத்தார்.

அப்பொழுதே அவ்வந்தணர் ஈசுவர பக்தியாகிய கோலை ஊன்றிக் கொண்டு ஆகாயத்தில் மற்றெவ்விதப் பிடிப்புமின்றித் தனது சரீரத்துடன் வெளிக் கிளம்பிப் பறந்து கொண்டே திருவாரூருக்குச் செல்லுகையில் அவரது நாம ஸங்கீர்த்தனத்

த்வனியைக் கேட்ட மக்கள் எல்லோரும் அவ்வந்தணரது அற்புத கமனத்தைக் கண்டு வியப்படைந்து அதற்கு ஈசுவர பக்தியே துணையாகுமென்று நினைத்து அவ்வந்தணரையும் அவரால் தொழப்படும் ஈசனையும் வணங்கித் துதித்து மகிழ்வெய்தினர்.



## 102. தோழனைக் காப்பாற்றுவதற்காக ஓடிவந்த லீலை.

திருவாரூரிலுள்ள கதிதானனென்னும் மந்திரி ஒருவன் ஆதிகாலம் முதல் ஈசன் செய்துவந்த அற்புத லீலைகளைக் கேட்டும், தியாகராஜனுடைய வடிவழகைக்கண்டும் மனமுருகி அவரது பக்தியையே தனக்குச் சிறந்த செல்வமாக நினைத்து தனது செல்வத்தையெல்லாம் ஈசனுடைய பாதார விந்தத்தில் ஸமர்ப்பித்துவிட்டு பரமேச பக்தனாய் விளங்கினான். அம் மந்திரியுடன் யாராகிலும் பேசும் தருணத்தில் உமக்கு இவ்வுலகில் யாராவது ஸ்நேகிதருண்டோவெனில் தனக்குத் தியாகராஜனே தோழனென்று விளம்புவான். நான் தியாகராஜனுக்குத் தோழன். தியாகராஜனும் எனக்குத் தோழன் என்று இவ்விதமாய் ஈசனிடத்தில் தோழத் தன்மையைப் பாராட்டிக்கொண்டு வந்தான். சிற்சில சமயங்களில் தனது புத்தியில் தகுந்த யுக்தி தோன்றுவிடில் அப்பொழுது வேகமாய் ஆலயத்தையடைந்து தியாகராஜாவின் எதிரில் அமர்ந்து கண்களை மூடிக்கொண்டு நெடுநேரம் ஜபம் செய்வான். அவரது கருணையினால் தகுந்த யுக்தி உதித்ததும் "எனது துணைவனாகிய பரமேசனிடம் சென்றேன். அவர் அருளிச்செய்த யுக்தி இது" என்று ஆனந்தத்துடன் மொழிவான்,

இவ்விதமாய் ஸகல ராஜகாரியங்களிலும் "இது என் தோழன் மொழிந்த யுக்தி; இது என் தோழன் காட்டிய வழி; இது என் தோழன் மனதுக்கு உகந்த வழி; இன்று எனது தோழனுக்கு உத்ஸவ தினம்; இன்று எனது தோழனாகிய தியாகராஜனுடைய கலியாண தினம்" என்று இவ்விதமாய் எவ்விடத்திலும், எந்நேரத்திலும், எக்காரியத்திலும் அம்மந்திரி தியாகேசனைத் தனக்குத் தோழனென்றே வழங்கி வந்தான்.

இவ்விதமாய் அம்மந்திரி தோழனுக்குரிய சகல உபசாரங்களையும் ஈசனுக்களித்து வாழுங்காளில், அவன் அவ்வாறு நிர்மல மனமுடையவனாய்த் தன்னைத் தோழனென்று பாராட்டி வருவதை ஈசனும் அங்கீகரித்துக்கொண்டு அவன்மீது கருணை புரியவே அம்மந்திரியின் நியாயமுறைகளால் உலகு எவ்வித இடருமின்றி அளவற்ற செல்வத்துடன் ஓங்கி வாழ்ந்தது.

அத்தருணத்தில் பாண்டிய நாட்டரசன் காரணமின்றிப் படையெடுத்துவந்து சோழ நாட்டில் நுழைந்து புண்ணிய புரத்தை முற்றுகையிட்டு வீரகர்ஜனை செய்துகொண்டு புண்ணியபுரத்துக்குள்ளிருக்கும் ஜனங்களுக்குப் பெரிய பயத்தை உண்டுபண்ணினான். அதைக்கண்ட சோழ பூபாலன் தனது சேனையைத் திரட்டிக்கொண்டு அம்மன்னவனை எதிர்த்துச் சண்டைசெய்கையில் அவ்விரண்டு மன்னவர் படைக்கும் நேரிட்ட அக்கொடிய சண்டையில் ஜயமும் அபஜயமும் மாறி மாறி வந்தது. அதைக்கண்ட அந்தக் கதிதானனென்னும் மந்திரி யுத்த பூமியை நாடி அங்கு விளங்கும் தனது ராஜனுக்கும் சேனைக்கும் தைரியத்தைக் கூறி அரிய யுத்த முறைகளை விளம்புகையில் அவ்வீரர்களில் சிலர் "ஓ மந்திரி இரத்தினமே! காரணமின்றி இவ்விதமாய் அகாலத்தில் பாண்டியன் நம்மீது படையெடுத்து நமது சேனையை நாசம் செய்கிறானே; இப்பொழுது உமது மந்திராலோசனை பயன் தருமா? நீர் எப்பொழுதும் தியாகராஜனைத் தோழனென்றே புகழ்ந்து வருகிறீரே? அவ்வீசன் உமக்குத் தோழனாயிருப்பது ஸத்தியமா

யின் உமது பக்கத்தைச் சார்ந்த நாங்கள் இவ்வண்ணம் துன்பப் படும்பொழுது அப்பரம்பொருளாவது நீராவது எங்களுக்கு உதவிசெய்யலாகாதா''? என்றுரைத்தார்கள்.

அதைக்கேட்ட மந்திரியானவன் தனது சேனைக்கு நேரிட்டிருக்கும் இடரை நீக்கக் கருதி "ஓ என்னுயிர்த் தோழ! இப்பொழுது நீர் இங்கு வந்து எனக்கு உதவிபுரியா விடில் என்னை நான் இன்று யுத்தகள தேவதைக்குப் பலி யாக்குவேன்'' என்று கதறிக் கூப்பிட்டான். நெடுநாளாய் மந்திரியின் தோழனென்னும் பிரஸித்தியையடைந்த தியாகேசர் அப்பொழுது ஒரு ராஜகுமாரன் போல் வேடம் பூண்டு தனது பொற்கோயிலிலிருந்து வெளிக்கிளம்பி திருவாரூர் நகர வீதி யாய் வெளியில் வந்து அந்த ரண பூமியின் அருகில் நின்று கொண்டிருக்கும் மந்திரியினருகில் சென்றூர்.

அத்தருணத்தில் தேவியாரின் பாதோபசாரம் செய்வதற் காக வந்திருக்கும் தேவமாதரும் இந்திராணியும் அந்த அந்தி நேரத்தில் கமலநாயகியின் அருகில் தியாகேசன் இல்லாமை யைக்கண்டு வியப்படைந்து லோகமாதாவைப் பணிந்து தியா கேசனைப் பற்றி விசாரித்தார்கள். அதைக் கேட்ட பார்வதி தேவியும் தோழனைக்காப்பாற்றுவதற்காக தியாகேசர் வெளியில் போயிருக்கிறூர் என்று உரைத்தாள். அதைக் கேட்ட தேவ மாதரெல்லோரும் ஈசனது கருணையைப் போற்றிப் புகழ்ந்து நகருக்கு வெளியில் போய் விமானத்தில் இருந்து கொண்டு அந்த யுத்த பூமியை நோக்குகையில் ராஜகுமாரனுய்த் தோன் றிய பரமேசன் தோழனுகிய அம்மந்திரியின் அருகில்சென்று ஒரு வில்லை வளைத்து பகையரசர் படைமீது பாணங்களைப் பிரயோகிக்கவே அதனுல் அப்பாண்டிய சேனை பிளவுபட்டு ஓடுவதைக்கண்ட அத்தேவ மாதரும் வானவரும் பரமேசன் சிரஸ்ஸிலும் அம் மந்திரியின் சிரஸ்ஸிலும் புஷ்ப மாரி பொழிந்து துதி செய்தார்கள்.



## 103. பரோபகாரத்தின் பெருமையைக் காட்டிய லீலை

திருவாரூரில் வைச்ய குலத்திலுதித்த சதயோகி யென்னும் சிவ பக்தரொருவர் இருந்தார். அவர் தயை நிறைந்த மனமுடையவர். சிறந்த ஆசார சீலர். பிறர் அனுபவிக்கும் துன்பத்தைக் கண்டு ஆற்ளுத மனமுடையவர். அவர் பிறருக்கு உபகாரம் செய்வதையே தனது கடமையாக நினைப்பவர். இப்படிப்பட்ட வைச்யன் பாலியம் முதல் அன்னமளித்தல், வஸ்திரமளித்தல், வசிக்க இடமளித்தல், ஏழைக் குழந்தைகளுக்குப் பாலளித்தல், எண்ணெயீதல், கோடை காலத்தில் ஸகல ஜீவ ராசிகளுக்கும் தண்ணீரூட்டல், பசுக்களுக்கு உணவை யளித்தல் முதலான நற்காரியங்களைச் செய்துகொண்டே தியாகராஜ பக்தியுடன் வாழ்ந்து வந்தான்.

பரோபகாரத்தையே விரதமாக உடைய அவ்வைச்யன் தினந்தோறும் சிவ பக்தர்களுக்கும் மற்றுமுள்ள ஜீவராசிகளுக்கும் நேரிடும் குறைகளை விசாரித்து குறைகளுக்குத் தக்கவாறு பரிகாரம் செய்து வரும் சமயம் ஒரு நாள் அவரது புத்திரனுக்குச் சுரம் வந்தது. அதனுல் அவரது மனைவியும் அப் புத்திரனும் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில், அச் சிவ பக்தர் அந்நகரில் மற்றொரு ஏழைக் குழந்தைக்கு சுரம் வந்திருப்பதாய் அழைக்கப்பட்டவராய் அங்குச் சென்று சில வைத்தியர்களைக் கூப்பிட்டு அவர்கள் மூலமாய் அக் குழந்தைக்கு மருந்து அளிக்கச் செய்து கொஞ்சம் அனுகூலத்தை உண்டு பண்ணி விட்டுத்திரும்புகையில், நடுவழியில் வேதியன் ஒருவன் வஸ்திரயாசனை செய்ய, மனமிரங்கி அவ்வேதியருக்கு ஒரு வஸ்திரத்தை விலைக்குவாங்கி அளித்துவிட்டுத் திரும்புகையில், மற்றொருவனது பசுவானது மேயச் சென்று திரும்பிவராமையால் வீட்டில் கதறிக் கொண்டிருக்கும் கன்றுக் குட்டிக்கு அதனது தாயைக் கொண்டுவந்து சேர்ப்பதாய் ஜாடைகளைக் காட்டி விட்டுச் சில வேலைக்காரருடன் நான்கு திசைகளிலும் சென்று இடையர்களையும் அங்குள்ள மற்றவர்களையும் விசாரித்துக்

கொண்டு வெகுதூரம் சென்று தான் அறிந்த சிற்சில அடை யாளங்களால் அந்தப் பசுவைக்கண்டு பிடித்துக் கொண்டுவந்து கன்றின் சமீபத்தில் சேர்த்தார்.

இவ்விதமாய் அந் நகரிலுள்ளவருக்கும் அத்தேசத்திலுள் ளவர்களுக்கும் மற்றுமுள்ள ஜீவராசிகளுக்கும் எவ்விதத்தீங்கு நேரிட்டாலும் தன்னால் முடியும்வரையில் அவைகளைத்தடுத்துப் பரோபகாரம் செய்வதையே ஜன்மாவின் பயனாக எண்ணிக் கொண்டு இருக்கையில் அவ்வைச்ய குமாரனுக்குச் சுரம் நாள் தோறும் அதிகமாகிக் கொண்டு உயிருக்கு அபாயத்தை விளைவிக்கும் போல் தோன்றிற்று. அதைக் கண்ட சிலர் "ஹா ஹா! இது என்ன ஆச்சரியம்! இந்தச் சதயோகி வைச் யன் தன் குமாரனது வியாதியைக்கவனிக்காமல் இருக்கிறானே! இவனது புதல்வன் இறந்து விடுவான் போல் தோன்று கிறானே; தந்தையின் முயற்சியினாலல்லவா மக்கள் வளர்ந் தோங்க வேண்டும். இவ்வித நியாயமிருக்க பிறர் மக்களைப் போஷித்துக்கொண்டும் பரோபகாரம் செய்துகொண்டும் இருக் கும் இந்தச்சதயோகியின் புத்திரனை, ஈசா! நீராவது காப்பாற் றலாகாதா? உமது பக்தியைப் பெற்று விளங்கும் இவரது புதல்வனைக் காப்பது உமது பாரமாகும்" என்று இவ்விதமாய் அந்நகரிலுள்ளவர்களும், அவ்வைச்யன் உறவினர்களும் முறை யிடும்பொழுது தியாகராஜர் அசரீரியாய், "ஸுமதிகளே! இவ் வைச்ய சிரேஷ்டனுடைய குமாரன் வியாதியினால் வருந்து வதை யானறிவேன். இவ்வுலகிலுள்ள ஸகல ஜீவராசிகளும் தாங்கள் செய்யும் பாபங்களை அனுபவித்தே தீரவேண்டும என்று நான் ஸங்கல்பம் செய்திருக்கிறேன். ஆயினும் உங்கள் வேண்டுகோளினாலும் அப்பக்தன் செய்து வரும் பரோபகாரத் தின் சிறப்பினாலும் அவனது புதல்வனின் வியாதி இன்னும் சில முகூர்த்தங்களுக்குள் தணிந்து விடும். இவனைப் போல் பரோபகாரம் செய்பவர்களுக்கு ஸகல ரோகங்களும், பாபங் களும் குன்றி விடும். எனது கருணைக்குப் பாத்திரர்களாகி இவ்வுலகில் சிறந்த செல்வத்துடன் வாழ்ந்து ஜன்மத்தின் முடி

வில் தூய்மையை யடைந்து நமது பதவியையுமடைவார்கள்" என்று உரைத்தார்.



## 104. காத்தியாயன மகரிஷியால் தன் பதம் காட்டிய லீலை.

தத்துவ ஞானியாகிய காத்தியாயன மகரிஷியானவர் தமது சிஷ்யர்களுடன் தீர்த்த யாத்திரையாகத் தென் திசையை நோக்கிக் கிளம்பி புண்ணிய புரத்துக்கு வந்தார். அம்மகரிஷியும், அவரது சிஷ்யர்களும் இந்திர தீர்த்தம், கமல தீர்த்தம் முதலான புண்ணியபுர தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து நித்திய ஜபங்களையும், நைமித்திக ஜபங்களையும், மகா ஜபங்களையும், விசேஷ ஜபங்களையும் செய்து முடித்து விட்டு அத்தலத்துக்கு மரகதம் போல் விளங்கும் தியாகேசனைப் பணிந்து நிற்கையில், அம்மகரிஷி வந்திருக்கும் விஷயத்தை யறிந்து கொண்ட அந்த க்ஷேத்திர வாஸிகளான வேதியர்களும், மற்றுமுள்ள பக்தர்களும் ஒன்று கூடி அம்மகரிஷிக்கு நமஸ்காரம் செய்து, "தத்துவ ஞானத்தினால் விளங்கும் தபோதனரே! நாங்கள் பூர்வ ஜன்மங்களில் செய்த புண்ணிய வசத்தினால் இப்புண்ணிய க்ஷேத்திரத்துக்குத் தாங்கள் வரும்படி நேரிட்டது. ஸம்ஸார வாழ்க்கையில் ஆழ்ந்து மதியிழந்து அஞ்ஞானிகளாயிருக்கும் எங்கள் மீது கருணை செய்து தியாகேசனுடைய தத்துவஸ்வரூபத்தைச் சொல்லவேண்டும்" என்றுகேட்கையில் அம்மகரிஷியும் அவ்வண்ணமே தியாகராஜனுடைய மேன்மையையுரைக்கலானார்.

உடனே அவருடைய மனம் சிலைபோல் ஸ்தப்தமாய் அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை. அப்பொழுது தியாகேசன் சிந்தையும் மொழியும் செல்லா நிலையாகிய தனது ஸ்வரூபத்தை அதிகாரிகளாகிய வேதியர்களுக்கும் மெய்யடியார்களுக்கும் காத்யாயன மஹரிஷியின் மூலமாய் உணர்த்த ஸங்கல்பித்தார். உடனே மஹரிஷியும் தனது மனோஜாட்யத்திற்குக் காரணம் தனது தற்போதமேயெனவுணர்ந்து ஸ்ரீ தியாகேசனைத் தியானிக்கையில் மனம் ஸத்வாகாரப்பட்டு ஸ்பூர்த்தியுண்டாயிற்று. உடனே அவர் "கேளீர் பிராமண ச்ரேஷ்டர்களே! எவ்வுலகுக்கும் நாதனுகிய இப்பரம மூர்த்தியின் தத்துவத்தை வேதங்களும், வேதாந்தங்களும் கூறமுடியாமல் இருக்கையில் யான் எவ்விதம் கண்டுகொள்வது? ஆகிலும் பூர்வ மஹரிஷிகள் சிறந்த தத்துவத்தின் மேன்மையினுல் ஈசனது அருளால் அடையப்பட்ட மெய்ஞ்ஞானத்தினல் ஈசனது பதநிலைமையை யறிந்து சிஷ்யர்களுக்கு உபதேசித்து வந்திருக்கிருர்கள். அங்ஙனம் அவர்களின் உபதேசப்படி தியாகேசன் தத்துவத்தைச் சொல்லுகிறேன்.

உபநிஷத் ஸ்வரூபியாயும், சைதன்ய ஸ்வரூபியாயும், ஞானிகளின் மனதில் ஞானச்சுடராயும் விளங்கும் இத்தியாகேசனே மறைப்பொருள். ஸகல மந்திர ஸ்வரூபியாயும், ஸகல யந்திர ஸ்வரூபியாயும் இப்புண்ணிய புரத்தில் தோன்றி பக்தர் மீது கருணையுடன் விளங்கும் இத்தியாகேசனே தனது ஸங்கல்பத்தினுல் பலவிடங்களில் பல சமயங்களில் பற்பல உருவாய்த் தோன்றுகிருர். பதி—பசு—பாசம் என்னும் முப்பொருளாய் விளங்கும் இப் பரமேசனே ஈசானம் அகோரம் தத்புருஷம் வாமதேவம் ஸத்யோஜாதம் என்னும் ஐந்து மந்திரஸ்வரூபியாய் மூலாதாராதி ஷட்கமலங்களில் விளங்குகிருர்.

1. மாணிக்க மண்டபத்தின் நடுவில் ஆதார பத்மாஸனத்தின்மேல் வ, ஶ, ஷ, ஸ என்னும் நான்கு பீஜங்களின் ஸ்வரூபியாய் ஹ்ரீங்கார வாச்சியமாய் விளங்குகிருர். இங்கே ஐம்முகச் சிவனது ஆதார சக்தியாகிய குண்டலினீ சக்தி தேவதை—கணேசன் அதிதேவதை.

2. அதிஷ்டான பத்மாஸனத்தில் ப, ஹ ஃ, ய, ர, ழ என்னும் ஆறிதழ்க் கமலத்தின் நடுவே நகாரபீஜ வாச்சியமாய் விளங்குவது தத்புருஷ சிவமா மென்பர். இந்த சக்ரத்திற்கு அதிதேவதை நான்முகப் பிரமன் சிருஷ்டி கிருத்தியம்.

3. மணிபூரக சக்கிரமாகும் தசதள கமலத்தில் முறையே ட, ஊ, ண, த, ய, த, ய, க, வ, ஶ என்னும் பீஜாக்ஷரங்களுக்கு மத்தியில் மகார வாச்சியமாய் விளங்குபவர் அகோர

சிவமாவர். இந்த ஸ்தானத்திற்கு அதிதேவதை விஷ்ணுவென்று சாஸ்திரங்கள் கூறும. ஸ்திதி கிருத்தியம.

4. பன்னிரண்டு தளங்களையுடைய அநாஹத சக்ரத்தில் க, வ, ம, வ, ஈ, அ, அ, ஐ, ஸ, ஞ, ட, ० என்னும் பன்னிரண்டு பீஜங்களின் மத்தியில் ஸிகாரபீஜ வாச்சியமான ஸத்யோஜாத மூர்த்தி விளங்குகிறார். இந்த சக்கிரத்திற்கு அதிதேவதை ருத்ர மூர்த்தியாவர். ஸம்ஹார கிருத்தியம்.

5. விசுத்தியென்னும் ஷோடசதள பத்மத்தில், பதினறு ஸ்வரங்களுக்கு மத்தியில் உள்ள கர்ணிகையில் வாகார பீஜ வாச்சியராய் வாமதேவ சிவம் விளங்குகிறார். இந்த சக்கிரத்திற்கு அதிதேவதை மகேச்வரராவர். திரோபவ கிருத்தியம.

6. ஆக்ஞா சக்கிரத்தில் ஹ, க்ஷ என்னும் இரண்டிதழ் பத்மத்தின் நடுவில் யகாரபீஜ ஸ்வரூபியாய் விளங்குபவர் ஈசான மூர்த்தியாவர். இந்த சக்கிரத்திற்கு அதிதேவதை ஸதாசிவராவர். அநுக்கிரஹ கிருத்தியம்.

7. சிச்சந்திரமண்டலமாகிய ஜ்யோத்ஸ்னலோகமாகிற ஸஹஸ்ரதள பத்மத்தில் ஓங்கார லக்ஷ்ய ஸ்வரூபியாகிய நிஷ்கள சிவம் அகாராதி க்ஷகாராந்தமான ஐம்பது மாத்ருகா பீஜங்களுக்கிடையில் விளங்குகிறார். தனக்கு அபின்னையாகும் சித்சக்தியோடு பிரகாசிக்கிறார்.

"இவ்விதமாய் இப்பரமேச்வரர் பூமி, ஜலம், தேஜஸ், காற்று, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களிலும், ஸூர்ய சந்திரர்களிலும் ஜீவாத்மாவிலும் வியாபகராய் விளங்கி ஸகல லோகங்களுக்கும் பீஜமாய், பீஜாதாரமாய், காரணமாய், காரியமாய், கர்மமாய், கர்மபயனாய், முக்குணமாய், குணாதீதமாய், ஊனாய், உயிராய் எங்கும் நிறைந்து என்றும் பிரகாசிக்கிறார். இவரே ஸ்ரீ தியாகேசன், இவரே தயாநிதி, இவரே பக்தரக்ஷகன், இவரே சரண்யர்" என்று மஹரிஷியானவர் மெய்யன்பர்களுக்குத் தியாகேசனது அருளால் தத்துவோபதேசம் செய்தனர்.

"மந்திரமும் மறைப் பொருளும் ஆனான் தன்னை
மறுமையும்இம்மையும் ஆனான் தன்னை". —அப்பர்.

---

## 105. கோமந்தகனுக்கு மலர்களையளித்த லீலை.

கோமந்தகன் என்னும் மாலைகட்டி விற்பவன் ஒருவன் திருவாரூரில் இருந்தான். அவன் பிறப்பினால் சூத்ரனாயிருந்த போதிலும் ஆதிகாலம் முதல் பெரியோர்களால் புகழப்பட்ட




*In memory of the late Sriman B. C. Avudaiappa Pillai Avl.*
*of Bikshandarkoil.*

தியாகேசனையும், பிராமணர்களையும் தமது குல தெய்வமென்று நினைத்துத் தினந்தோறும் எழுந்திருக்கும் பொழுது தியாக ராஜனுடைய ஜோதியையும், பிராமணர்களுடைய பாத கமலங் களையும் மனதில் நினைத்துக் கொண்டே வந்தித்து ஸ்நானம் முதலிய நித்திய காரியங்களைச் செய்து முடித்து விட்டு புஷ்பத் தோட்டத்தை நாடி மலர்களைக் கொய்து மாலை கட்டும்பொழுது முதலில் அழகிய மாலையொன்றை தியாகேசனுக்கென்று வைத் துவிட்டு மற்ற மாலைகளை விற்பனைக்காக எடுத்துக் கொண்டு வீதிகளில் சென்று விற்பனை செய்து அதனால் வரக் கூடிய பொருளை வைத்துக் கொண்டு ஜீவனம் செய்து வந்தான்.

கோமந்தகன் என்பவன் தினந்தோறும் முதலில் அழகிய மாலையைக் கட்டி அந்தப் புஷ்பத் தோட்டத்தின் ஒரு மரக்கிளை யில் தொங்க விட்டு வைத்து இம்மாலை தியாகேசனுடைய தென்று சிறந்த சிவ பக்தியுடன் அளித்து வருவதை யெல்லாம் தியாகேசர் அவன் மீது கருணை செய்து தனது பிரமத கணங் களினால் எடுத்து வரச் செய்து தனது மார்பிலணிந்து வந்தார். புண்ணியபுர நாதனாகிய தியாகராஜர் இவ்விதமாய் அவன் அளித்து வரும் மாலையைத் தரித்து வருகிறாரென்னும் விஷ யத்தை நெடுநாள் வரையில் ஒருவரும் அறிந்து கொள்ளவில்லை.

இப்படியே அநேக வருஷங்கள் சென்ற பிறகு ஒரு நாள் ஒரு பட்டாரகர் அத்திருவாரூர் நாதனுக்கு மாலை நேரத்தில் எழு புஷ்ப மாலையைச் சாத்தினார். மறுநாள் காலையில் அம்மா லையை எண்ணி எடுக்கையில் எட்டு மாலை இருக்கக் கண்டு வியப்படைந்து " தியாகராஜாவின் மார்பில் இவ்வண்ணம் எட்டு மாலை இருப்பதின் காரணத்தைக் கண்டறிய வேண்டு மென்று நினைத்து தினந்தோறும் உற்றுப்பார்த்து வந்தார். தியாகராஜ னுடைய அழகிய மார்பில் இவ்வண்ணமே தினந்தோறும் எட்டு மாலை இருக்கக்கண்டு, "இந்த அதிக மாலை தேவர்கள் அளித்து வரும் மாலையோ? பக்தர்கள் அளித்து வரும் மாலையோ?" வென்று ஸந்தேகத்தையடைந்து இவ்விஷயத்தைச் சோழ மன்ன னுக்கு அறிவித்தார், சோழவரசனும் அப்பொழுது இவ்விஷ

யத்தைக் கண்டறிய வேண்டுமென்று ஆலோசித்துத் தனது ஒற்றர்களை ஏவினன். அவ்வொற்றர்களும் ஒவ்வோரிடங்களிலும் சென்று பார்த்து வருகையில் அந்தக் கோமந்தகன் வளர்த்து வரும் புஷ்பத் தோட்டத்தை யடைந்து அவன் முதலில் பக்தியுடன் மலர்களைக் கொய்வதையும், பிறகு அழகாய் ஒரு மாலையைக்கட்டி ஒரு மரத்தின் கிளையில் வைத்து விட்டு, மற்ற புஷ்ப மாலைகளை எடுத்துக்கொண்டு நகரத்தில் விற்பனைக்குச்செல்வதையும், அவன் அப்புஷ்பத் தோட்டத்தை விட்டுச் சென்றவுடனே அக்கிளையில் தொங்கும் மாலை திடீரென்று மறைந்து விடுவதையும் கண்டறிந்து அம்மாலையே தியாகராஜன் மார்பில் விளங்கி வருவது என்று ஊகித்து இவ்வித அற்புதச் செயல்களை மன்னனுக்கு அறிவித்தார்கள்.

ஒற்றர்களால் விஷயத்தை யறிந்து கொண்ட அச்சோழ மகாராஜனும் இவ்வற்புதச் செயல்களையும், ஈசனது கருணையையும் உலகெங்கும் விளங்கச் செய்ய வேண்டுமென்று நினைத்து மறு நாட் காலையில் அந்நகரிலுள்ள புஷ்பத் தோட்டங்களிலும், சோலைகளிலும், வீடுகளிலும் மலர்ந்திருக்கும் மலர்கள் யாவையும் பறித்துத் தனது சமீபத்துக்குக் கொண்டு வரும்படி கட்டளையிட்டான். அது போலவே மறுநாட்காலையில் அரசனுடைய கட்டளையினால் வேலைக்காரர்கள் அந்நகரிலுள்ள புஷ்பங்கள் யாவையும் பறித்துக் கூடை கூடையாய் அரசன் சபைக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

அவ்விஷயத்தை யறியாத கோமந்தகன் வழக்கம் போல் தனது தோட்டத்திற்குச் சென்று பார்க்கும் பொழுது புஷ்பங்களே காணப்படவில்லை. மரங்களிலும், செடிகளிலும், கொடிகளிலும் திடீரென்று ஒரு புஷ்பமும் காணப்படாமலிருப்பதைக் கண்டு துக்கப்பட்டு, ஈசனுக்குத் தான் இவ்வளவு காலம் வரையில் புஷ்பமாலை கட்டியளித்து வருவதைக் கெடுக்க முயன்றவர் யாவரோ? சிலர் நம்மை வஞ்சனை செய்திருக்க வேண்டும்; இல்லாவிடில் இவ்வண்ணம் மலர் தோன்றுமைக்குக் காரணம் யாது? ஈசனுக்குப் புஷ்பமாலை கட்டியளிக்காமல் புசிப்பதில்லை

யென்று ஸங்கல்பம் செய்து கொண்டு புஷ்பத்துக்காக அக்கரெங்கும் அலைந்தான். எங்கும் மலர் கிடைக்கவில்லை. அதனால் மன வருத்தத்தை யடைந்து கண்ணீர் விட்டழுது பெருமூச்சு விட்டுத் தனது ஜன்மத்தையும், உயிரையும் அற்பமாய் நினைத்துத் தனது தோட்டத்துக்கு வந்து ஒரு மரத்தின் கிளைக்கும் தனது கழுத்துக்கும் ஒரு வஸ்திரத்தைச் சுற்றித் தனது உயிரை மாய்த்து விடுவதே நலமென்று கருதி, "தியாகேச! உமக்காக மாலை கட்டி வரும் நான் இன்று வஞ்சிக்கப்பட்டிருப்பதற்கு நீரே சாக்ஷி. நீரே எனக்கு நற்கதி யளிக்க வேண்டும். உமது பாத பக்தியானது ஜன்மங்கள் தோறும் என் மனதில் விளங்க வேண்டும்" என்று அலறிக் கொண்டே உயிர் விடத் துணிகையில், கருணாகரனாகிய தியாகேசர் அவனை காப்பாற்றக் கருதி அந்த க்ஷணத்திலேயே அவனுக்கு எதிரிலிருக்கும் மரத்தில் திடீரென்று அளவற்ற புஷ்பங்கள் மலரும்படிச் செய்தார். எதிரில் திடீரென்று மலர்கள் தோன்றியதைக் கண்டு அவன் வெகு சந்தோஷத்துடன் கட்டை யவிழ்த்துக் கொண்டு ஈசனுக்கு இது என்று ஒரு மாலை கட்டி வைத்துவிட்டு மற்ற மாலைகளை விற்பதற்காக வழக்கம் போல் நகர வீதியில் எடுத்துச் சென்றான்.

அதைக் கண்ட ராஜ படர்கள் அவனை வலுவில் அழைத்துக் கொண்டு போய் மன்னவன் எதிரில் நிற்கச் செய்தார்கள். "இன்றைய தினத்தில் இவ்வித மலர்கள் உனக்கு எவ்விடத்தில் கிடைத்தது" என்று அரசனால் விசாரிக்கப்பட்டவனாய் அக் கோமந்தகன் தான் நெடு நாளாய் தியாகேசனுக்கு மாலை கட்டி யளித்து வருவதையும், அன்று நடந்த சம்பவத்தையும் ஆதியோடந்தமாக மொழிந்தான். அதைக் கேட்ட அரசன் அப்பொழுதே கோயிலில் சென்று பட்டாரகர் மூலமாய்த் தியாகராஜாவின் திருமார்பில் அதிக மாலை ஒன்று விளங்குவதைக் கண்டு வியப்புடன் அஞ்சலி செய்து நிற்கையில், ஓர் ஆகாய வாணி உண்டாகி, "ஓ பக்தர்களே! தார், தழை, இலை, மலர், கனி, ஜலம் முதலானவைகளை அளவற்ற பக்தியுடன் யார் எனக்கு அளித்தபோதிலும் அவைகளையே நான் வெகு அன்பு

டன் அங்கீகரிப்பேன்'' என்றுரைத்ததைக்கேட்டுப் பரமானந்த மடைந்து தியாகராஜர் பக்தர் மீது வைத்திருக்கும் கருணை யின் சிறப்பை உலகில் பரவச் செய்தான்.

நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீ வா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன் முன்னலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சய போற்றி போற்றி யென்றும்
அலைபுனல் சேர் செஞ்சடையெம் மாதி யென்றும்
ஆரூரா வென் றென்றே யலறு நில்லே. —தாண்டகம்.



## 106. சண்டாளனாய் யாகத்தில் தோன்றிய லீலை.

உமாமகேசுவரன் என்னும் பிராமணோத்தமர் ஒருவர் புண்ணிய புரியை நாடிவந்து பரமேசனைப் பணிந்து, ஆன்மாவிற்கு நற்பயனைச் சம்பாதிக்க வேண்டுமென்று கருதி பௌண்டரீக மென்னும் சிறந்ததொரு யாகத்தைச் செய்ய ஆரம்பித்தார். அந்த வைதீக திலகர் செய்யும் யாகத்துக்கு வந்து அவ்வாஹுதிப் புகையை முகர்ந்து மனது பரிசுத்தியடைய வேண்டுமென்று கருதி எண்திசைகளிலிருந்தும் கல்வி நிறைந்த பிராமணர்களும், நற்குலத்திலுதித்த பிராமணர்களும், ஸத்வவாதிகளும், தர்ம சிந்தனை யுடையவர்களும், குணசாலிகளும் அந்த யாகத்துக்கு வந்து சேர்ந்தார்கள். இவ்வித பிராமணர்களுடைய ஸகாயத்தை யடைந்த உமாமகேச்வரரும் வெகு சந்தோஷத்துடன் பூர்வசாலை, கடாகுண்டம், ஹோம குண்டம் முதலானவைகளை முறைப்படி ஏற்படுத்தி யாககல்பத்தில்

சொல்லிய வண்ணம் மந்திரங்களும் தந்திரங்களும் விடாமல் பரமேசப் பிரீதிக்காகப் பௌண்டரீக யாகத்தைச் சிறப்புடன் நடத்தலானுர்.

அத் தருணத்தில் அவ்வேதியனுடைய மனதைப் பரிசோதிக்க வேண்டுமென்று கருதிய தியாகேசர் சண்டாள வேஷத்துடன் இடுப்பில் கருப்பு வஸ்திரத்தை யணிந்து கொண்டும், தலையில் தொங்கும் ஓர் சிகப்பு வஸ்திரத்துடனும், கையிலேந்திய ஒரு தோல் வடத்துடனும் யாகசாலையின் அருகில் வேகமாய் வரலானுர். அவன் வருவதைக் கண்ட வேதியரெல்லோருமெ "யாரடா இங்கே வருகிறுய்? உனக்கு இவ்விடத்தில் என்ன வேலை" என்று மொழிந்தார்கள். அவ்வந்தணர்கள் இவ்வாறுரைப்பதைக் காதில் ஏற்றுக் கொள்ளாமல் அச்சண்டாளன் தனது இரு கைகளையும் சென்னியில் அஞ்சலி செய்து கொண்டு "பரம் பொருளுக்கு இருப்பிடமாகிய இவ்வேதியர் கூட்டமும் அந்தப் பரம்பொருளும் என்னைக் காப்பாற்றுக; சரணமடைந்தவர்களைக் காப்பாற்றவல்ல தியாகராஜனது மனம் மகிழும்படி நடைபெறும் இந்த யாகத்தை நான் பார்த்து அனுபவிக்கத் தக்க பாக்கியம் செய்யவில்லையே ஈசனே!" என்று அழுதுகொண்டே வருகையில், அந்தப் பிராமணர்களெல்லோரும் "ஓ! ஓ! நமது யாகசாலைக்குள் சண்டாளன் நுழைந்து விடுகிறுனே; இந்த யாகமும் அழிந்து நமக்கும் நரகம் கிடைக்குமே" என்று சொல்லிக் கொண்டிருக்கும் தருணத்தில் அவன் அந்த யாகசாலைக்குள் நுழைந்து விட்டான். பரமேச! தயாநிதே! லோகரக்ஷக! என்று உரைத்துக்கொண்டே அச்சண்டாளன் யாக குண்டத்தைப் பார்க்க விரும்பி நெருங்கி வருகையில் அவனது ஸ்வரூபத்தையும் அவன் சிவ நாமத்தை உரைப்பதையும், நான்கு திசைகளிலும் பிராமணர்கள் அலறுவதையும் அறிந்து கொண்டவராயும் யாகத்தில் தீக்ஷை பெற்றுக் கொண்டவராயுமிருக்கும் அந்த உமாமகேச்வரர் அப்பொழுது தியாகராஜாவின் பாதாரவிந்தங்களை மனதில் தியானம் செய்தார். "யாகபதியே! நீரே எனது

யாகத்தைக் குறைவின்றி நடத்தி வைக்க வேண்டும். ஈசுவர நாமத்தை உச்சரிக்கிறவன் நீச ஜாதியனுயினும், சண்டாளனுயினும், பஞ்ச மகா பாதகனுயினும் அவன் உச்சரிக்கும் ஈச நாம மகிமையினுல் அவனைத் தேவர்களும் வணங்குவார்களென்று முனிவர்களும், சாஸ்திரங்களின் மர்மங்களை யறிந்த மெய்ஞ் ஞானிகளும் கூறுகின்றூர்களே! அஃது ஸத்தியமாகில் எனது யாகசாலையில் நுழைந்த இவருடைய பார்வையினுலும், ஸம்பந்தத்தினுலும் எனது யாகம் குறைவின்றி நடக்கும்படித் தியாகேசனே அருள் செய்ய வேண்டும். ஈசுவர நாமத்தையுச்சரித்து வருகிற இவரை நான் அன்புடன் அழைப்பதே நலம். இவருடைய முக கமலத்தின் ஒளியையும் சரீரத்தையும் உற்று நோக்கினுல் இவர் ஒரு அவதார விசேஷமென்றே தோன்றுகிறது. இவரை நான் நிராகரிக்காமலும், உதாஸீனம் செய்யாமலும் அன்புடன் அழைப்பேனுகில், அதனுல் இவ்வேதியர்களுக்கு மன வருத்தம் உண்டானுலும், எனது யாகமழிந்தாலும், எனக்கு அபகீர்த்தி வந்தாலும் ஸஹித்துக்கொள்வேன். ஈசுவர நாமத்தை யுச்சரித்துக்கொண்டு யாகத்தை யுபாஸிக்கக் கருதி வரும் இவரை மஹானுபாவரென்றே அறிகிறேன்'' என்று இவ்விதமாய் நிர்ணயம் செய்து கொண்டு அச்சண்டாளன் எதிரில் சென்று, "வாரும் மகா புருஷரே! நீர் ஜாதியில் தாழ்ந்தவராயினும் ஈசுவர பக்தியினுல் சிறந்த மேன்மையுடையவரென்று நினைக்கிறேன். இந்த அர்க்கியத்தையும், பாத்தியத்தையும், மதுபர்க்கத்தையும் பெற்றுக் கொள்வீர்'' என்று விளம்புகையில் பக்தியுடன் அவ்வந்தணனுல் அளிக்கப்பட்ட அம்மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு அந்தச் சண்டாளன் திடீரென்று மறைந்துவிட்டான்.

அப்பொழுது ஆகாயத்தில் ஒரு அசரீரி உண்டாயிற்று. "கேளீர் பிராமணர்களே! இந்த உமாமகேச்வரருடைய மன நிலையைச் சோதிக்கும் பொருட்டே தியாகராஜ பரம் பொருள் இவ்விதம் சண்டாளனுய்த் தோன்றினுர். சண்டாள ரூபத்தை முக்கியமென்று நினையாமல் அவரது முகத்திலிருந்து வெளி

வரும் பகவந் நாம கீர்த்தனேயின் மகிமையை முக்கியமாக இவ் வந்தணர் நினைத்தமையால் அதைக் கண்டு களிப்படைந்த பர மேசன் எங்களுக்குக் கட்டளையிட்டது போலவே தேவர்களா கிய நாங்கள் இந்த யாகத்தில் நடைபெறும் மந்திரங்களினுலும், ஆஹுதிகளாலும் பரிபூர்ண திருப்தியையடைந்தோம். யாகம் ஸாங்கமாய்ப் பயனையடைந்தது. இந்த யாகத்துக்குச் சண்டா ளனுடைய பார்வை, ஸ்பர்சம் முதலிய எவ்வித தோஷமும் இல்லை. நீங்களெல்லோரும் அவப்ருத ஸ்நானம் செய்வீர்களா கில் நற்பதவி கிடைக்கும்'' என்று அசரீரி உரைத்ததைக் கேட்ட வேதியர்களும், யாக தீக்ஷிதரும் பரமானந்த மடைந்து கொஞ்ச நேரம் வரையில் அப்படியே ஈசுவரத் தியானத்தினுல் மூடிய கண்ணினராய் விளங்கினுர்கள்.



## 107. வேதியன் சிராத்தத்திலுண்ட லீலை.

சுதாஸன் என்னும் வேதியர் ஒருவர் தியாகேசனைத் தரிசிக்க வேண்டுமென்று பாகுபுரியிலிருந்து புறப்பட்டுத் திருவா ரூருக்கு வரலானுர். அவர் உத்தம குலத்தில் ஜனித்துச் சதா சாரங்களேயுடையவராய் அக்னி போல் சுத்தமானவராய் விளங் கியபோதிலும் பாலியம் முதல் கொடிய ஏழ்மையை யனுபவிக் கின்றவர், உஞ்சவிருத்தி செய்தே ஜீவனம் செய்து வருகிறவர். அவ்வேதியர் தன்னிடத்திலிருக்கும் சிறந்த கல்வி, ஸதாசாரம் முதலியவைகளால் பிறரிடமிருந்து பணம் சம்பாதிக்க விரும்ப வில்லை; தான் கற்றறிந்த வேதங்களேயும், சாஸ்திரங்களையும் விற்றவரல்ல; தானங்களையும் வாங்கியவரன்று; எவ்விதமான கெட்ட வழியிலிருந்தும் திரவியத்தை யடையாதவர்.

ஆகையால், தனது வாழ்நாட்களை தரித்திரத்தன்மையுடன் கழித்துக் கொண்டே திருவாரூருக்கு வரும் நாளில் நடுவழியில் மழை பெய்ய ஆரம்பித்தது. அதனால், அவர் செல்லும் ஊர்களில் உஞ்சவிருத்தி யெடுத்து ஜீவனம் செய்வதற்கும் முடியாமற்போகவே மிகவும் கஷ்டத்தை யனுபவித்துக் கொண்டு திருவாரூரை யடைந்தார். அங்கு விளங்கும் கமலாலயத்தில் ஸ்நானம் செய்து தியாகேசனைக் கண்ணாரக் கண்டு களித்துப் பணிந்து பரமானந்தத்தை யடைந்து சில நாள் அங்கு நிலைபெற்று வசிக்கும் நாளில், அவ்வேதியனுடைய தந்தையின் திதி வந்தது.

அப்புண்ணிய புரியில் அந்தக் காரியத்தை நிறைவேற்ற வேண்டுமென்னும் ஆவல் மாத்திரம் அவருக்கு உண்டாயிற்றே தவிர அக்காரியத்துக்கு வேண்டிய பொருளைச் சம்பாதிக்க முடியாமல் ஏங்கி யிருந்தார். எனது தந்தையின் சிராத்தம். அதற்குத் திரவியத்தை யளிப்பீரென்று அவர் யாரையும் கேட்க விரும்பவில்லை. தன்னிடம் பொருளில்லையே என்று ஏக்கத்துடன் இருக்கும் சமயத்தில் சிராத்ததினமும் வந்துவிட்டது. அன்று வருணனும் விடாமல் மழை பொழிபலானன்; மழையினாலும், சிராத்தத்திற்கு வேண்டிய திரவியமில்லாமையினாலும் அளவற்ற துக்கத்தையடைந்த அவ்வேதியர் அன்று காலையில் கமலையில் ஸங்கல்ப பூர்வகமாக ஸ்நானம் செய்து ஜபாதிகளை முடித்து விட்டுத் தியாகராஜாவின் ஆலயத்துக்கு வந்து, நூற்றெட்டுத் தடவைப் பிரதக்ஷிணம் செய்து, திவ்விய மூர்த்தியை ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, மறுபடியும் பகற்காலத்தில் சுத்த ஸ்நானம் செய்து ஆலயத்துக்கு வந்து ஒரு மண்டபத்தில், ஜனங்களற்றவிடத்தில் அந்தச் சுதாஸன் என்னும் வேதியர் தனது தந்தையின் சிரார்த்தத்தைக் குறித்துச் சங்கல்பம் செய்து கொண்டு, "தியாகராஜ! ஸர்வ வியாபியே! இன்று எனது தந்தையின் சிராத்த திதி; இதை நான் பிராமண போஜனம் செய்துவைத்துக் கல்ப முறைப்படி நடத்த முடியாதவனாய் அனுபவிக்கும் கஷ்டத்துக்கு சாக்ஷி

யாக விளங்கும் நீரே என் தந்தையின் சிராத்தத்தை அங்கீகரிப்பீர். நான் உமது பாதத்தில் பக்தி வைத்திருப்பது உண்மையாயின், நான் கற்ற வேதம் உண்மையாயின், எனக்குத் தந்தை யிடத்தில் பக்தி யிருப்பது உண்மையாயின் எனது தந்தையின் சிராத்தத்தை நிறைவேற்றி வைப்பது உமது கடமை'' என்று அழுத கண்ணீருடன் கதறி முறை யிட்டு அன்று பகற்பொழுதை உபவாஸத்தினுல் கழித்தார்.

அவ்வேதியர், தனது தந்தையின் சிராத்தத்தைக்குறித்து இவ்விதமாய் ஈசனிடம் முறையிட்டுத் தாம்பூலத்தில் குளங்களை (வெல்லம்) மாத்திரம் ஈசனுக்கு எதிரில் வைத்துப் பணிந்து போனுர். இந்த விஷயத்தையறியாத அர்ச்சகர்கள் அன்று மாலைநேரத்தில் தீபாராதனையை நிறைவேற்றியபிறகு நைவேத்தியம் செய்யும்பொழுது ஓர் அசரீரி உண்டாகி, ''ஓ அர்ச்சகரே! நான் இன்று சுதாஸன் என்னும் வேதியரால் அவரது தந்தையின் சிராத்தத்தில் நிமந்த்ரணத்துக்கு அமர்த்தப்பட்டவனுய் அன்னத்தைப் புசித்து, அக்காரியத்தை நிறைவேற்றியிருப்பதால் இன்று இரவில் எனக்கு எவ்வித நிவேதனமும் அளிக்கலாகாது'' என்றுரைத்ததைக் கேட்டு எல்லோரும் வியப்படைந்து ஈசனைப் போற்றினுர்கள்.



## 108. மலடிக்கு மகனையளித்த லீலை.

காவேரியின் கரையில் விளங்கும் நல்லாபுரத்தில் சிவசூடி யென்னும் வேதியர் ஒருவர் இருந்தார். அவருடைய தேவிக்கு மான்விழியாளென்று பெயர். அவள் தனது கணவ

னுடைய கிருஹத்தை யடைந்தது முதல் பெரியோர் வணக்கம், விருந்தளித்தல், ஈசுவரபக்தி முதலிய நற்குணங்களையடைந்து, நற்கீர்த்தியையும், நற்செல்வத்தையும் பெற்று விளங்கினுள். அவ்வண்ணமிருந்த போதிலும், பூர்வ ஜன்ம பாப வசத்தினுல் அவளுக்கு இம்மண்ணுலகில் நெடுநாள் வரையில் குழந்தை பிறக்காமல் மலடி யென்னும் பெயர் உண்டாகவே அதனுல் அவள் தனது குலத்தின் பித்ருக்களுக்கு நற்கதி கிடைக்காமல் போய்விடுமோ என்று பயந்து மனக்குறையையடைந்து தனது கணவனுடன் ஆலோசனைசெய்து தமது செல்வத்தைத்தானம் செய்தல் முதலிய நல்வழியில் செலவு செய்து கொண்டு தியா கேசனையே மனதில் தியானித்து வந்தாள். வேதியர்களுக்குத் தானம் செய்தல், தியாகபதிக்குச் சந்தனக்காப்பளித்தல், ஏழை களுக்கு அன்னமளித்தல் முதலிய நற்காரியங்களை அம்மாது செய்து வருவதைக் கண்ட பெரியோர்களும், ஸாதுக்களும் "உனது குலம் விளங்க நன்மகனையடைவாய்" என்று அவளை ஆசீர்வதித்தனர்.

அவ்விதமாகவே அம்மான்விழியாளுக்குப் பல வருஷங்கள் சென்ற போதிலும் ஸந்தான முண்டாகவில்லை. அதனுல் அம் மாதின் முகம் வாடியது. அடிக்கடி நீர்த்தாரைகள் அவள் கண்களிலிருந்து சொரிந்தன. அவள் உணவையும், சரீரத்தை யும் வெறுத்தாள். "எனது பாப ராசியை எவ்விடத்தில் போய்த் தொலைப்பேன்" என்று அலறுவாள். தியாகராஜா வின் அற்புத லீலைகளைப் பற்றிப் புகழ்ந்து உளம் மகிழ்வடை வாள். அவ்விதக் கருணையினுல் தனது மலட்டுத் தன்மையை இம்மண்டலாதிபதியாகிய தியாகேசன் நீக்கவில்லையே என்று புலம்புவாள். இரவில் கண்ணுறங்காள்; கணவன், தாய், தந்தை யென்னும் உறவினர் தேற்றிய போதிலும் ஆறுதலை யடையாள்; இவ்விதமாய் அவள் பல வருஷங்களைக் கழித்துக் கொண்டு வருகையில், ஒரு நாள் அவள் தனது கொழுநனுடன் திருவாரூருக்குப் புறப்பட்டுச் செல்லுகையில் தியாகேசனின் திவ்விய லீலைகளின் மேன்மையைக் கணவன் சொல்லக்கேட்டுக்

கொண்டே அம்மாது வழி நடந்து செல்லுகையில் அவளது மனோரதம் சித்தித்தது போலவே திருவாரூர் நகரமும் சமீபத்தில் தோன்றிற்று. அந்நகருக்கு வெகு தூரத்தில் வரும் பொழுதே கூப்பிய கையுடன் அவ்வேதிய தம்பதிகள் முதலில் கோபுரத்தின் தரிசனத்தையும், பிறகு நகரில் விளங்கும் அஷ்ட லக்ஷ்மிகளின் சிலம்பொலியையும் கேட்டு ஆனந்த மடைந்து கொண்டே திருக் கோயிலிற் புகுந்து தியாகராஜனுடைய வடிவழகையும் கருணை பெருகிய நயனங்களையும் கண்டு பரமானந்த மடைந்து அடிக்கடி வீழ்ந்து பணிந்து துதித்த பிறகு அம்மாது, " தியாகராஜனே! உமது கருணையைப் பெற்றுப் பலர் துன்பக் கடலை நீந்தித் தமது மனக் கருத்தை யடைந்து சிறப்புற்றிருக்கிறார்களே. அவ்விதமான உமது கருணைக் கடலின் ஓர் ஜல பிந்துவாகிலும் என் மீது விழக் கூடாதா ? " என்று தியானம் செய்து கொண்டே ஓர் அந்தணர் வீட்டில் தனது கணவனுடன் தங்கி அன்றிரவைக் கழிக்கலுற்றாள்.

கற்பு, தயை, தியானம், தியாகம் முதலிய நற்குணங்கள் நிறைந்து வாழும் அம்மாது, தனது மலட்டுத் தன்மையை நீக்கிக்கொள்ள வேண்டுமென்று லோகநாதனாகிய தியாகபதியின் கருணையை வேண்டுகையில் கருணைக் கடலென்று கீர்த்தி பெற்ற தியாகராஜனும் அன்றிரவில் அவளது கனவில் தோன்றி, " ஓ மாதரசி! ஒருவித பாபத்தன்மையினால் நீ இது வரையில் நற்புத்திரனையடையாதவளாய் மனம் ஏங்கி நிற்கிறாய். ஸகல லோகங்களுக்கும் தாயாகிய மலைமகள் நோக்கு உன் மீது பாயவே நானும் அவ்வண்ணமே இப்பொழுதே அருள் புரிந்தேன். ஆகையால் இன்னும் சில நாட்களில் உனது தூய வயிற்றில் ஒரு மகன் தோன்றப் போகிறான். அதனால் நீ அளவற்ற களிப்பை யடைவாய்; உனது குலம் செழித்தோங்கும் " என்று சொல்லி விட்டு மறைந்தார்.

கண் விழித்தெழுந்த அம்மங்கையும் தனது கனவில் இவ்வண்ணமீசன் அருளிச் செய்ததைத் தனது கணவனிடம் சொல்லி மிக்க மனக்களிப்புடன் அன்றிரவைக் கழித்து விட்டு

மறுநாட்காலையில் கதிரவன் தோன்றிய பொழுதே கமலை வாவியில் நீராடித் தியாகபதியைப் பணிந்து விடை பெற்றுக் கொண்டு தமது இருப்பிடத்தை யடைந்தவுடனே அம்மான் விழியாள் என்னும் மங்கைக்கு அன்று முதல் கர்ப்பச் சின்னங்கள் தோன்றின. பத்து மாதமும் சென்றபிறகு அம்மாது சிறந்ததொரு புத்திரனையடைந்து மயிர்க் கூச்சலுண்டாகும்படி பரமேசன் குணங்களைப் போற்றித் துதி செய்கையில் தனது கனவில் தியாகேசன் தோன்றி யுரைத்ததைத் தோழிமார்களிடம் சொல்லி வெகு சிறப்புடன் மகிழ்ந்து வாழ்ந்தாள்.



## 109. குருடனுக்குக் கண்ணளித்த லீலை.

சிராமலையின் அடிவாரத்தில் பிறவிக் குருடனாய்ப் பிறந்து தனது பசுக்களை மேய்த்து வரும் ஓர் இடையன் தியாகேசனுடைய கரை புரண்ட கருணையைக் கேட்டு மயிர்க் கூச்சலெடுத்து பரசிவ ஸ்வரூபத்தைத் தனது ஞானக் கண்களால் காணக் கருதி அருகிலிருந்த சிறந்ததொரு பசுவைக் கையினால் தட்டிக் கொடுத்துக் கையை ஏந்தினான். தனக்குப் போஷக நாதனாகிய அப்பிறவிக் குருடனுடைய மனக் கருத்தையறிந்து கொண்டு அத்தேனு அப்பொழுது பாலை அவனது கையில் சொரிந்தது.

அப்பிறவிக் குருடனும் அப்பசுவினால் அன்புடனளிக்கப் பட்ட பாலை அருகிலிருந்த சிவலிங்கமூர்த்தியின் சிரஸின் மீது அபிஷேகமாக வார்த்துப் பிரதக்ஷிணம் செய்து கும்பிட்டு எழுந்து "ஓ லிங்க ஸ்வரூபியே! நான் முன் ஜன்மங்களில் அளவற்ற பாபத் தொழில்களைச் செய்தபடியால் சிறந்ததாகிய இம்

மானிட சரீரத்தையடைந்தும், அப்பாபத்தின் வழியால் பிறவிக் குருடனாய்ப் பிறந்தேன். ஆகிலும் சிவபக்தி நிறைந்த மனம் படைத்தேன் என்னும் ஒருவித புண்ணிய வசத்தினால் நான் திருவாரூரில் விளங்கும் தியாகராஜாவின் முன்பு பணிய விருப்பமுடையவனாய் முதலில் உமது திருமேனிக்கு அபிஷேகம் செய்து விட்டு இப்பசுவின் வாலைப் பற்றிக்கொண்டு திருவாரூர் செல்லப் போகிறேன். உமது கருணையே எனக்கு வழித் துணையாக வேண்டும்" என்று விண்ணப்பம் செய்து விட்டு அம்மாதிரியே அப்பசுவின் வாலைப் பற்றிக் கொண்டே அப்பிறவிக்குருடன் திருவாரூருக்குப் புறப்பட்டான். பிறவிக்குருடன் ஆவின் வாலைப் பற்றிக் கொண்டு செல்லுவதை ஒவ்வொரு நகரத்தாரும் கண்டு, இவனும் இப்பசுவும் ஒப்பற்ற புண்ணியத் திரள் என்று எண்ணினார்கள்.

அவன் செல்லும் பொழுது தியாகராஜாவின் நாமங்களைத் துதி செய்து கொண்டே செல்வதைக் கண்டவர் அனைவரும் அவனது பக்தியின் சிறப்பைக் கண்டு அவனை ஒரு முனிவனென்றே எண்ணினார்கள். அவன் இவ்வாறு அந்தகனாயினும் ஈசுவர பக்தியினால் பசுவின் வாலைப் பற்றிக் கொண்டே திருவாரூர் செல்வதைக் கண்டவர்களில் சிலர் அவனுடன் பின் சென்று தாமும் ஆரூர்ச் செல்வனைத் தொழக் கருதினார்கள். இவ்விதமாய் அநேக கிராமங்களிலிருந்தும், நகரங்களிலிருந்தும் பல பக்தர்கள் அவ்விடையனுடைய வழியைப் பின்பற்றிக் கொண்டே சென்றார்கள். பக்தனாகிய அவ்விடையன் புண்ணிய க்ஷேத்திரத்தின் எல்லைக்குள் புகுந்தவுடனே அவனது சரீரத்தில் மயிர்ச் சிலிர்ப்பும், மனதில் அளவற்ற ஆனந்தமும் உண்டாயிற்று. அப்பொழுது அவன் தியாகராஜனது பாத கமலத்தை மனதில் சற்று நேரம் தியானம் செய்தவுடனே கருணாநிதியாகிய பரமேசனுடைய நோக்கம் அப்பிறவிக் குருடன் மீது க்ஷண காலம் விழுந்தபடியால் அவ்விடையன் அப்பொழுது தேவாமிருதம் கிடைத்தது போல் நற்கண்களை அடைந்தான்.

அவனது எதிரில் அப்பொழுது பிரபுவின் திருக் கோவிலும், கோபுரமும் தோன்றியபடியால் அதைக் கண்ட பிறவிக் குருடன் தியாகேசனே தனக்குக் கண்களை யளித்தாரா? அல்லது மோக்ஷமளித்தாரா? என்று அதிசயப்பட்டு மனக் களிப்படைந்து துதித்து நிற்கையில் அவனுடன் பின் சென்றவர்கள் அவ்விடையனைப் பார்த்து, "பக்தரே! நீர் ஏன் மெய் மறந்து நிற்கிறீர்? உமது கண்களுக்கெதிரில் தோன்றும் இந்நகரமே பரமாத்மாவின் திருநகர். இவைகளே கோபுரங்கள். இவைகள் மண்டபங்கள்; இதுவே இந்திரதீர்த்தம். இதுவே கமல தீர்த்தம்" என்று சுட்டிக் காண்பிக்கும் பொழுது அளவற்ற ஆனந்த மடைந்து அவ்விடையன் பூமியில் வீழ்ந்து பணிந்து கைகளைக் கூப்பிக் கொண்டு, "பரம் பொருளே, பாவியேனாகிய என் மீது கருணை செய்ததினால் நான் கண்களைப் பெற்றேன். உமது திவ்விய ஆலயத்தின் சிறப்பையும் உமது அழகிய திருமேனியையும் நான் இப்பொழுது காணப் பெற்றேன். இப்பொழுது தான் எனது கண்கள் நற்கண்களாயின. பிறவிக் குருடனுக்குக் கண்களை யளித்த உமக்கு எவ்வாறு கைம்மாறு செய்வேன்?" என்று பலவாறு துதி செய்து கொண்டே அப்பசுவுடனும் அத்தொண்டர் கூட்டத்துடனும் திருவாரூர் நகரை யடைந்து கமலத் தீர்த்தத்தில் நீராடி ஆலயத்துக்குள் நுழைந்து அப்பசுவினால் அளிக்கப்பட்ட பாலினால் ஈசனுக்குக் குளிர்ந்ததோர் அபிஷேகத்தையும் செய்து வைத்து பரிமளம் வீசும் தியாகராஜாவின் அழகிய திருமேனியைக் கண்களால் கண்டு துதி செய்யும் பொழுது பக்தர்கள் எல்லோரும் "இப்பரம்பொருளே பூமகள்நாதனுக்கும் நாமகள் நாதனுக்கும் நமக்கும் அருந்தெய்வம்; இத்தியாகராஜனே மூவுலகுக்கும் காவலோன்; கண்ணளிக்கும் கருமணி. தொண்டர் தம் அமுது" என்று பலவாறு துதி செய்து பரமானந்தமடைந்தார்கள்.



## 110. ஊமைக்கு வாக்களித்த லீலை.

பாண்டி நாட்டரசன் மகனாகிய வாள் வீரன் என்னும் மகா ராஜன் தன் தேவியினிடத்தில் உதித்த ஊமைக் குமாரனுக்கு நற்கதியையடைவிக்க வேண்டித் தனது ராஜ்ய காரியங்களை அமைச்சரிடம் ஒப்படைத்து விட்டுத்தனது மைந்தனையும், மனைவியையும் அழைத்துக் கொண்டும் சிறந்த முத்து மாலைகளையும் செஞ்சந்தனங்களையும் பட்டாடைகளையும் எடுத்துக் கொண்டும் சில வேலைக்காரருடன் திருவாரூர் நகரை யடைந்து தனது ஊமைக் குமாரனைத் தியாகராஜாவின் பொற்பாதத்தில் பணியச் செய்தான்.

அன்று முதல், அப்பாண்டி நாட்டரசன் தியாகராஜனது திவ்விய திருமேனி குளிரும்படி முதல் பக்ஷத்தில் நர்மதா நதியினுடைய தீர்த்தத்தினாலும், இரண்டாவது பக்ஷத்தில் கோதாவரி நதியினுடைய தீர்த்தத்தினாலும், மூன்றாவது பக்ஷத்தில் துங்கபத்திரையினுடைய தீர்த்தத்தினாலும், நான்காவது பக்ஷத்தில் கிருஷ்ணையினுடைய தீர்த்தத்தினாலும், ஐந்தாவது பக்ஷத்தில் காவிரியாற்றின் தீர்த்தத்தினாலும், ஆறாவது பக்ஷத்தில் வைகையாற்றின் தீர்த்தத்தினாலும், ஏழாவது பக்ஷத்தில் தாம்பிரபர்ணியின் தீர்த்தத்தினாலும், எட்டாவது பக்ஷத்தில் மஹோததியின் தீர்த்தத்தினாலும், ஒன்பதாவது பக்ஷத்தில் இந்திர தீர்த்தத்தினாலும், பத்தாவது பக்ஷத்தில் கமலாலயத்தின் தீர்த்தத்தினாலும் குளிர்ந்த அபிஷேகங்கள் செய்து வைத்தான்.

இவ்விதமாய் அப்பாண்டிநாட்டரசன் தயாநிதிக்கு விசேஷ உபசாரம் செய்து வைத்தல், விசேஷ நைவேத்தியம் செய்து வைத்தல் முதலிய கைங்கரியங்களைச் செய்து வைத்துக் கொண்டு தனது ஊமை மகனுக்கு தினந்தோறும் கமலாலயத்தில் சுத்த ஸ்நானம் செய்து வைத்துத் தியாகராஜாவின் திவ்வியாலயத்தைப் பிரதக்ஷிணம் செய்து வரும்படியும் கற்பித்தான்,

இவ்வண்ணம் அவ்வரசன் செய்து வரும் நற்காரியங்களின் சிறப்பைக் கேட்டு அத்தருணத்தில் தியாகராஜாவைத் தரிசிக்க வேண்டுமென்னும் விருப்பத்துடனே நான்கு திசைகளிலிருந்தும் எண்ணுதற்கரிய தொண்டர்கள் வந்து கூடிய பொழுது ஒருநாள் பகற்காலத்தில் அப்பாண்டிய மன்னன் தனது குமாரனுடன் தியாகராஜனுக்கு எதிரில் நின்று கொண்டு துதி செய்து கொண்டிருக்கையில் அம்மன்னனுடைய பக்தி விசேஷத்தைக் கண்டவரனைவரும் அவனுடைய அருகில் சென்று திவ்விய மூர்த்தியைத் தொழுது கொண்டு இருந்தார்கள்.

அத்தருணத்தில், தியாகேசர் அம்மன்னவனது பூஜோபசாரங்களைப்பெற்று மனக்குளிர்ச்சியடைந்தபடியால் ஊமையாய் நிற்கும் மன்னவன் மைந்தனுக்கு திவ்விய வாக்கும் சிறந்த ஞானமும் உண்டாகக் கடவது என்று தனது மனதில் ஸங்கல்பம் செய்தார். ஆகையால் அப்பொழுதே நாமகளின் வாகனமாகிய அன்னப்பறவையின் ஒலிபோலும், நாமகளின் சிலம்பின் ஒலி போலும், மலைமகளின் வீணை ஒலிபோலும், கந்தர்வ கீதம் போலும், நாரதகீதம் போலும், இனிமையான குரலும், சிறந்த வாக்கும் அம்மன்னவன் மைந்தனுக்கு உண்டானபடியால், அம்மைந்தன் தியாகேசனைத் துதி செய்யலானான்.

"பரம் பொருளே! புண்ணியபுர நாதனே! திரிமூர்த்தி ஸ்வரூபியே! பக்த ரக்ஷகனே! சைதன்ய ஸ்வரூபியே! தயாநிதியே! யோக ஸ்வரூபியே! வேதங்களாலும் துதிக்க முடியாத உமது திவ்விய குணங்களை யான் எவ்வாறு உரைக்க வல்லேன். ஞானக்ஞேய ஸ்வரூபியாயுள்ள உமது பதவியை முனிவர்களே அறியக்கூடும். பாபத் திரளால் ஊமையாயிருந்த நான் உமது கருணையினாலல்லவோ பாபம் நீங்கி உமது குணங்களை என்னால் கூடிய வரையில் உரைப்பதற்குச் சக்தி பெற்றேன். உமது அம்சத்தை யடைந்தே தேவாதிகள் லோக ரக்ஷண காரியத்தில் ஈடுபட்டு பக்தருக்கு நன்மையளித்து வருகிறார்கள். ஸகலத்திற்கும் ஆதியான உன்னை யான் எவ்விதம் அறிவேன்? நிச்சல் சித்தர்களால் காண வல்ல உமது வடிவழகைக் கண்ணற்ற

வனும் காணக் கூடும். உட்சுடராய் விளங்கும் உமது திவ்விய குணங்களை ஊமையாய் இருந்த யானும் புகழக்கூடும். இவ்வித அற்புத காரியங்களுக்கு மூலகாரணமாகிய உமது கருணையைக் கதியாகப் பற்றியவர்களுக்கு எவ்வித காரிய ஸித்தி தான் உண்டாகாது? பலத்தைக் கொடுக்கும் பரம பொருளே! நீயே எனது குலதெய்வமென்று உன் பாதகமலத்தில் சரணம் அடைந்தேன். என்னைப் போல் கதியற்று விளங்கும் பக்தருக்கும் பரம்பொருள் நீயே யாகுவாய்" என்று அப்பாண்டி நாட்டு மன்னன் மைந்தன் துதி செய்யலானான்.

பதினாறு வயது வரையில் பிறவி ஊமையாயிருந்த அவ்வரச குமாரன் இவ்விதமாய்த் தியாகேசனைப் போற்றித் துதித்துப் பணிவதைக் கண்ட தொண்டர்கள் எல்லோரும் வியப்படைந்து, "பரமேசனுடைய கருணை நாள் தோறும் பிறைச் சந்திரன் போல் வளர்ந்து வருகிறது. ஊமைக்கு வாக்களிக்கும் இம்மூலச்சுடரின் மேன்மையை யார்தானுரைக்க வல்லவர்? விரும்பித் தொழுவார்கட்குச் சிறப்பையளிக்கும் இத்தியாகேசரே கர்ம பலனையும் மாற்ற வல்லவர். இப்படிப்பட்ட பரம் பொருளின் மகிமையை யாம் எவ்வண்ணம் அறியக்கூடும்" என்று தெண்டனிட்டுப் போற்றிப் பணிந்து பரமானந்தமடைந்தார்கள்.



## 111. செவிடனுக்குச் செவியளித்த லீலை.

சோணாசலத்தின் தாழ்வரையில் ஒரு சிவயோகி வாஸம் செய்து வந்தார். அவர் பிறவி முதல் செவியின் பயனை இழந்தவர். ஆகையால் அவர் தினந்தோறும் விடியற்காலத்தில்

எழுந்திருந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டு ஸங்கல்பம் ஸ்நானம், பஸ்மதாரணம், ஆசமனம், ஸந்தியாவந்தனம் சூரிய பூஜை, தர்ப்பணம், ஜபம், பசுபதியின் தியானம், பாத ஸேவை, மனனம், நைஷ்டிகம், தாரணம், யோகம் முதலானவைகளைச் சாங்கோபாங்கமாய்ப் பாலப்பிராயம் முதல் நடத்தி வந்தார். இவர் ஒரு சமயம் யாத்திரையாக புறப்பட்டு பொதிய மலை முதல் இமயமலை வரையிலுள்ள ஸகல புண்ணிய க்ஷேத்திரங்களையுமடைந்து அங்குள்ள தீர்த்தங்களில் நீராடி, லிங்கோபாஸனை, க்ஷேத்திரவாஸம் முதலியவைகளையும் செய்து திரும்பி வருகையில் ஒரு நாள் அச்சிவயோகியானவர் திருவாரூர் வழியை யடைந்து கமலாலயத்தின் அருகில் வந்தார்.

அத்தினம் மகரமாஸ பௌர்ணமி திதி கூடியபடியால் அப்புண்ணிய காலத்தில் நீராடுவதற்காக கோடிக் கணக்கான தொண்டர்கள் திருவாரூரில் வந்து நிறைந்திருக்கும் பொழுது அவர்களில் சிலர் ஈச குணங்களைப் பாடுவாரும், சிலர் ஆனந்தக் கூத்தாடுவாரும், சிலர் ஈசன் கோயிலைத் தேடுவாரும், சிலர் கமலப் பொய்கையை நாடுவாரும், சிலர் இப்புண்ணிய காலத்திலிப்பதியை யடையாத பாபிகளைப் பற்றி வாடுவாருமாகக் காணப்பட்டார்கள். அவ்வித கோலாகலத்தைக் கண்ட சிவயோகியானவர் பிறவியில் செவிடராகவே ஜனித்தபடியால் அச்சமயத்தில் கண்களின் பயனை மாத்திரம் அடைந்தாரேயல்லாது செவியின் பயனை யடையவில்லை. ஞானியர் கூறும் தத்துவோபதேசங்கள் தமது காதில் வீழ்ந்து அதற்குரிய பயனை உண்டு பண்ணக்கூடிய பாக்கியத்தைத் தான் அடையவில்லையே என்று அச் சமயத்தில் அச் சிவயோகியின் மனதில் கொஞ்சம் கஷ்டம் தோன்றியது. அதனால், அவர் க்ஷணகாலம் தனது மனதில் தியாகராஜனை நினைத்துக் கண்களில் நீர் மல்க நின்றார்.

மெய்ஞ்ஞானமுள்ள அச் சிவயோகியின் மனக்குறையை நீக்கக் கருதிய தியாக பதியானவர் அப்பொழுது தனது தயா தேவியைக் கண்குளிரக் கடாக்ஷித்தார். ஈசனால் ஏவப்பட்ட

அத்தேவியும் அச் சிவயோகியின் மீது தனது திருக்கண்ணோக்கைச்செலுத்திய பொழுதே அவர் செவியின் பயனையடைந்தார்.

அந்த க்ஷணத்திலேயே குருதாஸன் என்னும் ஒரு வேதியன் எதிர்வந்து பாதத்தில் வீழ்ந்து பணிந்து இப் புண்ணிய காலத்தின் சிறப்பைப் பற்றி எனக்குத் தத்துவோபதேசஞ் செய்ய வேண்டுமென்றுரைத்துக் கொண்டே அஞ்சலியுடன் எதிர் நின்று வணங்கினுன். ஈசுவர கடாக்ஷத்தினுல் செவிட்டுத் தன்மை நீங்கப் பெற்ற அச் சிவயோகியும், அவ்வேதியர் உரைத்த வேண்டுகோளை எளிதில் அறிந்து கொண்டு அவரது விருப்பம் போலவே அம் மகரமாஸ பௌர்ணமியின் மேன்மையையும் புண்ணிய க்ஷேத்திரவாஸ பலனையும், தியாகேசனது அளவற்ற கீர்த்தியின் சிறப்பையும், விரிவாய் எடுத்துக்கூறினுர்.

இவ்விதம் அச்சிவயோகி குருதாஸனுக்குச் செய்து வரும் தத்துவோபதேச மேன்மையைக் கேட்ட பல பக்தர்கள் அவரது ஸன்னிதானத்தை யடைந்து அவர் செய்யும் உபந்யாஸத்தின் சிறப்பையும் கேட்டு செவியின் பயனற்ற இம் மகானுபாவனுக்கு தியாகேசன் இப்பொழுது செவி யளித்திருக்கிறுர் போலும் என்று உணர்ந்து கொண்டு அவரிடமிருந்தே தியாகராச னுடைய விசேஷ குணங்களையும் அறிந்து கொண்டார்கள். அதுவுமன்றி அச் சிவயோகி சென்றிருக்கும் பற்பல புண்ணிய க்ஷேத்திரங்களின் மேன்மையையும் அதில் செய்த தானத்தின் சிறப்பையும், புண்ணிய க்ஷேத்திர வாஸ பலனையும் தீர்த்த யாத்திரை செய்பவர்களின் மேன்மையையும் அவரிடமிருந்தே சொல்லக் கேட்டு பேரானந்த மடைந்து அச் சிவயோகியைப் பணிந்து நின்றுர்கள்.

பின்பு அச் சிவயோகியினுல் ஏவப்பட்டவர்களாய் அத் தொண்டர்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து அவரால் ஸங்கல்பம் செய்து வைக்கப்பட்டவர்களாய் அக் கமலாலயத்தில் நீராடி அன்று மாலை நேரத்தில் தியாகமணியைத் தரிசித்துத் தமது விருப்பங்களை யடைந்து இருப்பிடம் சென்றுர்கள். அது முதல் புண்ணிய புராதனுக்குப் புலனளிக்கும் பெருமாள்

என்னும் கீர்த்தி பரவியது. இவ்விதம் பக்தர்கள் குறையைத் தீர்க்கும் மருந்து இவரே என்று புகழப்பட்டவராய்ச் செல்வத் திருவாரூரில் கமலநாயகிதேவியாருடன் கூடி தியாகேசர் அனைத்துலகையும் காத்து விளங்கினர். இப்படிப்பட்ட தயாநிதியாகிய தியாகராஜாவின் பாதத்தை மனதில் சிந்திப்போர்கள் பஞ்சேந்திரியக் குறைவும் ஒழிந்து மேன்மையடைந்து உலகில் சிறப்புடன் வாழ்வார்கள்.



## 112. நொண்டிக்கு நடையீன்ற லீலை.

குந்துகாலன் என்னும் வைச்யன் ஒருவன் மத்தியார்ஜுனத்தில் ஜன்மத்தை அடைந்து வளர்ந்து வந்தான். கர்ப்பம் முதல் அவனது காலில் ஒரு விதப் பிணியுண்டாகிக் காலின் சக்தியற்றவனாகவே மண்ணுலகில் நொண்டிக்காலனாய்ப் பிறந்தபடியால் அவனை அவனது சுற்றத்தார் உபேக்ஷை செய்து வந்தார்கள். தாய் தந்தையராலும், உறவினராலும், தோழர்களாலும் உபேக்ஷிக்கப்பட்ட அவன் பூர்வ ஜன்ம புண்ணியத்தினால் பாலப்பிராயம் முதல் ஈசுவர பக்தியுள்ளவனாக இருந்தான்.

அவயவக் குறைவையடைந்த அக்குந்துகாலனை அவனது அண்ணன்மாரும் தமது ஜாதிக்குரிய வியாபாரத் தொழிலிலிருந்து நீக்கி விட்டபடியால், அவன் பால்ய வயது முதல் இவ்வுலக வாழ்க்கையை விரும்பாமல் பரமேச்வர பக்தியையே ஜீவநாதாரமாகக் கைப்பற்றினன். ஸம்ஸார வாழ்க்கை ஒன்றுக்குட்பட்டு பற்பல பாபராசிகளைச் செய்து வரும் மூடர்களைக் கண்டு " நீங்கள் மறுஜன்மத்துக்காக நற்பயனைத்தேடாமலிருக்

கிறீர்களே; இது உங்களுக்கு நியாயமாகுமா? தண்ணீர்க் குமிழிபோல் க்ஷண காலத்துக்குள் நாசமடையும் இம் மானிட வாழ்க்கையில் விசேஷ விருப்பங் கொள்ளுதல் நலமா? தம்மா லியன்றவரையில் ஈசனுக்குத் தொண்டு செய்து பரம சிவ ஸ்வரூபத் தியானம் செய்தாலல்லவா முக்தி கிடைக்கும்! இம் மெய்யில் வாழ்க்கையை நம்பாதீர்கள். பஞ்சபூத ஸ்வரூபியா யுள்ள பரம சிவஸ்வரூபத்தைப் பணிந்து உய்வீர்கள்'' என்று பலருக்குச் சிற்சில உபதேசங்களைச் செய்து வரலானுன்.

அக் குந்துகாலன் இவ்விதமாய் இரவும் பகலும் ஈசுவர பக்தியின் பெருமையைப் பற்றிப் பலவாறு புகழ்ந்து கொண்டு வருகையில் அவனுக்குச் சிறந்த ஞானமும் உண்டாயிற்று. மானும் மழுவும் ஏந்தும் தியாகராஜனுடைய தியானத்தையே உற்ற துணையென்று நம்பிய அவ்வைச்யன் மத்தியார்ஜுன மஹாதேவனையும் தனது குலதெய்வமென்று எண்ணி அவரது ஆலயத்தில் புகுந்து பிரதக்ஷிண நமஸ்காரம் முதலியவைகளைத் தினந்தோறும் விடாமற் செய்து வந்தான். அவனுடைய பக்தியைக் கண்டவர் எல்லோரும் அவனைச் சிறந்த யோகி யென்றே நினைத்தார்கள். அவன் பிறப்பு முதல் நடை குன்றிய வனுய் ஜனித்தபடியால் மெதுவாய் நடந்து சென்று கொண்டே ஜகதீச! காலகாலனே! அமுதே! என்று விடியற்காலத்தில் ஈசுவர நாமங்களைச் சொல்லிக் கொண்டே மருதநாத பக்தர்கள் வாஸஞ் செய்யும் வீதிகள் தோறும் சென்று கொண்டிருக் கையில் ஒரு நாள் கதிரவன் உதிப்பதற்கு முன்னமே ஒரு பிராமணோத்தமர், தாளமேந்திக் கொண்டு பஜனை செய்துவரும் அவ்வைச்யனைக்கண்டு, "ஓ மகா பக்தரே! திருவாரூர் நகருக்கு வழி எது? அதைக் கருணையுடன் காண்பிப்பீரா?'' என்று கேட்டார்.

அதைக் கேட்ட வைசியன் "ஓ பிராமணோத்தமரே! திரு வாரூரில் இப்பொழுது என்ன விசேஷம்? எதற்காக அங்குச் செல்லுகிறீர்?'' என்று கேட்டதற்கு, அவ்வேதியரால் கூறப் பட்ட வார்த்தையின் மூலம், அத்தருணத்தில் திருவாரூரில்

தியாகராஜனுக்குக் கலியாணத் திருவிழா நடைபெறுவதாகக் கேள்வியுற்றுணர்ந்து அவ்வைச்யன், "ஓ வேதியரே! உமக்கு நான் பலவாறு வந்தனம் செய்கின்றேன். இப்பொழுது திருவாரூர் நாதனுக்கு திருவிழா நடப்பதாய் எனக்கு நீர் அறிவித்தமைக்கு நான் எவ்வாறு கைம்மாறு செய்வேன்; நான் இது வரையில் அந்நகருக்குச்சென்றதுமில்லை; அந்நகர வழியையறிந்தவனுமல்லேன். தியாகராஜாவின் திருமேனியைத் தரிசிக்காமல் பாவியேனுகிய நான் பூர்வ ஜன்மத்தில் செய்த பாபத்தினுல் நொண்டியாய்ப் பிறந்து எல்லோரும் இகழும் நிலைமையிலுள்ளேன். என்மீது அப்பரம் பொருளின் கருணை எப்பொழுது விழுமோ? அப்பரம் பொருள் உகந்து வாழும் அப்பதியை யான் எப்பொழுது என் கண்களால் காண்பேனே?" என்று பலவிதமாய்த் தனது ஜன்மத்தை நிந்தித்துக்கொண்டு ஏக்கம் அடைந்தான்.

இவ்விதமாய் அவ்வைசியன் உரைத்ததைக் கேட்ட அவ் வேதியன் அவன்மீது கருணைசெலுத்தி "ஓ பக்தசிகாமணியே! நீ இவ்வுலகில் காலில்லாதவனுய் இருந்தாலும் சிவபக்தியாகிய நல்ல முத்துமாலையைப் பூண்டு விளங்குகிறபடியால் உனக்கு நன்மையே நேரிடும். நான் இப்பொழுது அத்திருவாரூருக்கே செல்லுகிறேன். உனது நடையை மீருமலே நானும் உன்னுடனே மெதுவாய் வருகிறேன். அந்நகருக்குச் செல்லும் வழியைக் காட்டுகிறேன். வருவாயா?" என்று கூப்பிட்டார். அவ்வேதியரால் அன்புடன் அழைக்கப்பட்ட அக்குந்துகாலன் அப்பொழுதே அவருடன் செல்ல ஆரம்பித்தான். மந்த நடையையுடைய அவ்வைசியன் ஆமை நகர்வது போல் மெதுவாய் நடந்து செல்லவே, அவ்வேதியனும் அவனுக்குத் தக்கவாறே நடந்து கொண்டு ஸ்ரீ தியாகராஜப்பரம்பொருள் செய்து வரும் திருலீலைகளின் சிறப்பையும் பக்தர்களின் மேன்மையையும் கூறிக் கொண்டே செல்லும் பொழுது நடையில் காலவிளம்பம் நேரிடுவதினுல் தியாகராஜாவின் மணக் கோலத்தைப் பார்ப்பது தவறி விடுமோ என்று ஸந்தேகம் அடைந்த அவ்

வைசியன், "ஓ பரம் பொருளே! உமது திருவடி நினைவையே உறுதுணையாகக் கொண்ட நான் இம்மகானுபாவனுகிய வேதியனுடன் சேர்ந்தமையால் உமது தரிசனம் இவருக்கும் தவறிவிடுமோ என்று பயத்தை யடைகிறேன். லோக நாயகா! நீர் என்மீது கருணை புரியலாகாதா? எனது காலுக்குச் சக்தியை யளிப்பது உமது கருணைக்குச் சிறப்பு அல்லவா? நாங்கள் இருவரும் இவ்வண்ணம் மெதுவாய் நடந்து வரின் உமது திவ்விய தரிசனம் எங்களுக்குக் கிடைக்காமலே முடிவு பெறுமல்லவா?" என்று இவ்விதமாய் மனம் நொந்து வாடிய முகத்துடன் மெதுவாகச் சென்று கொண்டிருந்தான்.

காலை இழந்த அவ்வைசியன் இவ்விதமாய் ஏக்கமடைந்து திருவாரூர் வழியில் செல்லும் பொழுது தியாகராஜர் அவன் மீது க்ஷணகாலம் கடாக்ஷத்தைச் செலுத்தினுர். அதனுல், அக்குந்துகாலனுடைய கால்கள் இரண்டும் நிமிர்ந்து விளங்கிய பொழுது அதைக் கண்டு களிப்படைந்த அவ்வைசியன் "ஓ வேதியரே! உமது தரிசனம் கிடைத்ததின் பயனே; நீர் உரைத்த பரமேசன் திவ்விய குணங்களைக்கேட்டதின் பயனே; பரமேசனுடைய கருணையின் பெருக்கோ; எனது கால்களுக்கு அற்புத சக்தியை அளித்து விட்டது. ஆகையால், சீக்கிரமாய் என்னுடன் நடந்து வரக்கடவீர்" என்று விரைவாய் அவ்வேதியரை அழைத்துக்கொண்டு திருவாரூருக்குள் நுழைந்து தக்க சமயத்தில் தியாகராஜனுடைய திருமணக் கோலத்தைக் கண்டு துதித்துக் களிப்படைந்தான்.



## 113. சோழ நாட்டில் மலையைக்காட்டி மறைத்த லீலை.

விக்கிரம கேது என்னும் பாண்டிய நாட்டரசன் ஒருவன் சோழ நாட்டுச் சிறப்பைக் கேட்டுப் பொறுமை கொண்டு அதை அழிக்கக் கருதி, அதற்குத் தக்க சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். அத்தருணத்தில் சோழ நாட்டரசரின் ஸிம்மாஸனத்தில் விளங்கிய கரவாள மல்லன் என்னும் சோழ ராஜன் தியாகராஜாவின் பாதபத்மத் தியானத்துடனேயே வானுலகை யடைந்த பிறகு சிறு பிராயத்திலிருக்கும் அவனது குமாரனாகிய சித்ரபானு சோழன் அரசனாக வந்தான். அக்காலத்தையே தக்கதென்று கருதிய பாண்டிய அரசனான விக்கிரம கேதுவும் எவ்வித காரணமுமின்றித் திடீரென்று சோழ நாட்டின் மீது படையெடுத்துச் செல்லும்படி சேனைத் தலைவருக்குக் கட்டளை யிட்டான்.

பாண்டியன் கட்டளைப்படி மந்திரிகளாலும், சேனைத் தலைவர்களாலும், போர்வீரர்களாலும் செலுத்தப்பட்ட பாண்டியன் படை நெருங்கி வருவதைக் கண்ட சோழநாட்டு அமைச்சர்கள் பயத்தை யடைந்தார்கள். அத்தருணத்தில் அவ்வமைச்சர்கள் கிழவர்களாய் இருந்ததினாலும், பழைய சோழ மகா ராஜன் வானுலகை யடைந்தபடியினாலும், அவனது குமாரனாகிய சித்திரபானு மகாராஜன் சிறு பிராயத்திலிருப்பதினாலும், அப்பாண்டியப் படை வீரர்களின் வேகத்தைத் தடுப்பதற்கு எவ்வித உபாயமும் அவர்களுக்குத் தோன்றவில்லை. வயது முதிர்ந்த அமைச்சரும், அச்சோழ ராஜகுமாரனும் நடுக்கமடைந்து, தியாகராஜனுடைய பாதத்தையே சரண் எனப் பற்றி ஆலயத்தின் எதிரில் நின்று கொண்டு அஞ்சலியுடன் விளங்கும் கைகளையே அப்படையெழுச்சிக்குப் பிரதி சஸ்திரமாக விடுத்தார்கள்.

மண்ணும் விண்ணும் இருளடையும்படிப் புரண்டு வரும் அப்பாண்டிய சேனையிலுள்ளவர்களில் சிலர் சோழ நாட்டைக் கொள்ளை யடிக்க ஆரம்பித்தனர்; சிலர் குற்றமற்ற ஜனங்களை

ஹிம்ஸை செய்ய ஆரம்பித்தனர்; சிலர் சோழரின் ராஜதானியாகிய திருவாரூர் நகரைத்தவிடுபொடியாக்கி விடுகிறோமென்று கூறினர்; சிலர் தோள்களைத் தட்டிக் கொண்டு கிளம்பினர்; சிலர் குதிரைப் படையினால் சோழ ராஜ்பத்துக்கு நாசத்தை உண்டு பண்ணி வரலாயினர். இவ்விதமாய் இரண்டு முகூர்த்த நேரத்துக்குள் பாண்டியரின் சேனையானது சோழ நாட்டின் எண் திசைகளிலும் துன்பத்தை விளைவிக்கையில் அவ்வித கொடிய செயல்களைக் கண்ட ஸாதுக்கள் "ஹா ஹா" வென்று கதறிக் கொண்டும், யார் கதியளிப்பாரென்று தேடிக்கொண்டும் தியாகராஜனது நாமங்களையே பயத்தைத்தீர்க்கும் மருந்து என்று நினைத்துக் கொண்டும் திசைகள் தோறும் ஓடினர். சோழ நாடு முழுவதும் குழப்ப மடைந்தது.

இவ்விதமாய் ஸத்திய மார்க்கத்தை மீறிய துஷ்ட ராஜாக்களின் ஏவுதலால் தமது தேசத்துக்கு நேரிட்டுக் கொண்டிருக்கும் ஸகல துன்பங்களையும் போக்குவது உமது கடமையேயாகுமென்று தியாகராஜன் பாதத்தையே கதி யென்று பற்றி அக்கோமகன் மைந்தன் புலம்பும் பொழுது எவ்வுயிருக்கும் நாதனாகிய தியாகராஜன் அப்பாண்டிய சேனையின் கொடுந் தொழிலைக்கண்டு பொறாத மனமுடையவராய்த் தனது ஸங்கல்பத்தினால் சோழ நாட்டின் எண் திசைகளிலும் பெரிய மலைகள் விளங்கும்படி ஸங்கல்பம் செய்தார். இவ்வாறு தியாகராஜர் நினைத்தபடியே பூமியிலிருந்து அநேக மலைகள் தோன்றியபடியால் பாண்டியன் சேனைகள் முன் செல்ல முடியாமலும், பின் செல்ல முடியாமலும் மலைகளின் சரிவுகளில் சிதறுண்டன. சில குதிரைகள் அம்மலையின் கற்பாறைகள் நிறைந்த வழியில் ஏறும் பொழுது கால் பிளப்பை யடைந்தன; சில குதிரைகள் முன் பின் வழியை யறியாமல் நெடு நேரம் வரையில் அம்மலைகளின் தாழ்வரைகளில் சுழன்று வாடிக் களைத்தன. சில குதிரை வீரர்கள் தாகத்தினாலும், பசியினாலும் வாடினர். சில யானைகளும், யானைப் பாகர்களும் அம்மலைகளின் தோற்றத்தினால் தடுக்கப்பட்டவர்களாய் அலைந்து திரிந்தனர்,

சோழ நாட்டரசன் வேண்டுகோளின்படி பகை மன்னரின் படையெழுச்சியை அடக்கக்கருதிய தியாகராஜன் தனது சக்தி விசேஷத்தினுல் சோழ நாட்டில் பர்வதங்களைத் தோற்றுவித்து அப் பாண்டியனுடைய சேனையைச் சிதறும்படிச் செய்து அச் சேனையிலுவ்ளவர்களுக்குத்திசை தடுமாறுதலை உண்டுபண்ணி ஒருவரை ஒருவர் சந்திக்க வொட்டாமல் செய்து அவர்களது ரதங்களையும், கஜங்களையும், புரவிகளையும், பதாதிகளையும் அம் மலைத் தோற்றத்தினுல் நாசம் செய்து வைத்தபடியால், எக் காலத்திலும் மலைகளில்லாமல் சம பூமியாயிருந்த அச்சோழ மண்டலத்தில் திடீரென்று அளவற்ற மலைகள் கிளம்பித் தங்களுக்குப் பலவாறு துன்பத்தை விளைவித்ததைக் கண்டு பயந்து மனமுருகி, வழி தடுமாறிச் சோர்ந்து களைப்பை யுடைந்து அவமானப்பட்டுத் தமது இருப்பிடத்திற்குச் சென்றூர்கள்.



## 114. பௌத்தரின் கண்ணையழித்த லீலை.

வேதார்த்தங்களைத் திருடும் இயற்கையுடைய சில பௌத்தர்கள் தமது துஷ்ட சிஷ்ய மண்டலத்துடன் அச் சோழ நாட்டில் புகுந்து அங்கங்குச் சிற்சில விடங்களில் தங்கியிருந்து ஜனங்களின் மனதைக் கலைக்க ஆரம்பித்தனர். ஸங்காராம ஸமாதியின் சிறப்பையும், அகளங்கன், நந்தி சந்திர தீபன் முதலிய புத்தர்களின் நிர்வாண சக்தியின் சிறப்பையும் அவர்கள் துதித்துக் கூறுகையில் "இம்மண்டலத்தில் மலையைக் காட்டி யொளித்த தியாகேசனது சக்திக்கு ஈடாகுமா உங்களது முன்னோரின் சக்தி?" என்று பயமற்றவர்களாய்ச் சில சிவபக்தர்கள் அளிக்கும் எதிர் மொழியைக் கேட்ட அந்தப் புத்தர்கள் திகைத்து நின்றூர்கள்.

பற்பல யுக்திகளாலும் சூது மார்க்கத்தினாலும் இச்சோழ மண்டல வாஸிகளான சிவ பக்தர்களின் நம்பிக்கையை மாற்றி விடுவதே நலமென்று நிர்ணயம் செய்துகொண்ட அப் புத்தர்கள் பயமற்றவர்களாய் ஈசனின் மகிமையை மறைத்தும் தூஷித்தும் கண்டித்தும் பேசத் தொடங்கினர்கள். சிற்சில சமயங்களில் அஹிம்ஸா நியாயத்தையே முக்கியமென்றுரைக்கக் கருதி அதனடியாய்ப் பூர்வ மகரிஷிகளின் சுருதி ஸ்மிருதி வசனங்களின் கருத்தை யழித்து வேதாந்தங்களின் கருத்தையும் வேருகக் கூறி ஜனங்களின் மனதைத் தமது மதக்கோட்பாட்டில் படியும்படி வஞ்சனை யுக்தி சொல்லி வந்தார்கள். அப் புத்தர்களின் மாயா சக்தியையும் பிபீஷிகா (பயமுறுத்தும்) சக்தியையும் கண்டு பயந்த சிலர் பரதத்துவமதம் இம் மண்டலத்திலழிந்து விட்டதென்றே கருதி வெளியூருக்குச் சென்றனர். சிலர் அவர்களின் வஞ்சனை யுக்திக்கு உட்படாமலும் தமது மதத்தில் அவ்வளவு நம்பிக்கை வைக்காமலும் சஞ்சலமடைந்த மனத்தினராய்ப் புலம்பினர். மற்றும் சிலர் அம் மாயா மதத்தோரின் சூழ்ச்சிக் குட்பட்டனர். இவ்விதமாய் அவர்கள் சில நாட்களில் செய்துவரும் ஸித்தாந்த அழிவைக் கண்டு ஆற்ரு மனமுடைய பெரியோர்களில் ஒருவராகிய குவிதாபன் என்னும் யோகி ஒருவர் தியாகராஜனது பலிபீடத் தருகில் நின்றுகொண்டு கதறலானர்.

"ஓ வேதாந்த மெய்ப் பொருளே! தியாகேசனே! உமது தேசத்திலேயே பொய் மதத்தோராகிய பௌத்தர்கள் வந்து உமது தத்துவத்தை மறைத்து வஞ்சனை வழியில் உமது தொண்டரை யிழுத்து வருகிருர்களே. இச் சமயத்தில் நீர் உறங்கிவிடின் உமது தத்துவம் ஆகாய மலராகிவிடும்; ஆகையால் நீர் வேதத்தின் சிரஸில் விளங்குவது மெய்யாயின் கர்மார்ச்சனைகள் யாவும் உம்மையே அடைவது மெய்யாயின், நீரே அந்தணர் தெய்வமென்பது உண்மையாயின், இம்மாயாவிகளையழித்துத் தொண்டர்களாகிய எங்களைக் காப்பாற்றுவது உமது கடமை" என்று முறையிட்டார். இவ்வித கொடிய கால

விசேஷத்தை அறிந்த சோழ மன்னனும் அவர்களைத் தண்டிக்க வேண்டுமென்று ஆலோசனை செய்யலானான்.

இத்தகைய சமயத்தில் தியாகராஜப் பரம்பொருளே தமது ஸத்திய மதத்தின் உயர்வை உலகில் நிலைநாட்டக் கருதி அக் குவிதாபன் வேண்டுகோளுக் கிரங்கி அம் மாயாவாதிகளின் கண்கள் குருடாகும்படி செய்தார். அதனால், அவர்கள் அவமானத்தை யடைந்து கர்வத்தை விட்டொழித்துத் தமது மதத்தின் இழிவையும், சைவ மதத்தின் பெருமையையும் நன்றாய் அறிந்து கொண்டவர்களாய் அச்சோழ மண்டலத்தை விட்டு வெளியில் ஓடினார்கள். திடீரென்று தமது கண்கள் பார்வை யிழந்ததைக் கண்டறிய முடியாமல் திகைத்து நின்றார்கள். தங்களுக்கு அம் மண்டலத்தில் ஏற்பட்ட பரிபவக் குறிகளை வெளியில் காட்டவும் சொல்லவும் வெள்கி நின்றார்கள். சோழ மண்டலவரசன் வாரீரென்று அழைத்த பொழுதும் அவன் எதிரில் வந்து நிற்க முடியாமல் திசைதோறும் ஓடினர்.

பண்ணிய சாத்திரப் பேய்கள்
பறிதலைக் குண்டரைவிட்
டெண்ணில் புகழீசன் றன்னருள்
பெற்றேற்த மூண்டுகோலோ
திண்ணிய மாமதி லாரூர்த்
திருமலட் டானனேங்கள்
புண்ணியன் றன்னடித் தொண்டர்க்குத்
தொண்டராம் புண்ணியமே

—தாண்டகம்



## 115. தானபதியின் கர்வத்தை யழித்த லீலை.

தானபதி யென்னும் பௌத்தமத அரசன் ஒருவன் எக்காலத்திலும் தானம் செய்வதில் தானொருவனே நிகரற்றவன் என்று தனது பெருமையைத் தானே பலவாறு புகழ்ந்து கொண்டு சில பரிஜனங்களுடன் திருவாரூர் திருப்பதியை யடைந்து அங்குச் சில நாள் வாஸம் செய்யலானான்.

தனது தானச் சிறப்பைப் பிரஸித்தி செய்து கொள்வதற்காகவே திருவாரூர் வந்து வாஸம் செய்யும் தானபதி யென்னும் புத்தவரசன் தினந்தோறும் காலையில் ஸ்நானம் முதலிய காரியங்களைச் செய்து முடித்துவிட்டுப் பற்பல தானங்களை யாசகருக்கு அளித்து வந்தான். அதனால், நானு தேசங்களிலிருந்த கல்வி யுடையோரும், வேதமோதியவரும், யாசகரும் அவ்வரசனை நாடி பலவித தானங்களைப் பெற்று வந்தார்கள். அவ்வரசன் இவ்விதமாய்த் தானம் செய்யும் சமயத்தில் குரு ப்ரீதி, புத்தகய ப்ரீதி என்று தனது மதக்கோட்பாட்டின்படி சொல்லிக் கொண்டே தானம் செய்வது வழக்கம். அருகிலிருந்து அதைக் கேட்டுக் கொண்டிருந்த யாசகர்களில் ஒருவராகிய 'வேதவித்' என்னும் வேதியன் அம்மன்னவனைக் கண்டு "ஓ மன்னவனே! உமது பெயர் என்ன?" என்றான். அதற்கு அவன் "என் பெயர் தானபதி; நான் எனது மதக்கொள்கையின்படி அகளங்கப் புத்தாதி குருஸ்மரண மூலமாகவே தானம் செய்து வருகிறேன்" என்று மறுமொழி யளித்தான்.

அதைக் கேட்ட 'வேதவித்' என்னும் வேதியர், "ஓ மன்னவனே! இந்நகரில் தானபதி யெனினும் தியாகபதி யெனினும் எனது குல தெய்வமாகிய தியாகராஜன் ஒருவனுக்கே பொருந்தும். அவ்வித தானபதி யென்னும் நாமதேயத்தை நீ வைத்துக் கொள்வது உனக்கு அழகல்ல; அல்லாமல் நீ தானபதி யென்னும் பெயரை வகித்துக் கொள்ள விரும்புவாயாகில் நான் வேண்டும் பொருளை எனக்குத் தானம் செய்து

இப்பெய்ரை யடைவாய். நான் யாசிக்கும் பொருளை நீ யளிக்க வல்லமை யற்றவனுகில் இப்பெயரை வைத்துக் கொள்ளலாகாது " என்று வழக்குரைத்தார்.

இவ்வண்ணம் அந்த வேதியர் தைரியத்துடன் கூறியதைக் கேட்ட அத்தானபதி மன்னவன், " ஓ அந்தணரே! நீர் வேண்டும் பொருளின் பெயர் என்ன? அளவு என்ன? எவ்வளவு வேண்டும்? அதைச் சொல்வீர். அது எப்பொருளாயினும் யான் அளிப்பேன்? " என்று சொன்னுன். இவ்வித உறுதி மொழியைக் கேட்ட வேதியர் அம்மன்னனை நோக்கி, "முகத்தில் சந்திர பிந்து ரேகையை யுடையதாயும், முன் முழங்கால்களிரண்டும் வெண் மயிர் நிறைந்ததாயும், பின் கால்களிரண்டும் கருமயிர் நிரம்பியதாயும், வால் சிவந்தும், காதுகள் நீல வர்ணம் நிறைந்தும் விளங்கும் ஸாரக கபிலைப் பசுவை நான் யாசிக்கிறேன். இவ்விதப் பசுவை யளிப்பாயாகில் நீ தானபதியாகுவாய். எனது தெய்வமாகிய தியாகராஜர் அளிப்பாராகில் அவரே தியாகபதியாகுவார் " என்றுர்.

ஐம்பது கோடி யோசனை விஸ்தீர்ணமுள்ள இப்பூமண்டலத்தில் எவ்விடத்திலும் இந்த இலக்கணமுள்ள பசு கிடைக்காதென்று அம்மன்னவன் மறுத்த பொழுது அவ்வேதியன் ஆரூர் நாதனது தேவாலயத்திற்குச் சென்று வணங்கி ஈசனைத் துதித்துத் தான் செய்த பிரதிக்கினையை நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று வேண்டுகையில் தியாகேசனின் அருளால் காமதேனுவானது அவ் வேதியனுரைத்த லக்ஷணங்களையுடைத்ததாய் அவரது எதிரில் வந்துநிற்கையில் அக்காமதேனுவைக்கண்டு பிரதக்ஷிணம் செய்து அவ்வேதியர் வேகமாய் அப்புத்த மன்னன் ஸபைக்கு வந்தார். அவனது வழியைப் பற்றிக் கொண்டே அக்காமதேனு வருவதையும் கண்டு அம்மன்னவன் ஆனந்த மடைந்து அவ்வேதியரை வணங்கித் தானபதி யென்னும் பெயர் இந்நகர தேவனுகிய தியாகராஜனுக்கே தகும் என்று புகழ்ந்தான். அன்று முதல் அப்புத்த மன்னவன் தம் மதத்தைப் பொய் மதம் என்று

நினைத்து ஸத்திய மதமாகிய சைவ மதத்தையே ஆரிய மத மென்றும் புண்ணிய மத மென்றும் நினைத்துத் தான் சைவ மதத்தில் பிரவேசித்துச் சோழவரசனுடன் ஸ்நேகமாயிருந்து தியாகராஜ பக்தனாய் விளங்கினான்.



## 116. ஜலத்தில் ஒளிந்திருந்த லீலை.

விக்கிரம கேது என்னும் பாண்டிய மன்னன் ஒருவன் மாத்திரம் தியாகராஜாவின் மகிமையை அறிந்து கொள்ளாதவனாய்த் தியாகராஜன் மீதும் சோழ நாட்டின் மீதும் அடங்காப் பொறாமை கொண்டவனாயிருந்தான்.

முன்பு ஒரு சமயத்தில் தான் சோழ நாட்டின் மீது படையெடுத்த பொழுது எக்காலத்திலும் மலையற்றதாய் விளங்கும் அச் சோழ மண்டலத்தில் திடீரென்று பெரிய மலைகளைத் தோற்றுவித்துத் தனது சேனைகளைக் களைத்து ஓடும்படிச் செய்தவர் தியாகராஜராகவே இருக்க வேண்டும். சோழ அரசனுக்குத் தக்க ஸேனைகள் இல்லை. நம் மீது படையெடுத்து நம்மைத் தோல்வி யடையச் செய்யும் வன்மை எக்காலத்திலும் இல்லை. தியாகராஜனென்னும் தெய்வத்தின் ஸகாயத்தினாலேயே இவன் நமது சேனையைச் சிதறும்படி செய்கிறான். ஆகையால் அச் சோழவரசர்களின் குல தெய்வமாகிய தியாகராஜனை நாம் அழித்து விடில் வெகு சுலபமாய் அச்சோழ நாட்டையும் கைப்பற்றி விடலாமென்று யோசனை செய்தான். விக்கிரம கேது வென்னும் பாண்டிய மன்னன் துராலோசனை செய்ததை அவனது துர்மந்திரிகளும் ஏற்றுக் கொண்டு அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார்கள்.

உருவற்றவராயும், எங்கும் நிறைந்த பரம் பொருளாயும், பக்தருக்கு எளியவனாயும், பகைவருக்குக் காண்டற்கரியவனாயும், விளங்கும் தியாகராஜனை அழித்து விட வேண்டு மென்று எண்ணங் கொண்ட பாண்டிய மன்னவன் சில மந்திரிகளையும், சில வேலைக்காரர்களையும், சில சூதர்களையும் அனுப்பினான். அப்பாண்டியனால் ஏவப்பட்ட அப்பாபிகளும் விரைவாய் ஆரூரையடைந்து சிற்சில மாயைகளைச் செய்து தியாகராஜாவின் பிம்பத்தை யழித்து விட வேண்டும்; அவரது பாதத்திலிருக்கும் ஸகல யந்திர சக்திகளையும் நாசம் செய்து அழிக்கவேண்டுமென்று ஸமயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இவ்விதமாய் அப்பாபிகள் செய்து வரும் ஏற்பாடுகளையெல்லாய் குலைக்கக் கருதிய தியாகராஜர் ஒரு நாள் இரவில் திருக்கண் வளருந்தருணத்தில் அப்பாண்டிய நாட்டுப் பாபிகள் தமது சூன்னிய வழியினால் திருக் கோயிலுக்குட் புகுந்து தியாகராஜனை அழிக்கக் கருதி அருகில் நெருங்கினார்கள்.

அப்பாபிகள் கோயிலுள் நுழையும்பொழுதே பரமசக்தியையுடைய தியாகராஜர் தனது அற்புத சக்தியினால் அவர்கள் கண்களுக்குப் புலப்படாமல் மறைந்துவிட்டார். அவரது பாத பீடத்தில் விளங்கும் ஸத்திய வேதிகையும் இயந்திர ஸ்தாபனமும் மறைந்துவிட்டது. அதையறியாத சூதர்கள் ஆலயமெங்கும் தேடித்திரிந்தனர். எவ்விடத்திலும் தியாகராஜர் காணப்படவில்லை. தமது மாயாசக்தியின் வல்லமையினால் அவர் அழிந்தே இருக்கவேண்டுமென்று நினைத்தார்கள். ஆகிலும் தியாகராஜர் மறுபடியும் தோன்றுவாரோ என்று சந்தேகமுற்று நாலைந்துநாள் வரையிலும் அச்சூதர்கள் அந்நகரில் தங்கியிருந்து பார்த்தனர். அவர்கள் அந்நகரை விட்டகலும் வரையில் தியாகராஜர் கமலைவாவியுள் மறைந்திருந்தார்.

அவ்வித அற்புத சேஷ்டையை யறியாத தொண்டர்களெல்லோரும் " நமது குல தெய்வத்தைக் கோயிலில் கண்டவருண்டோ; எங்கும் நிறைந்த கருமணியானது இப்பொழுது

சிலநாளாய் இத்திருக்கோயிலில் தோற்றவில்லையே. இதற்குக் காரணம் ஒன்றும் விளங்கவில்லையே'' என்று புலம்பலுற்றனர்.

தியாகராஜர் இவ்விதம் காணமல் போனதைப்பற்றி வருந்தியழும் தொண்டர்களின் முகவாட்டத்தையும் அச்சோழ நாட்டரசனுடைய பலக் குறைவையும், அமைச்சரின் மனத் துயரத்தையும் கண்ட அப்பாபிகள் வெகு சந்தோஷத்துடன் தமது நாட்டுக்குச் சென்று நாங்கள் எங்களுடைய மாயா சக்தியினல் சோழ குலத் தெய்வமான தியாகராஜனை அழித்து விட்டோமென்றுரைத்துப் பாண்டியவரசனுக்குக் களிப்பை யுண்டாக்குவித்தனர். அங்குச் சோழநாட்டில் தியாகராஜனைக் கோயிலின் கண் காணுத தொண்டர்களும் அரசனும், அமைச் சரும் கைகூப்பிக்கொண்டு ''ஓ பரம்பொருளே! பக்தரின் அமிர்தமே! சிலநாள் தொடங்கி நாங்கள் உமது வடிவழகைக் கண்களால் காணமல் ஏக்கமடைந்து வாடுவதை நீர் அறிய வில்லையா ? உமது கோயிலில் ஏற்றிய விளக்கு நன்ருய் விளங்கவில்லை ; குழந்தைகளும் பாலுண்ணவில்லை ; பசுக் களும் கன்றுகளுக்குப் பாலையளிக்கவில்லையே. வேதிய ராகுதிப் புகையும் வானில் கிளம்பவில்லையே. இவ்விதமாய் இந்நகருக்கும், இம்மண்டலத்துக்கும் பிரளய காலம் நேரிட் டிருப்பதைப்போல் விளங்குவதை நீர் தீர்க்கலாகாதா ?'' என்று போற்றுகையில் கருணைநிதியாகிய தியாகராஜர் அக் கமலைவாவியின் நடுவிலிருந்து கிளம்பி ஒரு சிறுவன்போல் விரைவாய் நடந்துசென்று அத்தொண்டர்கள் கண்ணாரக் களிக்கும்படி தரிசனமளித்துக் கொண்டே தமது தெய்வ பீடத்தருகே போய் விளங்கினர்.



## 117. ஜலக்கோட்டையைக் கட்டிய லீலை.

சிலநாள் சென்றபிறகு ஒற்றர்கள் மூலமாய் மறுபடியும் தியாகராஜர் திருவாரூரில் விளங்குவதாயும், அவரது பாத பக்தியினால் ஜனங்கள் முகமலர்ச்சியடைந்திருப்பதாயும் கேள்வியுற்ற அப்பாண்டிய மகாராஜன் சோழவரசனை எவ்விதத்திலும் மாய்த்து விடுவதாகத் தீர்மானம் செய்துகொண்டு வெகுண்டு எழுந்து படையேவித் தானும் ஒரு புரவியின் மேல் ஏறிக்கொண்டு கையிலேந்திய வாளை முதற்றுணையாக வைத்துக்கொண்டு வெகு வேகமாய் சோழநாட்டின் எல்லையுள் நுழைந்து சகல ஜீவராசிகளும் கண்டு நடுங்கும்படி படையெடுத்துச் சென்றான். த்வஜ படங்கள் ஆகாயத்தில் அசையவும், பேரிகைகள் முழங்கவும், வீரர்களின் சிங்கநாதம் எழும்பவும், பூமியின் புழுதி கதிரவனை அரவு போல் மறைக்கவும், பகை மன்னரின் மனந்துடிக்கவும், வழியிலிருக்கும் காடிகளும், சிங்கங்களும், கஜங்களும் அலறி ஓடவும் இவ்வித ஆடம்பரத்துடன் சோழன் மீது அப்பாண்டியன் காரணமின்றிப் படையெடுத்துச் செல்வதைக் கண்டு வானவரும் அஞ்சினர்.

ரிஷிகளும், தத்துவ ஞானிகளும், அச்சமயத்தில் தியாகராஜனை க்ஷணகாலம் தியானித்தார்கள். படைவீரர்களின் ஆரவாரத்தைக் கண்ட ஜனங்கள் கதறிக்கொண்டு ஓட ஆரம்பித்தனர்; சிலர் வாடினர்; சிலர் ஈசனது அற்புத குணங்களைப் பாடினர். இவ்விதமாய் மறுபடியும் பாண்டியரால் ஏற்பட்ட துன்பத்தைப் போக்க வழியறியாத சிலர் உயிர் விடுவதே நலமென்று கருதினர். இவ்வண்ணம் தமது தேசம் புண்பட்டு வாடுந்தருணத்தில் தியாகராஜர் தனது முதல் சிருஷ்டியாகிய ஜலத்தினால் திருவாரூர் நகரைச் சுற்றிலும் இரண்டு யோசனை அகலமும், ஐந்து யோசனை நீளமுள்ளதுமாய் ஒரு ஜலக்கோட்டையை உண்டாக்கினார். அப்பொழுதே கடல் என்று சொல்லக்கூடியதாய் ஆரூர் நகரைச் சுற்றிலும்

சிறந்ததொரு ஜலக்கோட்டை உண்டாகவே அதைக்கண்ட ஜனங்கள் எல்லோரும் பகைவர்களின் பயமற்றவர்களாய் முக் காலத்திலும் தியாகராஜாவின் தரிசனம் நைவேத்தியம் முத லான தேவ காரியங்களையும் அதிதி காரியங்களையும் முறைப் படி முடித்துக்கொண்டு சுகமாய் வாழ்ந்துவந்தார்கள்.

ஸேனு ஸமூஹத்துடன் சோழ நாட்டின் மீது படை யெடுத்து வந்த விக்கிரம கேதுவென்னும் பாண்டிய மகாராஜன் திருவாரூர் நகருக்குச் சமீபத்தில் நெருங்கும்பொழுது கடல் என்று நினைக்கத்தக்கதாய் விளங்கும் அவ்வித ஜலக்கோட்டை இருப்பதைக் கண்டு வியப்படைந்தான். தியாகராஜன் அரு ளாலேயே இந்தத் திருவாரூர் நகருக்கு இவ்வித ஜலதுர்க்கம் உண்டாயிருக்க வேண்டுமே யல்லாது, எவ்வித சிற்பிகளாலும் இவ்வித ஜலக்கோட்டையைக்கட்டிப் பகைவர் படையைத்தடுக்க முயன்றதாகத் தோன்றவில்லை. ஆகையால், நாம் இச்சோழ ராஜன் மீதும், தியாகேசனின் மீதும் பொறாமை கொள்ள லாகாது. முப்பொழுதிலும் வேதியர் தொழும் இத்தெய் வத்தை நாமும் வணங்கவேண்டும் என்று நினைத்தான்.



## 118. கோதிக்கும் லோஹத்தை உட்கோண்ட லீலை.

சிலாகவசனென்னும் சிற்பாசிரியன் ஒருவன் சோழ மகா ராஜாவின் கட்டளையினால் தியாகராஜனது உருவம் போலவே மற்றொரு தியாகராஜ பிம்பத்தைச் செய்து எடுத் துக்கொண்டு ஆரூருக்குத் திரும்பினான்.

உத்தராயணத்தில் சுப மாசத்தில் அமிர்த யோகம்

கூடிய சுப சமயத்தில் சிற்ப சாஸ்திர முறைப்படி பஞ்ச லோஹ, பஞ்சவ்யக்தி, பஞ்ச சுத்தி வர்க்கங்களினால் நிர்மாணம் செய்யப்பட்டு நேத்திரோந்மேஷணம் முதலியவைகளைச் செய்துவைத்துப் புஷ்பப் பல்லக்கில் அந்த தியாகராஜாவின் திருமேனியை ஏற்றியருளி மங்கள வாத்தியம் முழங்கும்படி ஆரூருக்கு எடுத்துத் திரும்பும் அந்தச் சிலாகவசனுக்கு வழியில் திடீரென்று சிற்சில அபசகுனங்கள் தோன்றின. அவைகளைக் கண்டு மனத்துடிப்பையடைந்த அந்தச் சிற்பியும் அவனது தோழரும் அம்மூர்த்திக்குப் பின் ஸ்வஸ்திவாசனம் படித்துவரும் அந்தணரும் தாம் கொண்டுசெல்லும் தியாகராஜ விக்கிரஹத்துக்கு எவ்வித தீங்கு நேரிடுமோ! அல்லது யாருக்கு எவ்விடத்தில் எவ்விதத் துன்பம் நேரிடுமோ'' என்று வாடிய முகத்துடன் சென்று கொண்டிருக்கையில் யமனது நாக்கு என்று சொல்லக் கூடியதாய் விளங்கும் ஒரு வாளைக் கையில் ஏந்திக் கொண்டு காட்டு வீரன் ஒருவன் அவர்கள் எதிரில் தோன்றி அவர்கள் வழியைத் தடுத்தான்.

வழியைத் தடுத்துக் கொண்டு அட்டஹாஸம் செய்து கொண்டும், வாளை யுருவிக் கொண்டும், மீசையை முறுக்கிக் கொண்டும், பற்களைக் கடித்துக் கொண்டும் யமன் போல் அவர்களெதிரில் தோன்றிய அவ்வீரன் "எனது உத்திரவைப் பெற்றுக் கொள்ளாமல் நீங்கள் இந்தப் பல்லக்கில் பிம்பத்தை வைத்துச் செல்வது தகாதகாரியம்; ஆகையால் நீங்கள் இந்த மூர்த்தியை விட்டு விடுங்கள்; உயிருடன் இருப்பிடம் போய்ச் சேருங்கள்; இதற்குச் சம்மதமில்லாவிடில் என்னுடன் போர் புரிந்து என்னை வென்று செல்வீர்கள்'' என்றுரைத்தான். அவ்வீரன் இம்மாதிரி சொல்லும்பொழுது சிற்பாசிரியர் முதலாயுள்ள ஜனங்கள் எல்லோரும் பெருமூச்சுவிட்டு அழுது புரண்டு புழு போல் துடித்துத் திகைத்து நிற்கையில் வேதியனொருவன் எழுந்து அவ்வீரன் முன் வந்து நின்று அவனுக்கு வேதமொழியினால் ஆசி கூறி, "ஓ அரண்ய ஸார்வபௌமனே! நீ உரைத்ததெல்லாம் நியாயமே யாகும். ஆகிலும், சோழ

ராஜன் விருப்பம்போல் சிறந்த சிற்பாசிரியனால் சுப சமயத்தில் ஸகல லக்ஷணங்களுடன் கூடியதாய் நிர்மாணிக்கப்பட்ட இப் பிம்பத்தை இழப்பதற்கு மனம் இல்லை. உன்னை எதிர்த்துப் போர் புரியும் சிந்தை மன்னவருக்கே உதிக்காது. ஆகையால் தர்மசிந்தையுள்ள நீ உனது கோபத்தை அடக்கிக்கொண்டு மற்றொருவிதமாய் மொழி பகர்வது நியாய வழி யாகும்'' என்று சொன்னான்.

சாஸ்திரங்களைக் கற்று விவேகம் பெற்ற அவ்வேதியனால் இவ்வண்ணம் உரைக்கப்பட்ட மொழியைக் கேட்டு அவ் வீரனும் அவ்விதமே தனது கோபத்தை யுள்ளடக்கிக் கொண்டு ''ஓ வேதியரே! எனது ஹாடகசாலையில் கொதித்துக் கொண்டிருக்கும் லோஹத்தை உங்களில் யாராவது உட் கொண்டு உயிர் பிழைத்தெழுந்தீராகில் உங்களது பிம்பத்தை நீங்களே எடுத்துச்செல்வீர்கள். இறப்பாரேயாகில் என் னிடமே பிம்பத்தை யளித்துவிட்டுச் செல்லவேண்டும்'' என்றான். அவ்வித உறுதியைக் கேட்டவரனைவரும் கொதிக் கும் லோஹத்தையுண்டு உயிருடன் ஜீவித்திருப்பது யாரால் முடியும்? என்று கலங்கினர். அத்தருணத்தில் அவ்வழகிய திருமேனியை அவ்வீரனிடம் கொடுக்க மனதில்லாத அவ் வேதியனும் அச்சிற்பாசிரியனும் பலவிதமாய்த் தியாகேசனைப் போற்றி இந்தச் சமயத்தில் நமக்கு நேரிட்டிருக்கும் இடரைக் களைவீரென்று துதித்தார்கள். அவ்வாறே தயாநிதியாகிய தியாகராஜரும் ஒரு மானிட வீரனாய்த் தோன்றி அவ்வீர னுடைய ஹாடகசாலையில் நுழைந்து மகா லோஹத்தைத் தாகித்தவன்போல் வாயில் ஊற்றிக்கொண்டும் வாயைத் துடைத்துக்கொண்டும் உயிருடன் வெளியில்வந்து நின்றார்.



## 119. கன்னிகாதானம் செய்வித்த லீலை.

சிற்றம்பலத்தில் நித்திய வாஸம் செய்பவராகிய வேதசர்மா என்னும் வேதியர் ஒருவர் இருந்தார். அவரது குமாரிக்கு விவாக வயது வந்தபொழுது அவர் திருவாரூர் நகரில் நித்தியவாஸம் செய்யும் பாரத்வாஜ கோத்திரத்தி லுதித்த யக்ஞசர்மாவின் குமாரனாகிய காண்டசர்மனுக்குத் தனது கன்னிகையைத் தானம்செய்வதாய்த் தீர்மானித்திருந்தார். அவ்விஷயத்தைக் கேள்வியுற்ற அவரது பத்தினியானவள் ஸ்திரீ ஜாதிக்குரிய கொடுந்தன்மையினாலும், மற்றுமுள்ள சில துர்க்குணங்களினாலும் வேறுபடுத்தப்பட்ட மனமுடையவளாய்க் கொண்டு தன் பர்த்தாவின் மனக்கருத்தைக் கண்டித்துத் தமது குமாரியை காண்ட சர்மனுக்குக் கொடுக்கக்கூடாது என்று மறுத்தாள். வேத சர்மன் அவ்வரனுடைய நற்குணங்களைப் பலவாறு புகழ்ந்தபோதிலும் அவள் தான் கைப்பற்றிய பிடிவாதத்தை விடவேயில்லை. இவ்விதமாய் அவ்வேதிய தம்பதிகளுக்குத் தமது குமாரியின் விவாக விஷயமாய் மனக்கருத்து வேறுபட்டிருக்கும் தருணத்தில் வரனாகிய காண்ட சர்மன் அவ் வேதியரின் குமாரியையே தான் மணந்துகொள்ளும்படி அருள் புரிய வேண்டுமென்று தியாகராஜாவின் ஸன்னிதானத்தில் பணிந்துவந்தான்.

பக்தருக்கு மெய்த்தெய்வமென்று கீர்த்திபெற்ற தியாகராஜர் அவ்வேதியன் கருத்தையும், தனது பக்தனும் வரனுயுமுள்ள காண்ட சர்மனின் மனக் கருத்தையும் நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று நினைத்தார். அவ்வித பரமேச்வர ஸங்கல்பத்துக்குத் தக்கவாறே உலக வாழ்க்கையும் காலசக்கிரமும் நடைபெறலாயிற்று. திருச்சிற்றம்பலத்தில் வாஸம்செய்யும் வேதசர்மன் என்னும் அந்த அந்தணர் தமது குமாரியின் கலியாண விஷயமாய் மனைவியின் மனதுடன் வேறுபட்ட மனதுடையவராய் விவாஹ ஸ்மரணத்தைக் கைவிட்டவராய்ச் சில காலமிருந்து, வருங்காலத்தை யனுசரிப்போமென்று நினைத்

துத் தக்ஷிண தேச யாத்திரையாகப் புறப்பட்டுச் செல்வத் திருவாரூருக்கு ஒருநாள் வந்து சேர்ந்தார். வேத சர்மன் இவ்வாறு தக்ஷிண தேச யாத்திரையாகச் சென்று சில நாட்கள் கழிவதற்குள் அவரது மனைவி தனது சகோதர னுடைய விவாஹத்திற்காகத் தானும் தனது குமாரியுமாகச் சிற்றம்பலத்திலிருந்து கிளம்பி வடக்கு நோக்கிச் செல்லுகை யில் அவர்களது வழியில் வேட்டைக்காரர்களின் கூட்டத்தி லிருந்து பயந்த கரடியொன்று எதிர்வந்தது.

குர்க்குரச் சத்தத்துடன் வாயில் நுரையை வழியவிட்டுக் கொண்டு பயங்கரமான முகத்துடனும், நகங்களுடனும் தமது எதிரில் வருவதைக்கண்ட அம்மாதும் அவளது குமாரியும் பயத்தையடைந்து ஒருவரை ஒருவர் விட்டுப் பிரிந்து ஓடும் பொழுது பழைய வரனாகிய காண்ட சர்மன் தெய்வச் செயலால் அவ்வழியில் குறுக்கிடலானான். அவ்வேதியர் மனைவி தனது கணவரது அனுமதியில்லாமல் தானும் தன் குமாரியும் ஊருக்குச் செல்லும்பொழுது திடீரென்று தமக்கு இவ்வண் ணம் நேரிட்ட துன்பத்தை யார் விலக்குவார்? குமாரி எங்கே சென்றாளோ? பரமேசா! என்று புலம்பிக்கொண்டு வருகை யில் அக் காண்ட சர்மன் அவளது அழுகுரலைக் கேட்டு ஓடி வந்து யார் என்று விசாரித்துத் தைரியமுரைத்துத் திரும்பு கையில் மற்றொரு புருஷனால் எவ்வித இடருமின்றித் துன்பத் திலிருந்து காப்பாற்றப்பட்ட அவளது பெண்ணும் அவர்கள் இருந்த இடத்திற்கு வந்தாள்.

இவ்வண்ணம் தெய்வச் செயலால் துன்பத்தை விலக்கித் தனது புத்திரியுடன் கூடிய அவ்வேதியன் மனைவியானவள் நடுவழியில் தனக்குத் தைரியம் கூறிய அவ்வரனுக்கே தனது அருமைப் புத்திரியை சுபமுகூர்த்தத்தில் தானம்செய்து கொடுப்பதாக வாக்களித்து காண்ட சர்மன் என்னும் அவ் வரனால் காண்பிக்கப்பட்ட வழியினால் அவனுடன் திருவாரூர் நகரை யடைந்தாள். அத்தருணத்தில் அவளது பர்த்தா வாகிய வேத சர்மனும் அவர்களைப் பார்த்தார், அத்தருணத்

தில் அம்மாது நடுக்காட்டில் தனக்கு உதவிசெய்த இப்பிரம்ம சாரிக்கே புத்திரியை விவாஹம் செய்துகொடுக்க வேண்டு மென்று கூறினுள். சில தினங்களுக்குள் அவ்விதம் நேரிட்ட சம்பவங்களையெல்லாம் நன்ருய் ஆலோசித்துப் பார்த்த அவ் வேதியர் எல்லாம் தியாகராஜப் பரம்பொருளின் ஸங்கல்பமே தவிர வேறில்லை என்று நினைத்துத் தனது மனைவியின் கருத் துப்போலவே பிரபுவின் ஸன்னிதானத்தில் தனது புத்திரி யைச் சாஸ்திர முறைப்படி அந்தக் காண்ட சர்மனுக்கே கன்யகாதானம் செய்தார்.

விவாஹ காரியம் நிறைவேறிய பிறகு அவ்வந்தணர் தனது மனைவியிடம் நெருங்கி இப்பொழுது நீ தேடிய வரனே நான் முன்பு கூறிய காண்ட சர்மாவென்னும் வரனுவான். இது தெய்வ ஸங்கல்பமேயாகும் என்ருர். 'அதைக்கேட்ட அம்மாதும் கணவனையும் ஈசனையும் பணிந்து அப்பொழுது நேரிட்ட வதூவர ஸம்பந்தத்தைப்பற்றிக் களித்துத் தியாக ராஜனருளினுலேயே ஸகலமும் நடைபெறுவது என்பதற்குத் தமது மனக்கருத்தையே உதாரணமாக விவரித்துக் கூறி பரமானந்தமடைந்து அதுமுதல் தனது கணவன் கருத்துப் படியே நடந்துகொண்டு பலகாலம் சிறப்புடன் வாழ்வெய் தினுள்.

"நன்றருளித் தீதகற்றும் நம்பிரான் காண்". —அப்பர்.



## 120. வைத்தியனுய் வீதியில் வந்த லீலை.

சோழநாட்டரசனுகிய பத்ரகேது மகாராஜன் ஒருநாள் பரி ஜனங்களுடன் குதிரைமேல் ஏறிக்கொண்டு வேட்டை யாடக் கருதித் தென்திசையை நோக்கிச் சென்ருன். ஒரு

வனத்திலிருந்து மற்றொரு வனத்திற்குத் தாவிச் செல்லும் குதிரையின் வேகத்தினால் அம்மன்னவன் தனது நகரிலிருந்து அநேக யோசனை மார்க்கத்தைத் தாண்டி வெகு தூரத்தி லுள்ள ஒரு அடவியில் நுழைந்தான்.

மலைகளும், கற்பாறைகளும், மேடு பள்ளங்களும் உள்ள தாய் மரங்கள் நிறைந்திருக்கும் அவ்வனத்தின் நடுவில் ஒளிந்து கொண்டிருந்த ஒரு ஜந்துவைக் குறி வைத்துத் தனது கையி லிருந்த அம்பை எய்யக் கருதிய அவ்வரசன் தனது குதிரையை வேகமாய்ச் செலுத்தியபொழுது வெகுதூரம் ஓடிவந்து களைப்படைந்து வாடிய அக்குதிரை பாயும்போது தவறிக் கீழே வீழ்ந்தது. குதிரையின் மேலேறியிருந்த அம்மகாராஜனும் துள்ளிக் குதிக்க முடியாமல் ஒரு கற்பாறை யிலடிக்கப்பட்டு மண்டை பிளந்து விழிபிதுங்கி மதி கலங்கிப் பூமியில் வீழ்ந்தான்.

தரையில் வீழ்ந்து உதிரவெள்ளம் பெருக மூர்ச்சை யடைந்து உயிர் இருக்கிறதோ வென்று சந்தேகிக்கக்கூடிய நிலைமையிலிருக்கும் அவ்வரசனைக் கண்டு அவனது குதிரை யானது தனது சரீரத்தில் ஏற்பட்ட புண்ணைக் கொஞ்ச மேனும் இலக்ஷயம் செய்யாமல் அவனது அருகில் ஓடிவந்து அவனது சரீரத்தை வாயினால் கவ்வியெடுத்துக்கொண்டு வெகு விரைவாய் ஓடிவந்து திருவாரூர் நகரையடைந்து அரண்மனை வாசலில் அம்மன்னனைக் கொண்டுவந்து இறக்கி விட்ட மறு நிமிஷத்தில் தானும் வலியின் கொடுமையினால் பூமியில் வீழ்ந்து கண் சுழன்று மரண தசையை யடையும் போல் காணப்பட்டது.

இவ்வாறு அடியுண்ட சரீரத்துடன் அரசன் வந்து சேர்ந் ததையும், குதிரை கீழே வீழ்ந்து துடிப்பதையும் கண்டவ ரனைவரும் நடுநடுங்கி மந்திரி முதலியவர்களிடம் தெரிவித்து சிறந்த வைத்தியக்காரர்களை அழைத்து வந்தார்கள்.

வைத்தியர்கள் அம்மன்னனது மண்டை சிதறியிருப்ப தையும் அவயவங்கள் நிலை குலைந்திருப்பதையும் கண்டு தங்கு

ளால் கண்டறியப்பட்ட சிறந்த ஔஷதங்களால் சிகிச்சைகளைச் செய்தும் பயன்படாமல் பரிதவிக்கும்பொழுது தயாநிதியாகிய தியாகராஜர் ஒரு வைத்தியனுப் உருவமெடுத்துக்கொண்டு "ஸந்தானகரணிச் சிகிச்சை செய்துகொள்வாருண்டோ? ஸந்தானகரணிச் சிகிச்சை செய்துகொள்வாருண்டோ" என்று உரைத்துக்கொண்டே ராஜவீதியின் வழியாய் வரலானுர். அவர் இவ்வாறு உரைத்துக்கொண்டு வருவதைக் கேட்ட மந்திரிமார்கள் எங்கள் ராஜனுடைய சிதறிய அவயவங்களைச் சேர்த்து வைப்பீராகில் நீர் விரும்பும் பரிசை அளிக்கிரேம் என்று உரைத்தார்கள். இவ்வுரையைக் கேட்ட அவ்வைத்தியன் அதற்கிசைந்து மஹாராஜனுடைய அரண்மனைக்கு வந்தார்.

ஸந்தானகரணி யென்னும் ஓஷதக்கொடியைக் கையிலேந்திக்கொண்டு வந்த அவ்வைத்தியன் சோழநாட்டரசனது அரண்மனை வாயிலில் படுத்துக்கொண்டிருக்கும் அவ்வுத்தமப் பரியையணுகித் தனது கையிலிருந்த ஓஷதிக்கொடியினுல் அதன் சரீரத்தைத் தடவிக்கொடுத்த மாத்திரத்திலேயே அக்குதிரையின் உடம்புக்கு இயல்பாயுள்ள பலமும் அழகுமுண்டாயிற்று. அப்பொழுதே எழுந்திருந்து கைகால்களை உதறிக்கொண்டு கனைத்து அவ்வைத்தியனை வணங்கிநின்றது. இவ்விதமாய் அந்த வைத்தியன் நிமிஷ நேரத்துக்குள் அக்குதிரையின் சரீரத்தை உறுதிப்படுத்திவிட்ட வதிசயத்தை ஜனங்களெல்லோரும் பார்த்துக்கொண்டு திகைத்து நிற்கையில் அவ்வைத்தியன் அரசனிருக்குமிடம் சென்று தனது கையில் பிடித்திருந்த ஸந்தானகரணிக் கொடியினுல் அம்மன்னவன் சரீரத்தின் மீது தடவிக் கட்டினுர். அம்மன்னனது உடைந்த மண்டையும் ஒன்றுசேர்ந்து இரண்டு கபோலங்களும் ஒன்றுசேர்ந்து அமைதியை யடைந்தன. சரீரத்தில் பெருகிக்கொண்டிருந்த உதிர வெள்ளமும் வெளிக்கிளம்பவில்லை. ஒவ்வொரு நரம்புகளிலும் பலத்தையளிக்கும் உதிரம் ஊறியது. முன்னிருந்த வடிவழகைக் காட்டிலும் ஆயிரம்

மடங்கு அதிகமான லாவண்யம் அவ்வரசன் சரீரத்தில் பெருகியது.

இவ்விதம் சரீர சௌக்கியத்தைபடைந்த அம்மகாராஜன் நித்திரையிலிருந்து எழுந்திருப்பவன்போல் மலர்ந்த கண்களை விழித்துப் பார்த்து நான் இருப்பது எவ்விடம் என்று அருகிலிருந்தவரை வினவினன். பிறகு அருகிலிருந்த மந்திரி முதலியவர்களால் நடந்த வரலாற்றைபறிந்துகொண்டவனுப் அம்மகாராஜன் தனது இரு கைகளையும் கூப்பி அவ் வைத்தியனுக்கு நமஸ்காரம் செய்தான். மந்திரிகள் அத்தருணத்தில் அவரைப் பணிந்து நீர் எங்கள் மன்னனைக் காப்பாற்றியதற்கு நாங்கள் எவ்வித கைம்மாறு செய்வோம். ஆகிலும், எங்களிடமிருந்து நீர் விரும்பும் பொருள் யாது? உமது நாமதேயமென்ன? உமது இருப்பிடமெங்கே? என்று கேட்கையில் தயாநிதியாகிய தியாகராஜர் திடீரென்று மறைந்து விட்டார்.



## 121. பூபதியாகச் சென்ற லீலை.

ஒரு சமயத்தில் "சோழ மகாராஜன் கோலூன்றும் கிழவனுயிருக்கிறுன். அவனது குமாரனே பத்து வயது நிரம்பாதவனுக இருக்கிறுன். ஆகையால் அச் சோழவரசைக் கவர்வதற்கு இதுவே தக்க சமயம்" என்று யோசித்த ஸாமந்த ராஜாக்களில் சிலர் காரணமின்றித் திடீரென்று படையெடுத்துச் சோழ நாட்டின் எல்லையுட் புகுந்து ஒவ்வொரு அக்கிரகாரத்திலும் ஒவ்வொரு புரத்திலும் ஒவ்வொரு நகரத்திலும் நுழைந்து சோழ மண்டலத்துக்கு அது முதல் தாமே சக்கரவர்த்திகளென்று சொல்லிக் கொண்டு செல்வங்களைக் கவர முயற்சி செய்து வந்தார்கள்.

தைலம் குறைந்த தீபத்தின் ஒளிபோல் பலக்குறைவை யடைந்திருக்கும் சோழ மன்னரின் தேசத்தின் மீது சிற்றரசர் படையெடுத்து வந்து செய்துவரும் துன்பங்களைக் கேள்வியுற்ற சோழர் குலத்தோர் அத் தருணத்தில் தியாகராஜனது திருவடிகளையே இடைவிடாமல் நினைத்துக் கொண்டு நிலை கலங்கி இருக்கையில் மூவுலகுக்கும் காவலனாகிய தியாகேசர் சோழ சக்கரவர்த்தியாய்த் தோன்றிச் சேனைத் தலைவரைக் கூப்பிட்டுத் தனக்குத் துணைபோல் அழைத்துக் கொண்டு அளவற்ற சேனைகளைத் திரட்டிக் கொண்டு அப் பகைவர்களை எதிர்த்து நின்றார்.

தியாகராஜர் ஒரு பூபாலனாய்ப் பகைவரின் எதிரில் நின்று நாணொலி செய்து வில்லை வளைத்துப் பகைவரின் சேனையைப் பிளக்கலானார். பூபதியற்றிருக்கும் சமயத்தில் இவ்வண்ணம் அரசனாகவந்து சாமந்தகரின் கண்சுழலவும், திசைகள் சுழலவும் கொடிய போர் புரிவதைக் கண்ட பகைவர் யாவரும் திகைத்து நின்றார்கள்.

பகைவரில் சிலர் நெடுநேரம் வரையில் போர் செய்து சிதறிய சேனையுடன் பின் வாங்கினர். மற்றும் சிலர் பயந்தோடினர். சிலர் தியாகராஜனருள் சோழ குலத்தாரின் மீது இருக்கும் வரையில் நாம் சிற்றரசராகவே இருப்பது நலம். ஆகையால் நாம் தெய்வத் தன்மைவாய்ந்த இப் பூபதியின் அருகில் சென்று வணங்குவதே நமக்குச் சிறப்பாகுமென்று யோசித்து அப் பூபாலனருகில் சென்று நவரத்தினங்களையும், சிறந்த பட்டாடைகளையும் காணிக்கையாக அளித்துப் பணிந்து தமது இருப்பிட மடைந்தனர்.

எப்போதும் மிறையும் மறவாது நீர்
முப்போதும் பிரமன் றொழ நின்றவன்
செப்போதும் பொனின் மேனிச் சிவனவன்
அப்போதைக் கஞ்சல் என்னுமா றூரனே.

## 122. மந்திரியாகச் சென்ற லீலை.

சோழ நாட்டுச் சக்கரவர்த்தியின் பிரதான மந்திரியானவன் கிழவனானபடியால் படுக்கையிலேயே படுத்துறங்கி வருகையில் சேதி தேசத்து ஸார்வபௌமனாகிய ஜயதத்த மகாராஜன் தனது ராஜாங்க திக் விஜய விஷயமாய்ச் சிற்சில ஸந்தேகங்களை யடைந்து அவ்வித ஸந்தேக விஷயங்களில் நிர்ணயத்தை அடையும் பொருட்டுச் சோழ வரசனுக்குத் தூதர் மூலமாய் பத்திரிகையை அனுப்பிச் சோழ நாட்டமைச்சரின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அச் சமயத்தில் தயாநிதியாகிய தியாகராஜர் ஆகாயவாணி மூலமாய்த் தானே மந்திரியாகச் செல்வதாய்த் தெரிவித்து அதற்குரிய வேஷத்துடன் தோன்றி பரிஜனங்களுடனும், விருது கொடியுடனும் சேதி நகரத்தை யடைந்து அம் மன்னனால் பணிந்து அழைக்கப் பட்டவராய் அவனது பூஜையைப் பெற்றுக் கொண்டு அமைச்சரின் ஆஸனத்தின் கண் வீற்றிருந்து அவ்வரசனது திக்விஜய ஸந்தேகங்களைக் கேட்டுக்கொண்ட பிறகு யுக்தி சொல்ல ஆரம்பித்தார்.

"இந்தச் சபையில் தேவேந்திரன் போல் விளங்கும் சேதி நாட்டரசனே! மந்திரிகளே! கல்வி நிறைந்தவர்களே! சுதர்மை யென்னும் இந்திரனுடைய ஸபைக்கு ஒப்பாகிய இச் சபையின் நடுவில் நான் விளம்புவதைக் கேளுங்கள். தர்மவழியில் நிலைபெற்ற நாம் செய்யும் காரியங்கள் எல்லாம் முடிவில் மேன்மையாகவே முடியும். நாம் நியாயவழியிலேயே செல்லுவோமாகில் இந்திரனுடைய வச்சிராயுதத்தைக் கண்டு மலைகள் நடுங்குவதுபோல் ஸகல அரசர்களும் நம்மிடமிருந்து பயத்தை யடைவார்கள். அக்காரணத்தினால் கடல் சூழ்ந்த பார் ஏழிலும் மேன்மையே யுண்டாகும். தர்ம வழியில் நாம் நடப்போமாகில் அப்படிப்பட்ட அரசனுடைய புயத்தைப் பூமகளும் அணுகுவாள்; ஜயமகளின் நோக்குமுண்டாகும்; அவ்வித ஜய மகளின் நோக்கினால் பகைவர் குலம் மாண்டு விடும். சாதுக்களை

இரக்ஷிப்பதற்காகவும், துஷ்டரை யழிப்பதற்காகவும் அரச ருடைய உற்பத்தி உலகில் சிருஷ்டிக்கப்பட்டு வருகிறது.

தர்மத்தைக் கைக்கொண்ட அவ்வரசருடைய கட்டளைக் குக் கீழ்ப்படியாமலிருக்கும் துஷ்ட பூபாலர்களை அடியோடு அழிக்க வேண்டும். பயிரின் நடுவில் உள்ள புற் பூண்டுகளைக் களைவது போல் ஒவ்வொரு தேசத்திலும் துஷ்ட பூபாலர்களை அழிப்பாராகில், அப்பொழுது பயிர்போல் தருமம் தழைத்து ஓங்கும். ராஜ தர்மத்தைக் காப்பாற்றுவதைக் காட்டிலும் மேலானது வேறு இல்லை. இவ்விதமாய் ராஜ தர்மத்தைக் கைப்பற்றிப் பகைவரை யழித்து அடைக்கலம் அடைந்தோ ரைக்காப்பாற்றுவதற்காகவே அரசன் சிங்காஸனத்தில் விளங்க வேண்டும்.

துஷ்ட ராஜாக்களுக்குத் துர்ப்புத்தியை வளர்த்து விடுவா ராகில் பிறகு விவேகிகளின் உபதேசம் பயனற்றதாகி விடும். ஆகையால் பூபாலர்கள் விவேகிகள் கூறும் நல்ல உபதேசமாகிய தீபத்தின் வெளிச்சத்தில் நடந்து செல்லுவாராகில் சில விடத் தில் தடையை யடைந்தாலும் பாதிக்கப் படமாட்டார்கள். ஒவ்வொரு அரசனும் தாம் புதியதாய் ஸிம்மாஸனத்தில் ஏறியவுடன் பூமியைச் சுற்றித் திக் விஜயம் செய்து வரவேண் டும். மாறுத அன்புள்ளவர்களைச் சேர்த்துக் கொள்ள வேண் டும். செல்வமானது நிலையற்றதென்று நினைத்துத் தம்மிடத் திலிருக்கும் செல்வத்தை நல்வழிகளில் உபயோகித்து வர வேண்டும். அழியாத நீதி மார்க்கத்தை ஸ்தாபித்து வர வேண்டும். அதுவே தாம் செல்லும் சுவர்க்கத்துக்குப் படிகளாக விளங்கும்.

துஷ்டர்களை அழிப்பதும் அன்புள்ளவர்களை அணைப்பது மாகிய இவ்விரண்டுமே க்ஷத்திரியருக்குக் கவசம். இக் கவசம் பூண்டவருக்குத் துன்பம் ஏது? பிணி நெருங்காமல் சரீரத் தைப் பாதுகாத்து வரவேண்டும். தர்ம காரியத்துக்குச் சாதக மாகிய சரீரத்தை அன்பரிடமே அளித்து வரவேண்டும், ஞான

மாகிய அமிர்தத்தைத் தினந்தோறும் கொஞ்சம் கொஞ்சமாய் உண்டு களித்து வரவேண்டும். ஐம்புலன்களை யடக்குவதே தவமாகும். பஞ்சாங்க மந்திரங்களுடன் கூடித் தமது அங்கங்களைப் பூபாலர் ரக்ஷித்து வர வேண்டும். ஸப்த த்வீபங்களிலும் தமது நற்கீர்த்தியுலாவும் வழியை யடைய வேண்டும்'' என்று சொன்னார்.

இவ்விதம் க்ஷத்திரிய தர்மத்தைக் கேட்ட சபையோர்கள் மிகவும் வியப்படைந்து, அம் மந்திரிக்கு நவரத்தினங்களினால் பாத பீடார்ச்சனை செய்து பணிந்து சேதி நாட்டிலிருந்து சோழ நாட்டுக்குக் கொண்டு விட்டார்கள்.



## 123. வேறொரு கூட்டில் உயிரைச் செலுத்திய லீலை.

மறைக் காட்டு க்ஷேத்திரத்தில் மகாதேவன் என்னும் வேதியர் ஒருவர் இருந்தார். அவர் ஸதாசாரம், ஸத்புத்தி முதலியவைகளை யணியாகக் கொண்டு இல்லற தர்மத்தைச் சிறப்புடன் நடத்திவருங்காலையில் சூரபத்திரன் என்னும் தனிகன் ஒருவன் காவிரிக் கரையிலுள்ள வடச் சேரியில் வாஸம் செய்து வந்தான்.

அச் செல்வத்தோன் தானம் செய்யும் வழியைப் பாலியம் முதல் கற்றவனல்ல. பிறருக்கு எவ்வித உபகாரமும் செய்தவனல்ல. மிகவும் லோபியாய் அற்பத் தன்மையை யடைந்து வீணில் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கும் அச்சூரபத்திரனருகில் சென்று ஒரு நாள் அம்மகாதேவனென்னும் வேதியர் கூறியதாவது. “ ஓ தனபதியே ! நான் பௌர்ணமி

தொடங்கி தினந்தோறும் தனத்தைச் சேகரிக்கிறேன். இவ்வித தனத்தால் தியாகராஜனுக்குச் சிறந்த ஒரு முத்துமாலையை யளிக்கவேண்டும். இதுவே எனது ஸங்கற்பமாகும். முத்து மாலைக்குப் பணம் கிடைக்காத தினத்தில் நான் உணவை அங்கீகரிப்பதில்லையென்னும் உறுதி செய்து கொண்டிருக்கிறேன். இத் தினத்தில் யாதொன்றும் கிடைக்க வில்லை. ஆதலால், நீயே பொருளை யளிக்க வேண்டும்" என்றார்.

மகாதேவன் என்னும் அவ்வேதியர் இவ்வாறுரைப் பதைக் கேட்ட அச் செல்வத்தோன் தியாகேசனுடைய கைங்கரியத்துக்குத் திரவியமளிக்க மனமில்லாதவனும், வெளியில் அவ் வேதியருடைய வேண்டுகோளின் தாக்ஷிண்யத்துக்குக் கட்டுண்டவன் போலும் அபிநயம் செய்து அவ் வேதியரைக் கண்டு பணிந்து "ஓ தூயவரே! பாப காரியங்களைச் செய்து வரும் இக்கொடிய கலியுகத்தில் உமக்கும் உமது தெய்வமாகிய தியாகராஜ மூர்த்திக்கும் சக்தி யிருப்பது உண்மையாயின் உமது ஆன்மாவை மற்றொரு கூட்டில் மூன்று தினம் வரையில் இருக்கச் செய்து பிறகு உமது ஆன்மாவை நீரே மறுபடியும் பெறுவீராகில் நீர் செய்துவரும் முக்தாஹாரத்தை நான் ஒருவனே எனது செல்வத்தைக் கொண்டு செய்து முடிப்பேன்" என்று வாக்களித்தான்.

இவ்வுரையைக் கேட்ட அவ் வேதியரும் அவ்வித நிர்ப்பந்தத்தைச் செய்து முடித்தாவது முக்தாஹாரத்தைச் செய்து முடிக்க வேண்டுமென்று விருப்பங் கொண்டு வெகு வேகமாய் ஆரூரை நாடி தியாகேசனது எதிரில் நின்று கொண்டு தான் செய்யும் காரியத்தை நிறைவேற்றி வைப்பது உமது கடமையாகுமென்று பிரார்த்தித்து விட்டு அச் செல்வத்தோனுடைய கிராமத்தை யடைந்து ஆயிரக் கணக்கான ஜனங்கள் பார்த்துக் கொண்டிருக்கையில் ஒரு சோலையுள் புகுந்து அங்குள்ள வாவியில் சுத்தாசமனம் செய்து பிராணயாம மந்திரத்தையும் உச்சரித்துத் தியாகேசனின் பாதத்தை மனதில் தியானித்துக் கொண்டு தர்ப்பாஸனத்தில் படுத்துப் பரகாயத்தில் தனது

ஆன்மா செல்லும் வண்ணம் வேத மந்திரத்தை யுச்சரிக்க லானார். பக்தரின் மனோரதத்தை நிறைவேற்றுவதற்காகவே புண்ணிய புரியில் விளங்கும் தியாகராஜர் அத் தருணத்தில் வேதியரின் மீது அருள் செய்தார்.

தியாகேசனுடைய அருளால் அவ் வேதியர் அப்பொழுது தனது சரீரத்திலிருந்து ஆன்மாவை மற்றொரு சரீரத்தில் புகச் செய்யும் வல்லமையை யடைந்தார். அச் செல்வத்தோனுடைய வீட்டில் கால பாசத்துக்குச் சுவாதீன மடைந்திருக்கும் ஒரு வேலைக்காரனது சரீரத்தில் தனது ஆன்மாவை மூன்று நாள் வரையில் செலுத்தியிருந்து மீண்டும் அவ்வான்மாவைத் தனது சரீரத்திலேயே புகும்படி செய்தார். இவ்வதிசயத்தைக் கண்டவரனைவரும் தியாகராஜ பக்தியின் சிறப்பைப் பற்றிப் புகழ்ந்தார்கள்.



## 124. தென்னை மரத்தைச் சாய்த்த லீலை.

அச் செல்வத்தோன் "நான் கூறியவாறே தியாகேசனுடைய முத்து மாலைக்கு வேண்டும் தனத்தை அளிப்பதில் தடையொன்றுமில்லை. ஆயினும், இம்மாதிரியே நீர் மற்றொரு அற்புதத்தைச்செய்து காட்டுவீராகில் இன்னும் விசேஷமாக செல்வத்தை யளிப்பேன்" என்று உரைத்தான். அத் தனிகனுடைய முழு மனக்கருத்தையுமறிந்த மகாதேவன் என்னும் வேதியர் அவனது கருத்துக்கு இசைந்து "ஓ தனிகனே! நீ சொல்வது போலவே தியாகராஜர் என்னைக் கொண்டு மற்றொரு அற்புதத்தையும் செய்து காட்டுவாரென்றே நினைக்கிறேன்; ஆகையால், நீ விரும்புவது யாது" என்று கேட்டார்.

அவ்வந்தணனுடைய உரையைக் கேட்ட செல்வத்தோன் அத் தருணத்தில் எவ்வித விஷயத்தையும் யோசனை செய்யத் தகுந்த காலத்தை யடையாதவனாய் "மறையவரே! நீர் கற்ற வேதம் நிஜமாயின், உமது கைங்கரியம் ஸத்தியமாயின், உமது கைங்கரியத்தைப் பெற்றுக் கொள்ளும் தியாகராஜன் உண்மை யாயின் எனது எதிரில் நின்று விளங்கும் இந்த நாரிகேள மரத்தைச் சாய்த்து வைப்பீர்; பூமியில் நின்ற வண்ணமே யான் அத் தெங்கின் குலைகளைக் கொய்யக் கருதுகிறேன். இவ் விதமே செய்வீராகில் நான் கூறிய செல்வம் அளிக்கத் தடையே கிடையாது" என்று இயம்பினான். அவ் வேதியர் அஸாத்திய மான அவ்வித காரியத்துக்கு மிசைந்து மறுநாட் காலையில் அவ்வண்ணமே அத் தென்னைமரத்தைச் சாய்த்துக் காட்டு வதாகக் கூறிச் சென்றார்.

தியாகராஜனுடைய முக்தாஹார நிர்மாணத்தையே முக்கியமாகக் கொண்ட அவ்வேதியர் அதிவேகமாய் வந்து புண்ணிய புரியை யடைந்து கமலாலயத்திலிறங்கி அம் மாலை நேரத்துக் குறிய காரியங்களை முடித்துக் கொண்டு தியாக ராஜாவின் ஸன்னிதியை யடைந்து வணங்கிக் கைகூப்பிக் கொண்டு "ஞானஸ்வரூபியே! ஸதாசிவஸ்வரூபியே! லோக ரக்ஷக! தியாகராஜ! உமக்கு நமஸ்காரம். குஹ்யஸ்வரூபியாயும் குஹ்யதரஸ்வரூபியாயும், ஷட்குணஸ்வரூபியாயும் விளங்கும் நீரே எனது தெய்வம்; நீரே எனது நமஸ்காரத்தை யங்கீகரிக் கக் கடவீர். எனது மனக் கருத்தையும், அச் செல்வத்தோ னுடைய மனக் கருத்தையும் அறியும் பரஞ்சுடரே. அத் தென்னை மரத்தைச் சூரியன் உதிக்குமுன் நீர் சாய்த்து வைத் தால், உமது மேன்மையும் எனது பக்தியின் மேன்மையும் விளங்கும்; ஆபரணம் செய்யும் கைங்கரியமும் நிறைவேறும். எனது உயிரும் என்னுடலில் தங்கியிருக்கும். அந்தச் செல்வத் தோன் விரும்பியவாறு பரகாயத்திலுயிரைச் செலுத்தி வைத்து பிரதிக்ஞையை நிறைவேற்றி வைத்த நீரே இப் பொழுது கதிரவன் வருமுன் அந்த நாரிகேள மரத்தைக் குலை

யுடன் சாய்த்துப் பக்தனுகிய என் மூலமாய் உமது கைங் கரியத்தை நிறைவேற்றிக் கொள்வது உமது கடமையாகும்'' என்று பாரத்தை யீசனிடத்தில் அளித்து விட்டு அவ் வேதியர் அச் செல்வ முடையானிடம் திரும்பலானுர்.

அவ்வேதியரது மனக்கருத்தைப் பூர்த்தி செய்து வைப்ப தாகத் தியாகராஜர் ஸங்கல்பம் செய்தார். அந்நிமிஷத்திலேயே அந்தத் தென்னை மரமானது கனத்த குலைகளுடனே கொடி போல் பூமியில் சாய்ந்தது. அம்மரம் சாய்வதற்கு முன்னமே அச்செல்வமுடையோனும் அவனது வேலைக்காரர்களும் அன்றிரவில் நித்திரையொழித்து விட்டு அவ்வேதியர் எவ்வித உபாயம் செய்யப் போகிருர்? அதைப் பார்ப்போம் என்று எண்ணி இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கையில் அம்மரம் வெகு அழகாக சாயக்கண்டு பயந்து நடுங்கி அவ் வேதியரிடத்தில் தாம் செய்து வந்த கால தாமதத்தைப் பற்றி மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று அவரைத் தேடிக் கொண்டிருக்கையில் தற்செயலாய் அவ்வேதியரும் அருணன் உதிக்கும் சமயத்தில் அவர்களுக்கு எதிரில் வந்தார்.

வேலைக்காரரின் மூலமாய் அந்தத் தென்னை மரம் சாய்ந்திருப்பதாகக் கேள்வியுற்ற அவ்வேதியர் பிரபுவின் நாமத்தை அடிக்கடி சொல்லிக் கொண்டு அச்செல்வத்தோ னிடம் சென்று அவனுல் கொடுக்கப்பட்ட திரவியத்தைச் சுமந்து கொண்டு வந்து ஆயிரத்தெட்டு முத்துக்கள் நிறைந்து விளங்கும் மகா ஹாரத்தைச் செய்து வைத்து சிறந்ததொரு திருவிழாவையும் நடத்தி வைத்துச் சந்தோஷத்தினுல் கூத்தாடினுர்.



## 125. கங்கையைக் காட்டிய லீலை.

மகாதேவனென்னும் அவ்வேதியருக்கும் அச்செல்வத்தோனுக்கும் சிறந்த நட்பு உண்டாகி வருகையில் ஒரு நாள் அவ்வேதியர் அந்தத் தனிகனை யழைத்துக் கொண்டு போய் வேத மூர்த்தியின் தரிசனத்தையளித்து வைத்த பிறகு தமது இருப்பிடத்துக்குத்திரும்புகையில் கமலாலயத்தின் ஸமீபத்தில் ஆகாயத்தில் ஒரு சுடர்ப் படலம் தோன்றிற்று.

அவ்விதச் சுடரானது என்ன வென்று அறிய வேண்டி அவ்விரண்டு தொண்டர்களும் ஈசனை நெடுநேரம் துதிக்கையில் அவர்களின் துதி கோஷத்தினால் உருகிய மனமுடைய தியாக ராஜர் ஆகாய வாணியின் மூலமாக உரைத்ததாவது:— " பக்தர்களே! தினந்தோறும் காலையில் நமது பூஜைக்காக இக்கமலாலயத்திலிருந்து பூஜகர் தீர்த்தம் எடுப்பது வழக்கம். அவ்விதமாய் அவர்கள் பூஜா தீர்த்தங்களைச் சேகரிப்பதற்கு முன்னமே கங்கா தேவியானவள் நர்மதை, ஸிந்து, கோதாவரி, கிருஷ்ணை, துங்கபத்திரை, காவிரி முதலிய நதிகளுடன் சேர்ந்து வந்து இக்கமலாலயத்தில் இறங்கி இதைப் பரிசுத்தம் செய்து விட்டுப் போகிறாள். அது போலவே இப்பொழுதும் கங்கா தேவி இங்கு வந்திருந்து ஒரு முகூர்த்த காலத்தைக் கழித்து விட்டுத் தனது தோழிகளுடன் செல்லுகிறாள். அம் மாதர்களின் நடுவே விளங்குபவளே கங்கா தேவியாவாள். இக்கங்கா தேவியைத் தரிசிப்பதினாலேயே எல்லாப் பாபமும் தொலையும். செல்வமும் உண்டாகும் " என்று இவ்விதமாய்த் தியாகராஜனது அசரீரியால் சுட்டிக் காட்டப்பட்டவர்களாய் அத்தொண்டரிருவரும் மகிழ்ந்து தமது ஸமீபத்திலுள்ளவர்களைக் கூப்பிட்டுக் கங்கா தேவியைப் பார்த்து நன்மை யடைவீரென்று உரைத்துக் கூத்தாடினர்.

தொழுதகங் குழைய மேவித் தோட்டிமை யுடைய தொண்டர்
அழுதகம் புகுந்து நின்றார் அவரவர் பேர்லு மாநூர்
எழிலக நடுவெண் முத்த மன்றியு மேர் கொள் வேலிப்
பொழிலகம் விளங்கு திங்கட் புதுமுகிழ் சூடினாரே. —அப்பர்



## 126. நடுக்காட்டில் ஜலமளித் துயிர்காத்த லீலை.

சிற்பரர் என்னும் மற்றொரு வேதியர் தியாகேசனைத் தரிசனம் செய்யவேண்டுமென்று கருதி பொதியமலைச் சார்பிலிருந்து திருவாரூருக்குப் புறப்பட்டார். அவரது பக்தி விசேஷத்தைக் கண்ட அவரது காதலியும், மைந்தனும், மற்றுமுள்ள சுற்றத்தாரும் அவரது வழியைப் பின்பற்றித் தாமும் தியாக மூர்த்தியின் அருள்பெற வேண்டி அவருடன் புறப்பட்டார்கள். நெடுநாளாய் அந்தச் சிற்பரரென்னும் அந்தணரிடத்திலிருந்து தத்துவோபதேசங்களைப் பெற்றுவந்த சிஷ்யர்களில் சிலரும் அவரைப் பின் தொடர்ந்தார்கள். இவ்வண்ணம் சிற்பரரைப் பின் தொடர்ந்து வரும் பக்தர்கள் ஒவ்வொருவரும் தமக்குக் கிடைத்த பொருள்களைத் தியாகராஜனுக்குக் காணிக்கையாக எடுத்துக் கொண்டு அநேக கிராமங்களையும், நகரங்களையும் வனங்களையும் கடந்து பாண்டிய நாட்டையும் தாண்டி வருகையில் அச் சிற்பரருடைய வழியானது மாறிவிட்டது.

வழி மாறுதலையடைந்த அவ் வேதியரும் அவரைப் பின் தொடர்ந்து செல்லும் சீடர்களும் அச் சமயத்தில் மதியிழந்தவர்களாய் ஒரு கொடி வழியிலிருந்து மற்றொரு வழிக்குச் சென்றார்கள். அவ்வழியானது அவர்களை ஒரு காட்டில் கொண்டுபோய் விட்டது. அவர்கள் அவ் வனத்தில் நுழையும் பொழுது எவ்வித வழியும் அவர்களுடைய கண்களுக்குப் புலப்படவே இல்லை. அவர்களுக்கு வழி தவறிவிட்டது போலவே திசை மயக்கமும் நேரிட்டது. அத்தொண்டர்களனைவரும் அக் காட்டில் இங்குமங்கும் நெடுநேரம் வரையில் உழன்று வழியை யடையாமல் வெய்யிலாலும், தாகத்தினாலும், தளிர்போல் வாடிய சரீரமுடையவர்களாய்ச் சற்று நேரம் வரையில் கஷ்டத்தைப் பொறுத்திருந்தார்கள். பிறகு அவர்களுக்கு அக் கொடிய வனத்தில் நிழலும் கிடைக்கவில்லை. ஜலமும் கிடைக்கவில்லை. அருகில் ஜன நடமாட்டமும் இல்லை. அலைந்து திரிந்து பாதங்கள் கன்றின, மண்டையிலிருந்து

வெப்பம் கிளம்பியது. வழி நடந்து வந்த களைப்பினால் பெரு மூச்சு உண்டாயிற்று.

இவ்விதமாய் வாயினால் சொல்லுவதற்கரிய துன்பத்தை யடைந்த சிற்பார் முதலிய தொண்டர்கள் அத்தருணத்தில் தியாகராஜனது பாத பங்கய ஸ்மரணத்தையே நீராகவும், உணவாகவும், நிழலாகவும், நல்வீடாகவும் நினைத்தார்கள். ஒரே காலத்தில் இவ்வாறு பல தொண்டர்கள் அக்கொடிய காட்டில் சிக்கிக் கொண்டு வழியை யடைய முடியாமல் பரித வித்து வாடுகையில் அவர்களது ஸ்மரணத்தினால் தியாகராஜர் அத்தருணத்தில் தண்ணீர்க் காவடி தூக்கும் புருஷன் போல் வடிவமெடுத்துக் கொண்டு தனது தோளில் ஒரு குடத்தில் தண்ணீரையும் மற்றொரு குடத்தில் மோரையும் வைத்துக் காவடியாகச் சுமந்துகொண்டு வருகையில் நடுக்காட்டில் அலைந்து திரியும் அத்தொண்டர்கள் அப்புருஷனை வெகு தூரத்தில் கண்டு கூப்பிட்டழைத்துக் கையினால் ஜாடை காட்டித் தமக்குண்டாயிருக்கும் களைப்பின் கொடுமையைப் பற்பல அடையாளங்களால் தெரிவித்துக் கொண்டார்கள்.

காவடிக்காரனாய் அக்காட்டில் தோன்றிய தியாகராஜரும் விரைவாய் அவர்களிடம் சென்று தான் சுமந்து கொண்டு வந்த தண்ணீரையும் மோரையும் அவர்களுக்கு அளித்தார். அதனால் அவர்களுடைய பசியும் தாகமும் தணிந்தன. அப்பொழுது அத் தொண்டர்களெல்லோரும் இவ்விதம் தமக்கு உபகாரம் செய்ததைப் பற்றி அப்புருஷனைக் கொண்டாடித் துதித்தார்கள். அவர்களது துதியைப் பெற்றுக் கொண்ட தியாகராஜரும் அவர்களுக்கு ஒரு வழியைக் காண்பித்து அவ்வழியிலேயே அவர்களை அழைத்துக்கொண்டு வந்து திருவாரூரின் சிறப்பையும் தியாகராஜனது கருணையின் சிறப்பையும் புகழ்ந்து விட்டுத் தான் தனது இருப்பிடம் போவதாய் விடை பெற்றுத் திரும்புகையில், அவர்கள் ஈசனுக்காகக் கொண்டுவரும் திரவியங்களில் சிலவற்றை அம்மஹோபகாரிக்கு

அன்பினலளித்தார்கள். தயாநிதியும் அதைப் பெற்றுக் கொண்டு தனது சிரஸில் அணிந்து கொண்டு மறைந்தார்.



## 127. தடாகத்துக்கு மண் சுமந்த லீலை.

வேதாரண்யத்துக்கருகில் நாளோதனன் என்னும் வேடன் ஒருவன் இருந்தான். அவன் தனது தந்தை சொற்படியே திருமறைக் காட்டு நாதனை யுன்னித் தொழுது கொண்டுவருகையில் ஒருநாள் அவனது சுற்றத்தாரில் ஒருவன் வந்து அந்நாளோதனனைக் கூப்பிட்டழைத்துப் பற்பல விதமாய் உலக சமாசாரங்களைப் பேசிவருகையில் தியாகேசன் சிலநாட்களுக்கு முன்பு அக்கொடிய காட்டில் காவடிப் புருஷனய்த் தோன்றித் தண்ணீரையளித்த வதிசயத்தைக் கேட்டாயோவென்று தியாகராஜர் செய்த லீலைகளை யுரைக்கவே அதைக்கேட்ட அந்நாளோதனன் மனமுருகி அத்தேவ தேவனுக்குத் தொண்ட ரநேகர் பல காரியங்களைச் செய்து வைத்தது போலவே நாமும் நம்மால் கூடுமானவரையில் பணி செய்வதே ஜன்மத்துக்குப் பயன் என்று கருதி அவ்வேடச் சேரியிலிருக்கும் எல்லோரையும் அழைத்து ஆலோசனை செய்து திருவாரூருக்குச் செல்லும் வழியில் ஐந்து தடாக நிர்மாணம் செய்வதாய் நிர்ணயம் செய்து அவ்வாறே அங்குள்ள வேடர்களெல்லோரும் சேர்ந்து ஒவ்வொருவரும் தடாகத்துக்காக மண்ணை வெட்டிச் சுமந்து கரையில் போட்டு வேலை செய்து வந்தார்கள்.

குருகுலவாஸம், குருவின் உபதேசம் முதலியவைகளில்லாமலே தாழ்ந்த குலத்தில் ஜனித்தபோதிலும் ஒப்பற்ற பக்தி

யுடையவர்களான நாளோதனன் முதலான அவ்வேடர்கள் சிவனடியார்கள் செல்லும் வழியில் தடாக நிர்மாணம் செய்யும் பொழுது அவ்வித நற்காரியத்தில் பிறருடைய உதவியை எதிர்பார்க்காமல் அவ்வேலை நடந்துவருவதைக் கண்ட தியாகேசன் அவர்களின் மனதைப் பரிசோதிக்க வேண்டுமென்று தானும் ஒரு வேடன்போல் உருவெடுத்துக்கொண்டு அவ்வேடருடன் சேர்ந்து தானும் மண் சுமந்து தடாக நிர்மாணத்துக்கு உதவிசெய்ய விரும்புவதாய் அறிவித்தார்.

அவ்வேடர்களும் இப்புது வேடனது மனக்கருத்தையும் அன்பையும் கண்டு அதற்கிசைந்து அவ்வேலையில் சேர்த்துக் கொண்டு வெகு வேகமாய் வேலைசெய்து வருநாளில் சரீர மெலிவை யெய்திய சில வேலைக்காரர்களின் மண் குவியல் கரையேறாமல் அங்கு கிடக்கக்கண்டு வேடனுருவம் கொண்ட தியாகராஜர் பரிவுடன் அவர்கள் அருகில் சென்று அவர்களது பாகமாகிய மண் குவியலைத் தானே சுமந்து கரை யேற்றுவதற்கு அனுமதி கொடுப்பீர்களாவென்று கேட்டார். சக்தியற்ற அவ்வேடர்களும் அதற்கிசைந்தனர். அப்பொழுது தியாகராஜர் தனது திவ்விய சக்தியினால் ஒரே தடவையில் தனது பாகத்துக்குரிய மண்குவியலைக் கரையேற்றிய பிறகு அவர்களின் பாகத்துக்குரிய மண்குவியலையும் ஆயாஸமின்றிக் கரைசேர்த்து விட்டார். அரைநாழிகைப் பொழுதில் இவ்வண்ணம் அப்புது வேடன் பல வேடர்களின் பாகத்தில் இருந்த மண்ணை யெடுத்ததைக் கண்டவரனைவரும் வியப்படைந்து அவனைத் தெய்வத்தன்மை யுடையவன் என்று நிச்சயித்து அவனுக்குத் தக்க மரியாதை செய்து அவனிடமிருந்து தியாகராஜாவின் மகிமையைக் கேட்டு மகிழ்ந்தார்கள்.



## 128. நற்புத்திரனாய் நிற்கும் முறை யுரைத்த லீலை.

சோழ வம்சத்திலுதித்த திவாகரச் சோழன் ஸிம்மாஸன மேறிய நாளில் அவன் வெகு பாலப் பிராயத்தில் இருந்த படியால், அமைச்சரும் ராஜ குலத்தாரும் அவ்வரசனை அழைத்துக் கொண்டு தேவாலயம் சென்று அவனைப் பணியச் செய்து தாங்களுமீசனைப் பணிந்து ராஜ குமாரனுக்கு க்ஷத்திரியர்களுக்குரிய தர்மத்தை உபதேசிக்க வேண்டுமென்று கூப்பிய கைகளுடன் வணங்கி நின்றார்கள். தயாநிதியாகிய தியாகராஜர் அத்தருணத்தில் அவர்களைக் குறித்து உபதேசித்ததாவது.

" ராஜ வம்சத்தில் உதித்தவர்களே! உங்களுடைய விருப்பம்போல் க்ஷத்திரிய தர்மங்களையுபதேசிக்கிறேன். க்ஷத்திரிய குமாரனாய்ப் பிறந்தவன் பாலியம் முதல் தனது சரீரத்துக்கும் ராஜ்யத்துக்கும் பலத்தை யுண்டுபண்ணிக் கொள்ள வேண்டும். கோபத்தை யடக்கவேண்டும். தவறு இருந்த போதிலும் வேலைக்காரர்களிடத்தில் மிருதுவாகவே பேச வேண்டும். பிரஜைகளிடத்திலும் பெரியோர்களிடத்திலும் அன்பையும் தயையையும் காட்ட வேண்டும். சிற்சில சமயங்களில் பிறர் கடினமாய் உரைத்த போதிலும் மறுமொழி யளிக்கலாகாது. அவ்வாறு மறுமொழி அளிப்பதாக இருந்தாலும் கோபத்தை யடக்கியே பேசவேண்டும். வேதங்களையும், ரகசிய மந்திரங்களையும் நன்றாய் கற்கவேண்டும். பிரஜைகளின் உயிர்போலவே இருந்து வெகு அழகாயும் கம்பீரமாயும் பேசி தனது மனத்துயரத்தை எப்பொழுதும் வெளிக் காட்டாமல் தக்க காலத்தில் தக்கவரிடத்தில் காண்பிக்க வேண்டும்.

பிறருடைய பேச்சின் கருத்தை யறிந்து கொள்ளாமல் பதிலளிக்கலாகாது; பலனற்ற காரியத்தை ஆரம்பிக்கக் கூடாது. எவ்வித காரியங்களையும் ஆரம்பிப்பதற்கு முன்னமே புத்தியிலும் வயதிலும் சிறந்த மந்திரிமார்களுடன் ஆலோசனை

செய்ய வேண்டும். மேன்மேலும் அறிவை விருத்தி செய்யக் கூடிய நூல்களைக் கற்க வேண்டும்; தனது குலத்துக்குத் தகுந்த மரியாதையைக் காப்பாற்றி வரவேண்டும். மன்னுயிர் களைக் காப்பாற்றுவதற்காகவே பொருளைத் தேடவேண்டும். தேவர்களிடத்திலும், பிராமணர்களிடத்திலும் தினந்தோறும் பக்தி செய்யவேண்டும்.

ஏழைகளின் மீது கருணை செய்து அவர்களின் வறுமை யைப் போக்க முயலவேண்டும். தருமத்தைத் தினந்தோறும் செய்து, சுத்த முடையவனும், பெரியோர் மொழியில் பக்தி விசுவாஸ முடையவனும், தனது மனதின் வேகத்தை யடக்கி வருகிறவனும், செய்ந்நன்றி மறக்காதவனும் இருக்கும் பூபாலனைத் தேவர்களும் புகழ்வார்கள். ஸத்தியத்தைக் கை விடாமல் தர்மம், அர்த்தம், காமம் மோக்ஷமென்னும் நான்கு வித புருஷார்த்தங்களையும் தக்க வயதில் தக்க காலத்தில் அடைய விரும்ப வேண்டும். எப்பொழுதும் க்ஷத்திரியன் தைரியத்தையே துணையாகக் கொண்டு தனது சரீரத்தையும் தன்னிருப்பிடத்தையும் நன்றாகக் காப்பாற்றி வரவேண்டும்.

பிறர் செல்வத்தைக் கண்டு பொறாமையும் கர்வத்தையும் அடையாமல் பற்பல கலைகளைக் கற்று துஷ்டர்களை அடக்கி பகைவரை வென்றிடவேண்டும். இவ்விதமாய் நற்குணங்கள் நிறைந்திருக்கும் பூபாலர்களை எல்லோரும் புகழ்வார்கள். நற்குணங்கள் பிராமணர்களுக்கும், க்ஷத்திரியர்களுக்கும் வைசியர்களுக்கும், சூத்திரர்களுக்கும் மற்றுமுள்ள ஜாதியர் களுக்கும் பொதுவானவைகளே. இவைகளே ஸகல வேதக் கருத்து; இவையே ஸகல சாஸ்திரங்களின் கருத்து. இவையே நன்மைக்கு வழி'' என்றுரைத்தார்.



## 129. நமஸ்கார முறை யுரைத்த லீலை.

கேளீர் ராஜகுடும்பிகளே! ஞானத்தினால் விளங்கும் பூசுரர்களே! முதல் வர்ணத்தோனாகிய வேதியன் வயதினால் தனக்கு மூத்தோனை நமஸ்கரிக்கும்பொழுது அஹம் அஸ்மி (अहमस्मि) என்று உரைக்கவேண்டும். இவ்விதமாய்க் கனிஷ்ட வேதியன் உரைத்துப் பணியும் பொழுது ஆயுஷ்மான் பவ (आयुष्मान् भव) என்று பதில் ஆசி கூறவேண்டும். பதில் ஆசி கூறுவதையறியாத அந்தணனை நமஸ்கரிக்கலாகாது. அப்படிப் பட்டவன் சூத்திரனுக்கு ஒப்பாவான்; பதிலாசி உரைக்காமலிருப்பாராயின் அவர்களுடைய புண்ணியம் நமஸ்காரம் செய்பவரிடம் சேர்ந்துவிடும்; பாபமும் இவரையணுகும்.

பிராமணர் நமஸ்கரித்த பிறகு பிராமணராகில் அவரைக் குசலமா? என்று கேட்கவேணும். க்ஷத்திரியர்களாகில் அவரை அநாமயமா? என்று கேட்கவேண்டும். வைசியராகில் க்ஷேமமா? என்று கேட்கவேண்டும். சூத்திராகில் அவரை ஆரோக்கியமா? என்று கேட்கவேண்டும். இம்முறையாய் வயதில் பெரிய பிராமணர் மற்றவர்களைக் குறித்துக் கேட்க வேண்டும்.

நமஸ்காரம் செய்தபிறகு வயதினால் மூத்தோராகிய வேதியரைக்கண்டு பிராமணர் ஸ்வஸ்தி (स्वस्ति) என்றும், க்ஷத்திரியர் ஆயுஷ்மான் (आयुष्मान्) என்றும், வைச்யர் வர்த்ததாம் (वर्धताम्) என்றும், சூத்திரர் ஸ்வாகதம் (स्वागतम्) என்றும் கேட்க வேண்டும்.

ஸமித்து, தர்ப்பை, புஷ்பம், நெய், அரிசி முதலியவைகளைக் கையில் வைத்துக்கொண்டிருக்கும் பொழுதும், ஜபம் செய்து கொண்டிருக்கும்பொழுதும், ஹோமம் செய்துகொண்டிருக்கும்பொழுதும் நமஸ்காரம் செய்யக்கூடாது. மிகவும் சக்தியற்றவரையும், ரோகமுடையவர்களையும், எண்ணைத் தலையுடனிருப்பவர்களையும், ஸ்நானம் செய்துகொண்டிருப்ப

வர்களையும், பல் துலக்கிக் கொண்டிருப்பவர்களையும், நாஸ்திகர்களையும், கர்மங்களை விட்டவர்களையும், மகாபாபிகளையும் நமஸ்காரம் செய்யக் கூடாது. அதிக காம முடையவர்களையும், செய்ந்நன்றி மறந்தவர்களையும் நமஸ்கரிக்கக்கூடாது. நடந்து கொண்டிருக்கும் பொழுதும், தூங்கிக் கொண்டிருக்கும் பொழுதும் கொட்டாவி விடும்பொழுதும் நமஸ்கரிக்கக்கூடாது. வஸ்திரம் தரித்துக் கொண்டிருக்கும்பொழுதும், தரித்துக் கொள்ளாமலிருக்கும்பொழுதும் நமஸ்காரம் செய்கிறவன் பதிதனுக்குச் சமமாவான்.

ஆகையால் நான்கு வர்ணத்தாருக்கும் குருவாகிய வேதியர் தகுந்த ஸ்திதியிலிருக்கும்பொழுது வயதில் குறைந்த வேதியரும் மற்ற ஜாதியரனைவரும் அவரை நமஸ்காரம் செய்ய வேண்டும். தாய் தந்தை, மாமன், சிற்றப்பன், மாமனார், யாகம் செய்தவர், வயதினால் மூத்தோர் இவர்களை நமஸ்கரிப்பது சிறப்பை விளைவிக்கும். இதுவே ஸகல வேதங்களின் கருத்து. இதுவே ஸகல சாஸ்திரங்களின் ஸாரம். இதுவே தர்ம வழியாகுமென்றுரைத்தார்.



## 130. பதிவிரதைகளின் தர்ம முரைத்த லீலை.

பதிவிரதம் என்பது கணவன் ஒருவனையே தெய்வமாகக் கருதுதல். இவ்வித விரதத்தை யனுஷ்டிக்கும் மாதரே பதிவிரதைகளென்று புகழப் படுவார்கள். பதிவிரதா ஸ்திரீகள் எப்பொழுதும் தமது மனதில் நன்மைகளையே சிந்தித்து வருவார்கள். பர்த்தாவின் விருப்பம்போல் பணி செய்து பலவகைகளிலும் கணவனை மீறி நடக்காமல் தருமத்தைச்

செய்வார்கள். கணவனைத் தவிர்த்து மற்றொருவரையும் தமது மனதில் கொள்ளார். நிர்மல முகமுடையவர்களாய்க் கோபமற்றவர்களாய், வஞ்சனை யற்றவர்களாய் இருப்பார்கள். காமத்திலும், போகத்திலும், செல்வத்திலும் சுகத்திலும் விசேஷ விருப்பமடையாதவர்களாயும், தமது வீட்டு வேலைகளைச் செய்வதில் ஆயாஸத்தை யடையாதவர்களாயும், கணவனுக்கும் மாமியார் மாமனுர் முதலான குரு ஜனங்களுக்கும் இஷ்டமுள்ள வகைகளையே சமைப்பவர்களாயும், தேவபூஜை, ஹோமகாரியம், அதிதி பூஜை முதலியவைகளில் கணவனது இஷ்டம்போல் நடந்து கொள்ளுகிறவர்களாயும், வேலைக்காரர்களிடத்திலும் தோழிகளிடத்திலும் அன்புவைத்தவர்களாயும், ஏழைகளிடத்தில் தயை யுடையவர்களாயும், கணவனே தெய்வம், கணவனே சுவர்க்கம், கணவனே மோக்ஷம் என்று நினைத்திருக்கிறவர்களாயும் மற்றும் பல நற்குணங்களையும் அடைந்து மிருப்பவர்களே பதிவிரதைகளென்று புகழப்படுவார்கள். வேறு புருஷன் தனிகனுயினும் மன்மதன் போல் அழகுடையவனுயினும் பல நற்குணங்களை யுடையவனுயினும், அவர்களைப் பதிவிரதா மாதர்கள் கண்ணின் நுனியினுலும் காணக் கருதமாட்டார்கள். கணவன் புசிப்பதற்கு முன் எக்காலத்திலும் புசிக்க மாட்டார்கள். கணவனுக்கு விரோதமாய் வெளியூருக்குச் செல்லுதல், தேவாலயத்துக்குச் செல்லுதல், பிறர் மனையில் வசித்தல் முதலியவைகளை எக் காலத்திலும் செய்யார். ஸத்தியத்தையும், ஸ்திரீ தர்மத்தையும் மீறி நடக்கமாட்டார்கள். தாம் செய்துவரும் உபசாரங்களினுலேயே கணவன் மனதைக் களிக்கச் செய்து தமது விருப்பங்களை யடைவார்கள். அதிதிகள் அகாலத்தில் தோன்றியபோதிலும், கோபத்தை யடைய மாட்டார்கள். குடும்பத்துக்குரிய ஆதாயத்தையும் விரயத்தையும் நோக்கி குடும்ப முறைகளை நடத்தி வருவார்கள். கணவன் போலவே மைந்தர்களையும் அன்புடன் காப்பாற்றி வருவார்கள். மோகத்தையும், மனக்கலக்கத்தையும், அஞ்ஞானத்தையும் கணவனது உபதேசத்தினுல் நீக்கிக் கொள்வார்கள். தமது சுற்றத்தாரிடத்திலிருக்கும்

அன்பைக் காட்டிலும் அதிகமான அன்பைக் கணவனைச் சேர்ந்தவர்களின் மீது வைத்து இருப்பார்கள்.

பதிவிரதைகள் வேகமாய் நடக்காமல், துஷ்ட மாதருடன் சேராமல், கணவனை விட்டுக் காரணமின்றிப் பிரியாமல், தென் முகமாய் நின்று கூந்தலை அலங்கரித்துக் கொள்ளாமல், பிறர் வீட்டுக்குச் செல்லாமல் இருக்க வேண்டும். தாஸிகள் இந்திர ஜாலக்காரர், மந்திரவாதிகள், வஞ்சகர், காமிகள், துஷ்டர்கள் இவர்களுடைய கண்மார்க்கத்தில் பதிவிரதைகள் நிற்கலாகாது. துன்பங்களையும், அவமானத்தையும், செல்வஹாநியையும் விளைவிக்கக் கூடிய வழிகளில் செல்லலாகாது. இவ்விதமாய் நற்குணங்களில் நின்று புலன்களின் வேகத்தை யடக்கிவரும் மாதர்களே பதிவிரதைகள் என்று வானோராலும் புகழப் படுவார்கள்.

இப்படிப்பட்ட நற்குணங்களுக்கு இருப்பிடமாயுள்ள கற்புவாய்ந்த மாதர்களும் சாஸ்திரங்களைக் கற்றுத் தர்ம வழியில் நிலைபெற்று இருக்கும் அந்தணர்களும், க்ஷத்திரிய தர்ம முறைப்படி பிரஜைகளைக் காப்பாற்றி வரும் மன்னவர்களும் நிறைந்திருக்கும் பூமியே சுவர்க்கத்துக்குச் சமமாகும். இவைகளே சகல வேத வேதாங்கங்களின் உட்கருத்து என்று தியாகராஜர் உபதேசித்ததைக் கேட்டவரனைவரும் வியப்படைந்து மெய்ம்மறந்து கொஞ்ச காலம் பதுமைகள் போல் இருந்து களித்துப் பரமேசனைப் போற்றி மகிழ்ந்தார்கள்.

தடவரியா தனம் போற்றி கருணை பொழி முகம் போற்றி
 தயங்கோர் பாகம்
மடவரல் மெல்லியல் போற்றி மன்னு
 மிளங்சேய் போற்றி மலர்க்கண் போற்றி
திடவுலக மேத்து கதிர் வாள் போற்றி
 நிறைசெல் வத்தியாகராஜர்
நடவு திருத்தேர் போற்றி நம்மை
 யாட் கொளும் சபா நடனம் போற்றி.



# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

## இரண்டாம் பிரிவு—முதல் பாகம்

### சிறப்புப் பெயர் அகராதி.

